# ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள்

## அருமையான கேள்விகளுக்கு சரியான பதில்கள்



கன்னட மூலத்தில்: வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்

தமிழில்: 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

முன்னுரை

# சமர்ப்பணம்

ஹரிவாயுகுருகளின் பக்தரான உத்தம வைஷ்ணவ தீட்சையுள்ளவரான, அனைவருக்கும் உதவும் பண்பாளர் என்றே பெயர் பெற்ற திரு.C.R.முரளி, CA அவர்கள் இந்தப் புத்தகத்தை பிரசுரிப்பதற்கு தக்க பொருளுதவி செய்துள்ளார். அவரின் தந்தையான திரு.C.S.ரங்கநாதராவ் அவர்களின் உத்தம சத்கதிக்கும் மற்றும் தன் தாயான ஸ்ரீமதி. சரோஜம்மா அவர்களின்

எண்பதாவது ஆண்டின்
'சஹஸ்ர சந்திர தரிசன'

விழாவின்போது, தன் தாயின் சாதனையின் நிறைவுக்காக இந்தப் புத்தகத்தை வெளியிட முன்வந்துள்ளார். திரு C.R.முரளி அவர்களின் தாயான திருமதி சரோஜம்மா அவர்களுக்கு ஸ்ரீஹரிவாயுகுருகளின் பரிபூர்ண அருள் கிடைக்கட்டும் என்று வேண்டுகிறோம்.

***

# என் ஆசை

ஓ இறைவனே !!

எனக்கு ஒரு ஆசை !!

நான் உன் தாசன் என்று சொல்லிக்கொள்ள வேண்டும்.

இதற்காக பல முயற்சிகள் எடுத்தேன். உன்னை மகிழ்விக்க பூக்களை சரம்சரமாக கட்டினேன். துளசி இலைகளை பாத்திரத்தில் நிரப்பிக் கொண்டுவந்தேன். பல மணி நேரங்கள் மந்திரங்களை உச்சரித்தேன். தினமும் நான்கு முறை விளக்கேற்றினேன். உனக்கு விசிறி வீசினேன். பலவகையான சுவையான உணவுகளை படைத்தேன். பல முறை ஆரத்தி சுற்றினேன். நானும் உன்னை சுற்றினேன். ஆனந்தத்தில் குதித்தேன். சலங்கை அணிந்து தாளத்திற்கேற்ப ஆடினேன்.

உன்னை மகிழ்விப்பதற்காக பலரிடம் கேட்டு எனக்குத் தெரிந்ததெல்லாம் செய்தேன். ஆனாலும் நீ மகிழ்வாய் என்னும் நம்பிக்கை எனக்கு இல்லவே இல்லை. ஏனென்றால் நீ எதற்கும் அடிபணிபவனல்லன்.

ஆனால், வறியவர்களான விதுரன் மற்றும் குசேலனுடன் நீ விளையாடியதைப் பார்த்து, இந்த வறியவனின் ஆசையும் சிலசமயம் வளர்கிறது. இந்த சம்சாரத்தில் மூழ்கி, மனைவி மக்கள் மேல் ஆசைவைத்து, நன்றாக தின்று வாழ்ந்து கொண்டிருக்கும் நானெங்கே? பக்தியின் உச்சத்தில் அனைத்தையும் உனக்கு சமர்ப்பணம் செய்த அந்த பக்தர்கள் எங்கே? நீ அவர்களின் நடுவில் இருப்பாயே தவிர, என் முன் வந்து நிற்பதற்கு உனக்கு மனது இல்லையே? எனக்கும் அவர்களுக்கும் இருக்கும் வித்தியாசத்தைப் பார்த்தால், என்னை யாருமே கண்டுகொள்ள மாட்டார்கள் என்பதே என் கவலை.

இன்னொரு கடைசி முயற்சி. இதற்கு உன் அருள் முழுமையாக எனக்கு வேண்டும். அப்போது நீ எனக்கு தரிசனம் தருவாய் என்பது என் உள்மனது ஆசை. எனக்கு அறிஞர்கள் சென்ற வழியைக் காட்டு.

உன்னை வந்து சேர்வதற்கு மூன்று படிநிலைகள் உள்ளன. நாமசிந்தனை, ரூபசிந்தனை மற்றும் க்ரியாசிந்தனை. இவற்றின் மூலம் உன்னிடம் வந்தால் நீ தரிசனம் தருவாயாம்.

நாமஸ்மரணையானது கடினம் இல்லையென்றாலும், ரூபஸ்மரணை, க்ரியாஸ்மரணைகள் கண்டிப்பாக கடினமானவையே. அதற்காக உன் ரூபங்கள், அவதாரங்கள் எப்போதும் நம் மனதில் இருக்கவேண்டும். அதற்காகவே இது ஒரு சிறிய முயற்சி. அப்படியாவது நீ இந்த சிறிய பக்தனை காப்பாற்றாமல் இருக்கமாட்டாய். எதற்கும் கட்டுப்படாத நீ பக்தனுக்கு கட்டுப்படாமல் இருக்கமாட்டாய். அந்த பக்தியை எனக்குக் கொடுத்து, இந்த சிறியவன் மேல் உன் கருணைப் பார்வையை வீசு. இதுவே என் ஆசை.

# இந்தப் புத்தகத்தைப் பற்றி

ஸ்ரீஹரியின் அவதாரங்கள் எவ்வளவு?

ஒன்று?... நான்கு?... பத்து?... இருபத்தி நான்கு?... நாற்பது?... நூறு?... ஆயிரம்?...

அவற்றை எண்ணி முடிப்பதற்கு சாத்தியமே இல்லை. முன்னர் ஒருமுறை வைவஸ்வதன் இதற்காக முயன்றான். தன் கமண்டலத்திலேயே மீனை காப்பாற்றுவேன் என்றான். ஆனால் அந்த மீன் வளர்ந்துகொண்டே போனது. அதைப்போலவே இந்த அவதாரங்களும். இந்த சனாதன தர்மத்தில் இன்றுவரை ஸ்ரீஹரியின் அவதாரங்களை எண்ணி முடித்தவர்கள் யாருமில்லை. அப்படி ஒருவரை பார்ப்பதும் சாத்தியம் இல்லை.

இதை நான் துவக்கிவைத்து ஸ்ரீஹரியின் அவதாரங்களை எண்ணுகிறேன் என்று யாராவது கர்வத்துடன் கிளம்பினால் 'கடலில் இருக்கும் நீர்த்துளிகளை எண்ணி முடிக்கிறேன்' என்று கிளம்பியதைப்போல் இதுவும் ஒரு முடியாத செயலே ஆகும்.

'ஸ்ரீஹரியின் 40 புத்தகங்கள்' என்ற இந்த புத்தகத்தின் தலைப்பைப் பார்த்து, ஸ்ரீஹரி வெறும் 40 அவதாரங்களே எடுத்திருக்கிறார் என்று எண்ணக்கூடாது. பரந்த பால்வெளியில் எண்ணிலடங்கா நட்சத்திரங்கள் உள்ளன. அவற்றை ஆராய்ந்து நாற்பது நட்சத்திரங்களை தேர்ந்தெடுத்து கட்டுரையாக்கிய சிறிய முயற்சியே இந்த புத்தகம். ஸ்ரீஹரியின் அவதாரங்களை எண்ணி முடிப்பது சாத்தியமில்லை. அவரின் ஒவ்வொரு அவதாரங்களின் மகிமைகளையும் எண்ணி முடிப்பது சாத்தியமில்லை. ஆனாலும் ஸ்ரீஹரி என்னும் பால்வெளியை அறிய இப்புத்தகம் ஒரு தூண்டுகோலாக இருக்கும்.

பாகவதம் முதலான புராணங்களில் என் கண்ணில்பட்ட அவதாரங்கள் இந்தப் புத்தகத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. ஆனால், 40 அவதாரங்களைப் பற்றி மூலகிரந்தங்களில் கண்டவற்றை முழுமையாக சேகரிப்பதற்கும் சாத்தியமில்லை. புகழ்பெற்ற அவதாரங்களைப் பற்றி அனைத்து தகவல்களும் இந்தப் புத்தகத்தில் கிடைக்காது. ஆனால் வெளியில் கேள்விப்படாத சில அவதாரங்களைப் பற்றி இந்தப் புத்தகத்தில் படிக்கலாம். ஸ்ரீஹரியின் அவதாரங்களைப் பற்றி தெரியவேண்டுமென்றால், வியாசரின் வாக்கியங்களிலேயே அவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகையால், மூலகிரந்தங்களிலிருந்து ஸ்ரீஹரியை தெரிந்து கொள்வதற்கு இது ஒரு சிறிய வழிகாட்டி மட்டுமே. அவதாரங்களைப் பற்றி வரும் கேள்விகளுக்கு பதில்களை தெரிந்துகொண்டால், பின்னர் இன்னும் அதிக விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கு சாத்தியம் ஆகும் என்னும் நோக்கத்துடன், கேள்வி-பதில் வடிவத்தில் ஸ்ரீஹரியின் 40 அவதாரங்களைப் பற்றி இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

மிகவும் யோசித்து, கேள்வி பதில்கள் தயாரிக்கப்பட்டுள்ளன. அறிஞர்களையும் கலந்தாலோசித்தே இவை தொகுக்கப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாமல், இந்த கட்டுரைகள் முன்னர் ரங்கவிட்டல - கன்னட பத்திரிக்கையில் வந்துகொண்டிருந்ததால், அப்போது பற்பல சாதகர்கள் இதைப் படித்திருகிறார்கள். அப்படியிருந்தும், இவற்றில் ஏதேனும் தவறு இருந்தால், படிப்பவர்கள் மன்னித்து, அந்த தவற்றினை எங்களுக்கு தெரியப்படுத்தவேண்டும். அடுத்த பதிப்பினில் அவற்றை திருத்தி வெளியிட அது ஒரு நல்ல வாய்ப்பாக இருக்கும்.

இன்றைய வாழ்க்கையில் யாருக்கும் எதற்கும் நேரமே இருப்பதில்லை. ஸ்ரீஹரியைப் பற்றி தெரிந்து கொள்வதற்கு சாத்தியமே இல்லை. ஆனாலும் சிலருக்கு அதில் ஆர்வம் இருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்கே இந்த புத்தகம். ஒரு கட்டுரையைப் போல இந்தப் புத்தகத்தை எழுத முற்பட்டபோது, தாம் நினைப்பதை முழுவதுமாக அக்கட்டுரையில் சிலருக்கு சொல்ல முடியாமல் போகலாம். கேள்வி-பதில் வடிவத்தில் எழுதலாம் என்று சிலருக்கு ஆசையிருக்கலாம். மொத்தமாக தெரிந்து கொள்ளாமல், சுருக்கமாக எதையும் தெரிந்து கொள்வோம் என்ற ஆசையும் சிலருக்கு இருக்கலாம். தங்களின் சந்தேகங்களை மட்டும் தீர்த்துக்கொள்ளும் நோக்கம் சிலருக்கு இருக்கலாம். இருக்கும் எல்லா ஸ்ரீஹரியின் அவதாரங்களைப் பற்றியும் ஒரு பறவைப்

பார்வையாக படிக்கும் ஆசையும் சிலருக்கு இருக்கலாம். மேற்சொன்ன இந்த அனைத்து வகை வாசகர்களுக்காகவுமே இந்த புத்தகம் எழுதப்பட்டுள்ளது.

# நன்றிகள்

ரங்கவிட்டல பத்திரிக்கைக்காக மூன்று வருடங்களில் எழுதப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பே இந்த புத்தகம். இந்தப் புத்தகத்தை எழுத உதவிய பாகவதாதி புராணங்களுக்கு, பற்பல தாசசாகித்ய புத்தகங்களுக்கு, பன்னஞ்சே கோவிந்தாசார்யரின் உபன்யாசங்களுக்கு, இன்னும் பல அறிஞர்களின் வழிகாட்டுதல்களுக்கு என் மனமார்ந்த நன்றிகள்.

என்னை விரும்புவதைப்போல், எனது புத்தகங்களையும் மிகவும் விரும்பும் ஸ்ரீபாதராஜ மடத்தின் திவான் பூஜ்யஸ்ரீ லட்சுமிநாராயணாசார்யரின் உதவி என்றைக்கும் மறக்கமுடியாதது. நான் எதை எழுத நினைக்கிறோனோ, அதை எழுதும் முன்னரே 'மிக நன்று' என்று பாராட்டும் அவரது உற்சாகத்தையும், உதவியையும் சொற்களில் வடிப்பது சாத்தியமில்லை. இவருக்கு மிகுந்த நன்றி.

இதில் உள்ள அனைத்து கட்டுரைகளையும் சரியான நேரத்தில் என்னை எழுதுமாறு உற்சாகமூட்டி எழுதவைத்த பிரவீண்குமார் ஜோஷி அவர்களின் உதவிகளை என்றைக்கும் மறக்கமுடியாது.

ஒரு நாள் திரு.C.R.முரளி அவர்களின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அங்கு ஒரு ஞானகார்யம் நடந்து கொண்டிருந்தது. ஸ்வாமிகள் ஒருவர் அதற்கு தலைமை வகித்திருந்தார். எதேச்சையாக அங்கு வந்த என்னையும் ஒரு ஐந்து நிமிடம் பேசுமாறு கட்டாயப்படுத்தினர். திடீரென்று கேட்டால் என்ன பேசுவது என்று ஒரு நிமிடம் திகைத்தேன். அப்போது - 'ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள்' என்னும் புத்தகம் அச்சாகவேண்டியிருந்தது. இதைப் பற்றி விவரித்து, இந்தப் புத்தகத்தை அச்சிடுவதைப் பற்றி திரு.முரளியிடம் சொல்லிவிடலாம் - என்று எனக்குத் தோன்றியது. அந்த சபையில் இதைப் பற்றி பேசினேன். திரு.முரளி அவர்கள் ஒரே நொடியில் - இந்த அருமையான புத்தகம் கண்டிப்பாக அச்சாக வேண்டும். அதற்கான மொத்த செலவையும் நானே ஏற்கிறேன் - என்று தெரிவித்தார். இவரின் இந்த பரந்த மனப்பான்மையைக் கண்டு அனைவரும் மகிழ்ந்தனர். அவரின் தாயின் 80வது ஆண்டு நிறைவையொட்டி, இந்தப் புத்தகத்தை ஸ்ரீஹரிவாயுகுருகளுக்கு சமர்ப்பணம் செய்தார். இவருக்கு எவ்வளவு நன்றி கூறினாலும் போதாது.

இந்தப் புத்தகத்தை முழுமையாகப் படித்து, தவறுகளைத் திருத்திய அறிஞர்களுக்கும், கற்றறிந்தவர்களுக்கும், என் மனதுக்கினிய நண்பர்களுக்கும், மற்ற அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

அச்சுக்கோர்ப்பில் மிகவும் உதவிய S. நாகலதா மற்றும் K. கிரி அவர்களுக்கு பல நன்றிகள். உதவிய பல நல்ல உள்ளங்களுக்கு என் மனமார்ந்த நன்றிகள்.

## வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்

***

## மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு

முதன்முதலில் இந்தப் புத்தகத்தைப் படித்ததும், சட்டென்று பிடித்தது அதன் கேள்வி-பதில் வடிவம்தான். ஒரு தொடர்ச்சியான கட்டுரைகளின் தொகுப்பாக இல்லாமல், ஒவ்வொரு ஸ்ரீஹரியின் அவதாரங்களுக்கும், ஒருவர் கேள்வி கேட்பது போலவும், அதற்கு மற்றொருவர் பதில் அளிப்பது போலவும் அமைந்தது ஒரு நல்ல வடிவமாக எனக்குப்பட்டது. உடனடியாக திரு. வெங்கடேஷாச்சாருக்கு தொலைப்பேசி, அவருக்கு இந்தப் புத்தகத்திற்கு நன்றி தெரிவித்து, தொடர்ந்து வாசிக்கலானேன்.

பிறகு இதை தமிழில் மொழிபெயர்க்கலாம் என்று தோன்றியதை அவரிடம் தெரிவித்தவுடன், உடனடியாக அதை செய்யுமாறும், இணையத்தில் பதிவேற்றி முடித்தபிறகு தமிழில் புத்தகமாகவும் கொண்டு வரலாம் என்றும் ஊக்கமளித்தார். இதைத் தொடர்ந்து அவரது அனைத்து புத்தகங்களையும் என்னை தமிழில் மொழிபெயர்க்கச் சொன்ன அவருக்கு மிகுந்த நன்றிகள் உரித்தாகுகின்றன.

ஹரிவாயுகுருகளின் ஆசியோடு இதை மொழிபெயர்க்கத் துவங்கி, ஒரு நாளுக்கு ஒரு அவதாரம் என்று இணையத்தில் வெளியிட்டோம். எனது குரு மறைந்த Bushya திரு. பத்பனாபாச்சார் அவர்களுக்கு இந்த நேரத்தில் நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். தற்போது என்னை நல்வழிப்படுத்த முயன்றுவரும் குரு ‘ஜாம்பவதிப்ரியவிட்டலா’ திரு. ஹரதி பிரகலாதாச்சாருக்கும் என் வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

கன்னடம் தெரியாத, தமிழ் அறிந்த மாத்வர்களுக்காக மொழிபெயர்க்கப்பட்ட இந்தப் புத்தகத்தை அனைவரும் படித்து பயன்பெறுமாறு கேட்டுக்கொள்கிறேன். இணையத்தில் படித்து இதுவரை கருத்து தெரிவித்தவர்களுக்கு நன்றிகள். தற்போது ஈ-புத்தக வடிவிலும் இதை படித்து ஏதேனும் குறைகள், தவறுகள் இருப்பின் தயவுசெய்து அதை எமக்குத் தெரியப்படுத்துமாறு கேட்டுக்கொள்கிறேன்.

நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

’ ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன். செல்பேசி எண் : 89044 58276

# 1. மத்ஸ்யாவதாரம்

**கேள்வி: ஸ்ரீஹரியின் தசாவதாரங்களை சிந்தித்து, அந்த சிந்தனையை அவனுக்கே சமர்ப்பிப்பது நம் அனைவரின் கடமை. இந்த அவதாரங்களைப் பற்றி சிந்திப்பதால் நமக்கு என்ன லாபம்?**

பதில்: 'அவதாரான் ஹரேர்ஞாத்வா' என்று ஸ்ரீமதாசார்யார் சொல்வதுபோல், மோட்சமே நமக்குக் கிடைக்கும் பலன். ஸ்ரீஹரியின் அவதாரங்களைப் பற்றிய ஞானம் இல்லையென்றால், மோட்சம் கிடைப்பதற்கு சாத்தியமே இல்லை. 'ஜன்மகர்ம ச மே திவ்யம்' ஸ்ரீகிருஷ்ணனும், தன் அவதாரங்களைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்.

**கே: இறைவன் (ஸ்ரீஹரி) என்றால் யார்? அவரின் லட்சணங்கள் என்னென்ன?**

ப: 'அதோசேஷ குணோன்னத்தம் நிர்தோஷம் யாவதேவ ஹி தாவதேவஸ்வயோ நாம' - தோஷங்கள் எதுவும் இல்லாதவர், ஆறு நற்குணங்களுடன் கூடியவராக இருப்பவர். அவரே இறைவன் (ஸ்ரீஹரி) என்று ஸ்ரீமதாசார்யார் கூறுகிறார்.

**கே: ஸ்ரீஹரியின் முதல் அவதாரம் எது?**

ப: மூலரூபியான ஸ்ரீமன் நாராயணனிடமிருந்து புருஷன் அவதரித்தார்.

**கே: அப்படியா? நாராயண ரூபத்தைவிட மத்ஸ்ய அவதாரம் முதலாவது இல்லையா?**

ப: இப்படி நினைப்பது தவறு. மூலரூபியான ஸ்ரீமன் நாராயணனிடமிருந்து புருஷ ரூபமே முதலில் தோன்றியது என்று ஸ்ரீமத் பாகவதத்தில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், மத்ஸ்ய அவதாரம் முதலாவது அவதாரமே அல்ல. அது இந்த மன்வந்திரத்தின் துவக்கத்தில் வந்த அவதாரம். அவ்வளவே. தசாவதாரங்களைச் சொல்லும்போது 'மத்ஸ்ய' அவதாரம் முதலாவது என்று சொல்வது வழக்கத்தில் உள்ளது.

**கே: அப்படியென்றால், மத்ஸ்ய அவதாரத்திற்கு முன்னர் தோன்றிய அவதாரங்கள் யாவை?**

ப: ஹயக்ரீவ, சனத்குமார - ஆகிய பல அவதாரங்களை ஸ்ரீஹரி எடுத்திருக்கிறார். தசாவதாரங்களில் வரும் வராக, நரசிம்ம, வாமன, கூர்ம இந்த வரிசையில் அவதாரங்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் பிறகு 'மத்ஸ்யாவதாரம்' தோன்றியது என்று புராணங்களின் ஆதாரத்தில் சொல்லலாம்.

**கே: இந்த எல்லா அவதாரங்களும் மூலரூபியான நாராயணனிடமிருந்து தோன்றியவைதானே?**

ப: கண்டிப்பாக இல்லை. மூலரூபியான நாராயணனிடமிருந்து துவக்கத்தில் புருஷ ரூபம் மட்டுமே தோன்றியது. அந்த புருஷ ரூபத்திலிருந்து இந்த எல்லா அவதாரங்களும் தோன்றியுள்ளன.

**கே: மொத்தம் ஸ்ரீஹரியின் அவதாரங்கள் எத்தனை? அவரது ரூபங்கள் எத்தனை?**

ப: ஸ்ரீஹரியின் நாமங்களுக்கு, அவதாரங்களுக்கு, ரூபங்களுக்கு எண்ணிக்கையே இல்லை. ஸ்ரீமத் பாகவதத்தில் சுமார் 40 அவதாரங்களின் கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றைத் தவிர வேறு அவதாரங்களின் வரலாறு கிடைப்பது கடினம். ஆனால், தாச சாஹித்யத்தில் இன்னும் பல அவதாரங்களைப் பற்றிய தகவல்கள் உள்ளன. நம் உடலிலேயே ஸ்ரீஹரியானவன் வெவ்வேறு பெயர்களில் ஒரு கோடிக்கும் அதிகமான ரூபங்களில் வசிக்கிறான்.

**கே: அனைவரைவிடவும் ஆற்றல் / திறமையுடைய ஸ்ரீஹரி, மீன் ரூபம் மற்றும் பல விலங்குகளின் ரூபங்களை / அவதாரங்களை ஏன் எடுத்தார்?**

ப: ஸ்ரீஹரி இந்த உலகத்தை நேசிப்பவர். தான் உருவாக்கிய அனைத்து பொருட்களையும் விரும்புபவர். நீரில் வசிக்கும் விலங்காக இருந்தாலும், அதற்கும் ஒரு முக்கியத்துவம் கொடுக்கவேண்டி இந்த அவதாரம் எடுத்திருக்கலாம் என்று எண்ணலாம்.

**கே: மத்ஸ்யாவதாரம் எப்போது எப்படி நடந்தது?**

ப: முந்தின சாக்ஷுச மன்வந்திரத்தின் முடிவில், வைவஸ்வது மனு நதிக்கரையில் அர்க்யம் விட்டுக் கொண்டிருந்தபோது, தன் பாத்திரத்தில் ஒரு சிறிய மீனைக் கண்டான். அதுவே மத்ஸ்யாவதாரம். வைவஸ்வத மனுவிற்கு தத்வோபதேசத்தை உபதேசித்து, அடுத்த மன்வந்தரத்தை துவக்குவதற்காக மத்ஸ்யாவதாரம் நடந்தது.

**கே: இந்த வைவஸ்வத மன்வந்தரத்திற்கு காரணமானதால், மத்ஸ்யனை தசாவதாரத்தில் முதலாவதாக சொல்லப்பட்டிருக்குமோ?**

ப: இதற்கு எங்கும் சான்றோ / மறுப்போ இல்லை. ஆகவே, அப்படியே சொல்லலாம்.

**கே: தன் பாத்திரத்தில் மத்ஸ்ய ரூபியான நாராயணனைக் கண்ட வைவஸ்வத மனு என்ன செய்தார்?**

ப: அந்த சிறிய மீனானது, வைவஸ்வத மனுவினை நோக்கி, தன்னை காப்பாற்றுமாறு வேண்டியது. ஆகவே, தன் கமண்டலத்தில் அந்த மீனை எடுத்துக் காப்பாற்றினார். ஒரே இரவில் அந்த மீன், கமண்டலத்தில் கொள்ளாதவாறு பெரிதாக வளர்ந்தது. ஆகவே ஒரு பெரிய பாத்திரத்தில் விடவும், அங்கும் அது மிகப் பெரியதாக வளர்ந்தது. ஆகவே அந்த மீனை எடுத்து, ஒரு ஏரியில் விடவும், 100 யோஜன அளவிற்கு அது பெரியதாக வளர்ந்தது.

**கே: வைவஸ்வத மனுவிற்கு, அந்த மீன், சாட்சாத் ஸ்ரீமன் நாராயணனே என்று தோன்றவில்லையா?**

ப: 100 யோஜன அளவிற்கு அந்த மீன் வளரும்வரை, அது நாராயணனே என்று வைவஸ்வத மனுவிற்கு தோன்றவில்லை. பிறகு ஸ்ரீமன் நாராயணனே தன்னை காப்பாற்ற மத்ஸ்ய ரூபத்தில் வந்திருக்கிறார் என்று அவருக்கு தோன்றியது. அதன் பிறகே ஸ்ரீஹரியை பல்வேறு ஸ்தோத்திரங்களைச் சொல்லி, தன்னைக் காக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்கிறார்.

**கே: வைவஸ்வத மனுவிடம் ஸ்ரீஹரி என்ன கூறினார்?**

ப: இன்றிலிருந்து ஏழாவது நாள், சாக்ஷுச மன்வந்தரத்தின் பிரளயம் ஏற்படும். அந்த சமயத்தில் உனக்கு நான் தத்வோபதேசம் செய்கிறேன் என்று கூறினார்.

**கே: மன்வந்தர பிரளயம் என்றால் என்ன?**

ப: சாஸ்திரங்களில் 4 விதமான பிரளயங்களை சொல்கின்றனர்.

1. நித்ய பிரளயம்
2. நைமித்திக பிரளயம்
3. ப்ரக்ருதி பிரளயம்
4. அத்யந்திக பிரளயம்

(பாகவதம் 12-4-38).

இவற்றினை மகாபிரளயம், தினபிரளயம், மன்வந்திர பிரளயம் என்றும் சொல்லலாம். மகாபிரளயத்தில் பிரம்ம லோகத்திலிருந்து துவங்கி அனைத்து உலகமும் நாசமாகும். தின பிரளயத்தில் பூர்லோகம், புவர்லோகம், சுவர்லோகங்கள் மட்டும் நாசமாகும். மன்வந்தர பிரளயத்தில், கடல் நீரானது நிலத்தில் பாய்ந்து, வசிக்கும் மக்கள் / பிராணிகள் மட்டும் நாசமாகும். பிறகு மறுபடி முதலிலிருந்து மக்கள் பிறப்பு / தோன்றுதல் நடக்கும். இதுவே மன்வந்தர பிரளயம் ஆகும்.

**கே: மன்வந்தர பிரளயம் எவ்வளவு காலம் நடந்தது? அந்த சமயத்தில் மத்ஸ்ய ரூபி ஸ்ரீஹரி என்ன செய்தார்?**

ப: நான்கு யுகங்களும் 71 முறை துவங்கி முடிந்தபிறகு மன்வந்தர பிரளயம் நடைபெறுகிறது. மனிதனின் ஆயுள் கணக்கில் பிரளயகாலம் 1500 ஆண்டுகள். இப்படியாக சாக்ஷுச மன்வந்தரம் முடியும்போது, வைவஸ்வத மனுவிற்கு மத்ஸ்ய ரூபியான நாராயணன் தத்வோபதேசம் செய்தார்.

**கே: பிரளய காலத்தில் பூமியில் யாருமே இருக்கமாட்டார்கள் எனும்போது, வைவஸ்வத மனு மட்டும் எப்படி இருந்தார்? அவருக்கு தத்வோபதேசம் எப்படி நடந்தது?**

ப: சாக்ஷுச மன்வந்தரத்தின் முடிவில் வைவஸ்வத மனு மட்டும் இருக்குமாறு ஸ்ரீஹரி கருணை புரிந்திருந்தார். ஸ்ரீஹரியின் ஆணையின்படி, முந்தைய சிருஷ்டிக்குத் தேவையான விதைகள், தாவரங்கள் ஆகியவற்றை ஒரு பெரிய படகில் சேகரித்து, வைவஸ்வத மனு தயாராக வைத்திருந்தார். பிரளயம் துவங்கியபோது, சூறாவளில் தத்தளித்த அந்த படகினை, ஒரு பாம்பைக் கொண்டு மீனின் கொம்பில் மாட்டினார். பிறகு 1500 ஆண்டுகள் அந்த படகில் இருந்து, மத்ஸ்ய ரூபியான ஸ்ரீஹரியிடம் தத்வோபதேசத்தைக் கேட்டார். வைவஸ்வத மனுவிற்கு செய்த தத்வோபதேசமே 'மத்ஸ்ய புராணம்' என்று பெயர்பெற்றதாகும்.

**கே: மத்ஸ்ய புராணம் பற்றி மேலும் சொல்லுங்களேன்?**

ப: 18 புராணங்களில் மத்ஸ்ய புராணமே மிகப்பெரியது என்று பெயர் பெற்றது. ஆனால், இதில் இருப்பது 10,000 ஸ்லோகங்கள் மட்டுமே. வைவஸ்வத மனுவிற்கு சாட்சாத் மத்ஸ்ய ரூபியான ஸ்ரீமன் நாராயணன் தத்வோபதேசத்தை அளித்தார். அதுமட்டுமல்லாமல், சந்திர வம்சத்தைப் பற்றிய தகவல்களும் இந்த புராணத்தில் காணப்படுகின்றன.

**கே: ஹயக்ரீவாசுரனை கொல்வதற்காகவே தினபிரளயத்தின் இறுதியில் மத்ஸ்யாவதாரம் நடந்தது என்று பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நீங்கள் எந்த ஆதாரத்தில் மேற்கண்ட வேறு மாதிரியான கதையை சொல்கிறீர்கள்?**

ப: மத்ஸ்ய புராணத்தின் ஆதாரத்தின்படியே மேற்கண்ட கதையை சொல்லியிருக்கிறேன். தினபிரளயத்தின் முடிவில் மத்ஸ்யாவதாரம் நடந்திருக்கிறது என்ற தகவல் பாகவதத்தில் இல்லவே இல்லை. 'ஆஸீததீத கல்பாந்தே ப்ராம்ஹோ நைமித்திகோ லய:' என்னும் பாகவத வாக்கியத்திற்கு தினபிரளயம் என்று பொருள் கொள்ளலாகாது.

**கே: மிகவும் உன்னதமான பாகவதத்திற்கு, வேறு விதமான (எதிர்ப்பதமான) பொருள் கொள்ள என்ன அவசியமாகிறது?**

ப: 'அதீத கல்பாந்தே' என்னும் சொற்களுக்கு தினபிரளயத்தின் முடிவில் என்னும் எதிர்ப்பதமான பொருளைச் சொன்னது நீங்கள்தான், நான் அல்ல. பாகவதத்தின்

8வது ஸ்கந்தத்தில் மிகவும் தெளிவாக, சாக்ஷுச மன்வந்தரத்தின் முடிவில் இந்த அவதாரம் நடந்திருக்கிறது என்றும், வைவஸ்வத மன்வந்தரத்தின் ஸ்ருஷ்டிக்காக இந்த மத்ஸ்யாவதாரம் நடந்திருக்கிறது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: பாகவதத்தில் சொல்லப்பட்டிருப்பதற்கும், மத்ஸ்ய புராணத்தில் சொல்லப்பட்டிருப்பதற்கும் உள்ள வித்தியாசத்தை எப்படி சரிசெய்வது? மேலும், பாகவதத்திலேயே வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதங்களாக சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை எப்படி சரிசெய்து புரிந்து கொள்வது?**

ப: இந்த விஷயத்தை மேலும் விளக்குகிறேன். 'ஆஸீததீத கல்பாந்தே ப்ராம்ஹோ நைமித்திகோ லய:' என்னும் பாகவத வாக்கியத்தில் இருக்கும் 'கல்பாந்தே' என்னும் சொல்லிற்கு சாக்ஷுச மன்வந்தரத்தின் முடிவில் என்று பொருள் கொள்ளலாம். சாக்ஷுச மன்வந்தரம் கூட பிரம்ம கல்பத்தைச் சேர்ந்ததுதான்.

**கே: பிரம்ம தேவருக்கு தூக்கம் வந்தபோது, ஹயக்ரீவ அசுரன் வேதங்களை அபகரித்துக் கொண்டு ஓடினான் என்று சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா?**

ப: சாக்ஷுச மன்வந்தரத்தின் முடிவில் பிரம்ம தேவருக்கு தூக்கம் வருவதற்கு சாத்தியமே இல்லை. தினபிரளயத்தின் முடிவில் என்று பொருள் கொண்டால், அப்போது யாரும் பிழைத்திருக்கவே இல்லை. அப்படியிருக்கும்போது, ஹயக்ரீவ அசுரன் வருவதற்கு சாத்தியமே இல்லை.

**கே: வராகாவதாரம் இரண்டு முறை நடைபெற்றிருக்கும்போது, மத்ஸ்யாவதாரமும் இரண்டு முறை ஏன் நடைபெற்றிருக்கக் கூடாது?**

ப: வராகாவதாரம் இரண்டு முறை நடைபெற்றிருக்கிறது என்பதற்கு எங்கும் தெளிவான ஆதாரம் இல்லை. மத்ஸ்யாவதாரத்திற்கும் அப்படியே. தினபிரளயத்தின் துவக்கத்தில் ஹயக்ரீவாசுரனை கொல்வதற்காக ஒரு முறை மத்ஸ்யாவதாரம் நடந்திருக்கிறது என்றும் பிறகு சாக்ஷுச மன்வந்தரத்தின் முடிவில் மறுபடி மத்ஸ்யாவதாரம் நடந்திருக்கிறது என்பதை பாகவத எட்டாவது ஸ்கந்தத்தின் வாக்கியங்களின்படி சொல்ல முடியாது. மத்ஸ்ய புராணத்திலோ, பாகவதத்திலோ தினபிரளயத்தின் முடிவில் மத்ஸ்யாவதாரம் நடந்திருக்கிறது என்று சொல்லவேயில்லை.

**கே: மத்ஸ்யாவதாரத்தைப் பற்றி பிரச்னையில்லாத விஷயங்களைக் கூறவும்.**

ப: வைவஸ்வத மனுவிற்கு தத்வோபதேசம் செய்வதற்கும், ஹயக்ரீவாசுரனைக் கொன்று வேதங்களைக் காப்பாற்றுவதற்குமே மத்ஸ்யாவதாரம் நடைபெற்றிருக்கிறது. இந்த விஷயத்தில் எந்தவித பிரச்னையும் இல்லை.

**கே: மத்ஸ்யாவதாரத்தைப் பற்றி எங்கெங்கு சொல்லப்பட்டிருக்கின்றன?**

ப: மத்ஸ்ய புராணம், மகாபாரதத்தில் வனபர்வம், பாகவதத்தின் எட்டாம் மற்றும் இரண்டாம் ஸ்கந்தம் ஆகிய இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. தசாவதாரத்தின் மேல் பல ஸ்தோத்திரங்கள், பாடல்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. தாச சாகியத்திலும் சொல்லப்பட்டுள்ளது.

**கே: மத்ஸ்யாவதாரத்தை பூஜிக்கும் வழிமுறை என்ன?**

ப: படத்தை வைத்து பூஜிக்கும் வழிமுறை இல்லை. ஆனால், மத்ஸ்ய சாலிக்ராமம் மிகவும் அரிதானது. மத்ஸ்ய சாலிக்ராமத்தை பூஜிப்பதால் சிறந்த செல்வம் மற்றும் கல்வியை பெறலாம். வால் பகுதியில் ஒரு சக்கரம், வாய் பகுதியில் இரு சக்கரங்கள், கண்களைப் போல் நீளமாக இருந்தால், அதனை 'மத்ஸ்ய சாலிகிராமம்' என்று அழைக்கின்றனர்.

***

## 2. கூர்மாவதாரம்

**கேள்வி: தசாவதாரத்தில் மத்ஸ்ய அவதாரத்திற்குப் பிறகு என்ன அவதாரம்?**

பதில்: கூர்மாவதாரம்

**கே: கூர்மம் என்றால் என்ன?**

ப: ஆமை

**கே: கூர்ம ரூபத்தின் சிறப்பு என்ன?**

ப: ஆமையின் ஓடு மிகவும் கடினமாகவும், தட்டையாகவும் இருக்கும். மிகவும் எடையுள்ள மந்தர மலையைத் தூக்குவதற்கு, ஸ்ரீஹரி கூர்மாவதாரத்தை எடுத்தார். வேலைக்கு ஏற்ற அவதாரம் என்று தெரியப்படுத்தினார்.

**கே: மந்தர மலையைத் தூக்குவதற்கு ஸ்ரீஹரியே வரவேண்டுமா?**

ப: மந்தர மலை சாதாரணமானது அல்ல. நூறு யோஜனை அகலம், நூறு யோஜனை உயரமும் கொண்ட மலை அது. ஆகவே இந்த மலையைத் தூக்குவதற்கு வேறு யாராலும் சாத்தியம் இல்லை.

**கே: ஒரு யோஜனை என்றால் எவ்வளவு?**

ப: ஒரு யோஜனை என்றால் 14 கிலோமீட்டர்கள். 100 யோஜனை என்றால் 1400 கிமீ.

**கே: 100 யோஜனை அகலமான மந்தர மலை, கூர்மனின் மேல் இருக்கும்போது (சுற்றிக்கொண்டிருக்கும்போது) ஸ்ரீஹரிக்கு கஷ்டமாக இருக்கவில்லையா?**

ப: நம் முதுகின் மேல் மெதுவாக கைகளால் தடவிக் கொடுத்தால் நமக்கு சுகமாக இருப்பதைப் போல, ஸ்ரீஹரிக்கு அவர் மேல் மந்தர மலை சுற்றிக்கொண்டிருக்கும்போது மகிழ்ச்சியாக இருக்கும் என்று ஸ்ரீமத் பாகவதம் சொல்கிறது.

**கே: பாற்கடல் கடைந்த இடம் தற்போதைய மங்கோலியா நாடு என்று சொல்கிறார்களே, இது சரியான தகவலா?**

ப: மங்கோலியாவில் தற்போது இருக்கும் பாலைவனமே அந்த காலத்தில் பாற்கடலாக இருந்தது என சிலர் தவறான தகவல்களைப் பரப்புகின்றனர். ஆனால் பூமியின் மேல் இருந்த பாற்கடலை கடைந்தார்கள் என்பதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை. மேலும் மந்தர மலையும் பூமியின் மேல், நம் கண்களால் காணக்கூடியதாக இருந்திருக்கவில்லை. மேரு மலையைப் போல, மந்தர மலையும் நம் கண்ணிற்கு தெரியாது. ஏழு கடல்களில் பாற்கடலானது ஆறாவது ஆகும். அதனையே கடைந்தார்கள் எனத் தெரிந்து கொள்ளவேண்டும்.

**கே: ஸ்ரீஹரி கூர்மாவதாரத்தை ஏன் எடுத்தார்?**

ப: அமிர்தத்தை எடுப்பதற்காக தேவர்கள் பாற்கடலை கடைந்தனர். மந்தர மலையை மத்தாக பயன்படுத்தி, அசுரர்களுடன் சேர்ந்து தேவர்கள் பாற்கடலை கடைந்தபோது, மிகுந்த எடையுடைய மலை, கடலில் மூழ்கத் தொடங்கியது. அப்போது வேறு வழி எதுவும் தோன்றாமல், பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீஹரியிடம் சரணடைந்தனர். அவர்களின் பிரார்த்தனைக்கு செவிசாய்த்த ஸ்ரீஹரி 'கூர்ம' என்னும் ரூபத்தை எடுத்தார். பாற்கடலில் மலையானது மூழ்கிவிடாமல், அதை தூக்கி நிறுத்தினார்.

**கே: மந்தரமலையை தூக்கி நிறுத்துவது மட்டுமே கூர்மாவதாரத்தின் வேலையா? அதைத்தவிர வேறு எதுவும் ஞான காரியங்களைச் செய்தாரா?**

ப: மந்தரமலையை தூக்கி நிறுத்துவது மட்டுமல்லாமல், நாரதர் முதலான மகரிஷிகளுக்கு மற்றும் பிரம்மா முதலான தேவர்களுக்கு தத்வோபதேசத்தை வழங்கினார். அனைத்து தேவர்களும், கூர்மரூபியான ஸ்ரீஹரியை பல்வேறு ஸ்தோத்திரங்களால் பாடினர். அந்த சமயத்தில் அவர்களுக்கு ஸ்ரீஹரி செய்த உபதேசமே 'கூர்ம மஹாபுராணம்' என்று அழைக்கப்பட்டது.

**கே: கூர்ம புராணத்தில் எவ்வளவு அத்தியாயங்கள் உள்ளன? எவ்வளவு ஸ்லோகங்கள் உள்ளன?**

ப: 18 புராணங்களில் கூர்ம புராணமானது, மஹாபுராணம் என்றே அழைக்கப்படுகிறது. தற்போது கிடைத்துள்ள கூர்ம புராணத்தில் இருப்பது 6000 ஸ்லோகங்கள் மட்டுமே. ப்ராஹ்மி, பாகவதி, சௌரி, வைஷ்ணவி என்ற பெயர் கொண்ட நான்கு தொகுப்புகள் கிடைத்துள்ளன. இதில் மொத்தம் 99 அத்தியாயங்கள் உள்ளன. இதைப் படிப்பதால் தர்ம, அர்த்த, காம, மோட்ச ஆகிய பலன்கள் நமக்குக் கிடைக்கின்றன. கூர்மபுராணமே பிராஹ்மி தொகுப்பாக ஆகியிருக்கிறது என்று தெரிந்துகொள்ள வேண்டும். ஸ்ரீஹரியின் பெருமைகளை மட்டுமே பேசுவதால், கூர்ம புராணமானது வேதங்களுக்கு சமானமானது ஆகும். யாரொருவர், கூர்ம புராணத்தை படிக்கிறாரோ, அவர் தர்ம, அர்த்த, காம, மோட்ச ஆகியவற்றின் சிறப்புகளை அறிந்து, மகாவிஷ்ணுவின் தத்வஞானத்தை முழுவதுமாக அடைபவராகிறார்.

**கே: கூர்ம புராணத்தில், ஸ்ரீஹரியானவர் நாரதர் முதலான மகரிஷிகளுக்கு எதை உபதேசிக்கிறார்?**

ப: உலகத்தின் ஸ்ருஷ்டி, பிரளயம், சூர்யவம்சம், சந்திரவம்சம், அனைத்து மன்வந்தரங்களின் விவரம், தர்ம, அர்த்த, காம, மோட்சம் - இப்படி அனைத்து விஷயங்களைப் பற்றியும் விவரமாக ஸ்ரீஹரியானவர் கூர்ம புராணத்தில் உபதேசிக்கிறார்.

**கே: கூர்மாவதாரம் எத்தனை முறை நடைபெற்றிருக்கிறது?**

ப: சஜ்ஜனர்களை காப்பதற்காகவும், துஷ்டர்களை வதைப்பதற்காகவும் ஸ்ரீஹரி எந்த ரூபத்தை எடுக்கிறாரோ அதை மட்டும் நாம் அவதாரம் என்று சொல்கிறோம். இந்த வகையில் சிந்தித்தால், கூர்மாவதாரம் நடைபெற்றது ஒரு முறை மட்டுமே. ஆனால், 'ஆதிகூர்மம்' என்று ஸ்ரீஹரியின் மற்றொரு ரூபமும் உண்டு. மொத்த உலகத்தையே தூக்கி நிறுத்திய ரூபத்தை 'ஆதிகூர்மம்' என்று அழைக்கிறோம்.

**கே: ஆதிகூர்ம ரூபத்தின் வேலை என்ன? மற்றும் அதன் சிறப்பு என்ன?**

ப: 50 கோடி யோஜனை தூரமுள்ள பிரம்மாண்டத்தை தூக்கி நிறுத்துமாறு ஸ்ரீஹரி முதலில் சேஷதேவரிடம் கூறினார். ஆனால் சேஷதேவருக்கு அது முடியாமல் போனபோது, வாயுதேவர் கூர்மரூபத்தை எடுத்து, சேஷதேவரை தாங்கிப் பிடித்தார். அந்த வாயுதேவரை ஸ்ரீஹரி தன் கூர்மரூபத்தினால் தாங்கிப் பிடித்தார். ஸ்ரீஹரியின் கூர்மரூபத்தின் வால் பகுதியில் வாயுதேவர் நின்றிருக்கிறார். வாயுதேவரின் வால் பகுதியில், சங்கர்ஷண என்று அழைக்கப்படும் சேஷதேவர் நின்று, பிரம்மாண்டத்தை தன் கழுத்தில் அணிந்திருக்கிறார் என்று தெரிந்து கொள்ளவேண்டும். ஸ்ருஷ்டியின் துவக்கத்திலிருந்து பிரளயம் வரை இந்த கூர்ம ரூபமானது பிரம்மாண்டத்தை தாங்கிக் கொண்டிருக்கிறது.

**கே: பாற்கடலை கடையும்போது கூர்ம ரூபத்தை எடுக்கும் முன்னர், யாருக்காவது கூர்ம ரூபத்தின் தரிசனத்தை ஸ்ரீஹரி காட்டினாரா?**

ப: ஆம். இந்திரத்யும்னன் என்று ஒரு சிறந்த பிராமணன் இருந்தார். முந்தைய பிறவியில் மிகப்பெரிய சக்ரவர்த்தியாக இருந்த இந்திரத்யும்னனை, ருத்ரன் முதலான தேவர்கள் கூட வெல்ல முடியாததாக இருந்தது. அவனிடம் இருந்த ஞானம், பக்தி, வைராக்யம் ஆகியன மிகச் சிறந்ததாக இருந்தது. அந்த ராஜனுக்கு ஸ்ரீஹரி கூர்ம கூரூபியாக தரிசனம் அளித்திருந்தார். அது மட்டுமல்ல, கூர்ம புராணத்தை முதன்முதலில் அந்த ராஜனுக்கே உபதேசம் செய்திருந்தார் ஸ்ரீஹரி.

**கே: இந்திரத்யும்னனுக்கு கூர்ம ரூபி ஸ்ரீஹரி அருளியது எப்படி?**

ப: தற்போது நீ ராஜனாக இருந்தாலும், அடுத்த ஜென்மத்தில் ஒரு பிராமணனாக பிறப்பாய். அப்போது உனக்கு முந்தைய பிறவியின் நினைவு இருக்கும்.

தேவர்களுக்கெல்லாம்கூட தெரியாத சிறந்த தத்வ ரகசியங்களை நான் உனக்கு உபதேசிக்கிறேன். அந்த பிராமண பிறவியின் இறுதியில் நீ என்னிடம் வந்து சேர்வாய் - என்று ஸ்ரீஹரி இந்திரத்யும்னனுக்கு அருளினார்.

**கே: கூர்ம புராணம் புத்தகமாக வந்துள்ளதா? அதில் விஷ்ணுவின் மகிமைகள் தெளிவாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றதா?**

ப: கூர்ம புராணத்தை பல நிறுவனங்கள் வெளியிட்டுள்ளன. அனைத்து பதிப்புகளிலும் பற்பல தவறான கருத்துகளை பார்க்கலாம். எந்த புத்தகத்தைப் படித்தாலும் விஷ்ணுவின் மகிமைகளைத் தெரிந்து கொள்வது சாத்தியமே இல்லை. ஏனென்றால், கூர்ம புராணத்தில் பற்பல விசித்திரமான செய்திகள் உள்ளன.

1. ருத்ரதேவர், விஷ்ணுவின் அந்தர்யாமியாக பிரத்யட்சம் ஆகிறார்.
2. ருத்ரதேவர், மோக சாஸ்திரங்களை இயற்றுமாறு விஷ்ணுவிற்கு கட்டளை இடுகிறார்.
3. பிரகலாதன், பலிச்சக்கரவர்த்தி ஆகியோர் விஷ்ணுவிற்கு எதிராக போர் புரிகின்றனர்.
4. நரசிம்ம அவதாரம் முடிந்தபிறகு வராக அவதாரம் நடைபெறுகின்றது.

இப்படி பல குழப்பங்கள் இருக்கின்றன. 'தவறான பாடம், தவறான விவரிப்பு' ஆகிய தோஷங்களை சரிப்படுத்திக்கொண்டு 'சரியான பாடத்தை' புரிந்துகொண்டு, ஸ்ரீமதாசார்யரின் வாக்கியங்களின்படி பொருள் கொண்டால், 'விஷ்ணு மகிமைகள்' தெளிவாக புரியத்துவங்கும்.

**கே: கூர்மாவதாரத்தில், மந்தர மலையைக் கொண்டு பாற்கடலைக் கடைந்தவுடன், ஸ்ரீஹரி நாரதர் முதலான மகரிஷிகளுக்கு தத்வோபதேசத்தை செய்தாரா?**

ப: அப்படியில்லை. அவதாரம் செய்தவுடன் மந்தரமலைக்கு அருளினார். பின்னர் தேவர்கள் மற்றும் அசுரர்கள் பாற்கடலைக் கடைந்தனர். அதிலிருந்து லட்சுமிதேவி தோன்றினார். பிறகு அமிர்த கலசமும் தோன்றியது. தேவர்களுக்கு மோகினி ரூபத்தில் ஸ்ரீஹரி அமிர்தத்தைப் பகிர்ந்து அளித்தபிறகு, அசுரர்களுடன் போரிட்டு அவர்களை தேவர்கள் வென்றனர். இப்படியாக பாற்கடலை கடையும் நோக்கம் முழுமையாக முடிந்தபிறகு, அனைத்து தேவர்களும் தத்தம் இருப்பிடங்களுக்கு திரும்பும்போது, கடலின் அடியில் இருந்த கூர்மாவதாரம் மேலே வந்து, அவர்களுக்கு தத்வோபதேசம் செய்தார். அந்த சமயத்தில் ஸ்ரீமகாலட்சுமியும் அந்த இடத்தில் நிலை கொண்டிருந்தாள்.

**கே: ஸ்ரீஹரியின் கூர்ம அவதாரத்தை தாங்கள் இதுவரை விளக்கினீர்கள். நாம் எந்த சந்தர்ப்பத்தில் இந்த கூர்ம ரூபி ஸ்ரீஹரியை நினைக்க வேண்டும்?**

ப: தேவரபூஜைக்கு முன்னர் முதலில் 'பீட பூஜை' செய்ய வேண்டும். அந்த சந்தர்ப்பத்தில், பிரம்மாண்டத்தை வெளியிலிருந்து தூக்கி நிறுத்திய ஒரு ரூபம், பிரம்மாண்டத்தின் உள் இருக்கும் ஒரு ரூபம், இப்படி விஷ்ணுவின் 2 ரூபங்களாக கூர்ம ரூபத்தை அவசியம் நினைத்துக் கொள்ளவேண்டும். பாற்கடலை கடையும் சந்தர்ப்பத்தில் மந்தர மலையை தாங்கியிருக்கும் கூர்ம ரூபியை நம்முடைய கஷ்டமான காலங்களில் நினைத்துக் கொள்ளவேண்டும்.

**கே: கூர்மாவதாரத்தை நினைத்துக் கொண்டால் என்ன பலன் கிடைக்கும்?**

ப: இந்த வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்கள் விலகும். உடலின், மனதின் நோய்கள், பிரச்னைகள் தீரும். மறு வாழ்க்கையில் நரகம் ஆகியவை கிட்டாது. இந்த பலன்கள் கிடைக்கும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. 'கூர்மோ ஹரிர்மாம் நிரமாதசேஷாத்' என்று நாராயண வர்மத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இதன் பொருள் - நரகம் முதலான அனைத்து தோஷங்களிலிருந்து கூர்ம ரூபியான ஸ்ரீஹரி என்னைக் காப்பாற்றட்டும்.

**கே: கூர்மாவதாரத்தைப் பற்றி எந்தெந்த கிரந்தங்களைப் படித்து தெரிந்து கொள்ளலாம்?**

ப: பாகவதம் எட்டாம் ஸ்கந்தம், ஏழாம் அத்தியாயம். மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் பத்தாவது அத்தியாயம். மற்றும் கூர்ம மகாபுராணம் - ஆகியவற்றில் சிறந்த தகவல்கள் கிடைக்கின்றன. தசாவதாரங்களைப் பற்றி விவரிக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் பாகவத புராணத்தில் மட்டுமல்லாமல், எல்லா புராணங்களும் கூர்மாவதாரத்தை வர்ணிக்கின்றன. கூர்மாவதாரத்தைப் பற்றிய சிந்தனை, பூஜைகள் செய்யும் விதங்களைப் பற்றிய தகவல்கள் வேண்டுமென்றால், விஜயதாசர சூளாதிகளையே நாடவேண்டும். அவர் மட்டுமல்லாது இதர தாசர்களும்கூட தசாவதாரத்தைப் பற்றி பாடும்போது, பிண்டாண்டத்தில் (நம் உடலில்) நாம் செய்யவேண்டிய கூர்மாவதாரத்தின் சிந்தனையை எடுத்துச் சொல்லியிருக்கின்றனர்.

**கே: கூர்மாவதாரத்தின் பூஜையின் கிரமம் என்ன?**

ப: ஸ்ரீஹரியின் ராம, கிருஷ்ண அவதாரங்களை விக்கிரகங்களாக நாம் பூஜை செய்கிறோம். அந்த வகையில் கூர்ம அவதாரத்தை பூஜிக்கும் வழிமுறை இல்லை. ஆனால் தசாவதாரங்களை பூஜிக்கும்போது இந்த அவதாரத்தையும் சேர்த்தே பூஜிக்கிறோம். ஆச்சரியம் என்னவென்றால், கூர்ம சாலிகிராமத்திற்கு மிக அதிகமான சிறப்புகள் உண்டு. மிகவும் அபூர்வமான இந்த சாலிகிராமத்திற்கு பால் அபிஷேகம் செய்வதினால், நினைத்த காரியங்கள் நிறைவேறுகின்றன என்ற நம்பிக்கை பலருக்கு உண்டு. உங்களிடம் கூர்ம சாலிகிராமம் இல்லையென்றால், அது எங்கு இருக்கின்றதோ, அங்கு பால் அபிஷேகம் செய்வியுங்கள். அபிஷேகம் செய்த அந்த பாலைக் குடித்தால், தேக சம்பந்தப்பட்ட பல நோய்கள் தீரும் என்பதில் சந்தேகமே இல்லை.

**கே: கூர்மாவதாரம் எப்போது நடந்தது?**

ப: வைவஸ்வத மன்வந்தரத்தின் தொடக்கத்தில் மத்ஸ்யாவதாரம் நடந்தது. கூர்மாவதாரம் முந்தைய சாக்ஷுச மன்வந்தரத்தின் தொடக்கத்தில் நடந்துள்ளது. இத்தகைய சிறப்புகளைக் கொண்ட கூர்ம ரூபியான ஸ்ரீஹரியின் அருள் நம் அனைவருக்கும் கிடைக்கட்டும்.

***

## 3. வராக அவதாரம்

**கேள்வி: இரண்டு முறை வராக அவதாரம் நடைபெற்றிருக்கிறதா?**

பதில்: சுமார் 200 கோடி ஆண்டுகளுக்கு முன், ஸ்வாயம்புவ மன்வந்தரத்தின் துவக்கத்தில் ஸ்ரீஹரி வராக அவதாரத்தை எடுத்தார். வராக அவதாரம் நடைபெற்றது ஒரே ஒரு முறை மட்டுமே. இரண்டு முறை என்பது தவறு.

**கே: இரண்டு முறை வராக அவதாரம் செய்து, பூமியை ஸ்ரீஹரி காப்பாற்றியிருக்கிறார் என்று அனைவரும் சொல்கின்றனரே?**

ப: ஆம். ஸ்வாயம்புவ மன்வந்தரத்தின் துவக்கத்திலும் ஸ்ரீஹரி பூமியை காப்பாற்றியிருக்கிறார். மறுபடி இதே வைவஸ்வத மன்வந்தரத்தின் துவக்கத்திலும் பூமியை காப்பாற்றியிருக்கிறார். ஒரே வராகனே இரு முறை பூமியை காப்பாற்றினாரே தவிர, இரு முறை அவதாரம் செய்யவில்லை.

**கே: வராக அவதாரம் எப்படி நடந்தது?**

ப: ஸ்ருஷ்டி துவங்கும்போது, பிரம்மதேவர், ஸ்வாயம்புவ மனுவிற்கு பூமியில் பல விஷயங்களை ஸ்ருஷ்டி செய்யுமாறு ஆணையிட்டார். ஆனால் திடீரென்று பூமி, தன் அச்சிலிருந்து கீழே விழத் துவங்கியது. ஸ்வாயம்புவ மனு, பிரம்ம தேவனிடம் இதைப் பற்றி முறையிடுகிறார். பிரம்மர், ஸ்ரீஹரியிடம் முறையிட, அப்போது பிரம்மரின் மூக்கிலிருந்து வராகன் வெளிப்படுகிறார். மிக அழகான வடிவம் கொண்ட சிறிய வராகனைக் கண்ட பிரம்மர், மிகவும் வியப்படைகிறார். அதே வராகன், தன் அச்சிலிருந்து கீழே விழுந்த பூமியை மறுபடி மேலே தூக்கி நிறுத்துகிறார்.

**கே: ஆதி ஹிரண்யாக்ஷன் பூமியை கடலில் மூழ்கடிக்கிறான். அதை தூக்கி நிறுத்தவே வராக அவதாரம் எடுக்கப்பட்டது என்று சொல்கிறார்களே?**

ப: இதுவும் சரியல்ல. பூமி தன் அச்சிலிருந்து கீழே விழுந்தது. அதை ஸ்ரீஹரி தூக்கி நிறுத்தும்போது, ஆதி ஹிரண்யாக்ஷன் தடை செய்கிறான். அப்போது, வராகன் தன் கோரைப் பற்களால், அந்த அசுரனை குத்திக் கொல்கிறார்.

**கே: ஹிரண்யாக்ஷன் என்று இரண்டு பேர் இருந்தனரா?**

ப: ஆம். ஆதி ஹிரண்யாக்ஷன் பிரம்ம தேவரிடமிருந்து பிறந்தவன். வைவஸ்வத மன்வந்தரத்தின் துவக்கத்தில் இருந்த ஹிரண்யாக்ஷன், கஸ்யபரின் மகன் ஆவான். இந்த ஹிரண்யாக்ஷன் பூமியை கீழே தள்ள முயல்கிறான். அப்போது,

ஸ்ரீஹரி மறுபடி அதே வராக அவதாரத்தின் மூலம் பூமியை மேலே தூக்கி நிறுத்துகிறார்.

**கே: இரண்டு ஹிரண்யாக்ஷகர்களையும் ஸ்ரீஹரி எப்படி கொன்றார்?**

ப: 'தத்-ரக்த பங்காங்கிததுண்டகண்டோ' (பாகவதம் 3-34) என்பதுபோல், ஆதிஹிரண்யாக்ஷனை தன் கோரப் பற்களால் கொன்றார். கஸ்யபரின் மகனான ஹிரண்யாக்ஷகனை ஸ்ரீஹரி 'த்விதியோ கர்ணதாடனாத்' என்பது போல் காதில் அடித்து கொன்றார். அந்த சமயத்தில், பூமியை தன் கோரைப் பற்களால் தாங்கிப் பிடித்திருந்தார்.

**கே: ஸ்ரீஹரி பூவராகன் என்று அழைக்கின்றனர். லட்சுமிதேவியின் பூ (bhoo) ரூபமும் வராகனின் மனைவியா?**

ப: லட்சுமி தேவியின் பூ ரூபத்தை வைத்து பூவராகன் என்று அழைப்பது தவறு. ப்ரித்விக்கு அபிமானி தேவதையான பூமிதேவியை காப்பாற்றி, அவளை திருமணம் செய்து கொள்கிறார் ஸ்ரீஹரி. இந்த பூதேவியில், லட்சுமி தேவியின் பூ ரூபத்தின் விசேஷமான சான்னித்யம் இருப்பதாக தெரிந்து கொள்ளவேண்டும். துளசியில் லட்சுமி தேவியின் சன்னிதானம் இருப்பது போலவே இதையும் நினைக்க வேண்டும்.

**கே: பூதேவியிடமிருந்து ஸ்ரீஹரிக்கு குழந்தைகள் பிறக்கின்றனவா?**

ப: ஆம். நரகாசுரன் மற்றும் வாஸ்து புருஷன். இந்த இரு அசுரர்களும் வராகனிடமிருந்து பிறந்தவர்கள்.

**கே: நாம் அனைவரும் வாஸ்து பூஜை செய்கிறோம். சிறப்பான வழிபாட்டினை அவருக்கு வழங்குகிறோம். அப்படிப்பட்ட அவரை, அசுரன் என்று எப்படி அழைக்கின்றீர்?**

ப: வாஸ்து புருஷன் தேவதை அல்லன். அவன் அசுரனே ஆவான். தேவர்கள் அனைவரும் சேர்ந்து, வாஸ்து புருஷனை தலை குப்புற விழுமாறு செய்தனர். ஈசான மூலைக்கு தலை, நைருத்ய திசைக்கு கால் வைத்து, ஒரு சதுர வடிவில் வாஸ்து புருஷன் விழுந்தான். பிறகு தேவர்கள் அனைவரும் அவன் மேல் அமர்ந்தனர். பிரம்ம தேவர் அவன் மத்திய பகுதியில் அமர்ந்தார்.

**கே: அப்படியென்றால் வாஸ்து புருஷனை பூஜை செய்வது, ஒவ்வொரு ஆண்டும் அவனுக்கு ஆராதனை செய்வது தவறான செயலா?**

ப: வாஸ்து புருஷன் மேல் அமர்ந்திருக்கும் தேவதைகளுக்கு பூஜை செய்யவேண்டும். வாஸ்து புருஷனுக்கு பூஜை செய்தால், அது அசுரர்களுக்கு

போய்ச் சேருமே தவிர, ஸ்ரீஹரிக்குப் போவதில்லை. ஆகவே, ஸ்ரீமதாசார்யர் அனைவருக்கும் எச்சரிக்கை விடுக்கிறார்.

பூஜயோத் வாஸ்துபுருஷன் யோபரிஸ்தாம்ஸ்து ஸர்வதா |
தேவான் பிரம்மாதிகான் வாஸ்துர்வராஹஸ்ய ஹரே: ஸுத: ||

**கே: நரகாசுரனை யார் கொன்றார்கள்?**

ப: ஸ்ரீகிருஷ்ணன், நரகாசுரனைக் கொன்று அவனிடம் சிறைப்பட்டிருந்த 16100 பெண்களை விடுவித்தார். அந்த நாளே 'நரகசதுர்தசி' என்று புகழ் பெற்றது. இன்றும், கிருஷ்ண ஜெயந்தியை எப்படி விமரிசையாக கொண்டாடுகின்றோமோ, அதே போல், நரகசதுர்தசியையும் ஸ்ரீகிருஷ்ணனின் ஆராதனை என்றே விமரிசையுடன் கொண்டாடுகிறோம். இரண்டு பண்டிகையும் ஸ்ரீகிருஷ்ணனின் ஆராதனையே என்பதை கவனிக்க வேண்டும்.

**கே: வராக ரூபத்தினை எப்போது, எப்படி பூஜிக்க வேண்டும்?**

ப: 'ரக்ஷத்வஸௌ மாத்வனி யக்ஞகல்ப: ஸ்வதம்ஷ்ட்ர யோன்னீததயோ: வராஹ:' என்று நாராயண வர்மத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நடந்து செல்லும்போது மற்றும் பிரயாணம் செய்யும்போது வராகனை நினைத்துக் கொள்ளவேண்டும். தன் கோரைப் பற்களினால் பூமியை தாங்கிப் பிடிக்கும் யக்ஞவராகன் என்று அழைத்துக் கொள்பவனை நம் மனதில் நினைத்துக் கொள்ளவேண்டும்.

ஸ்ரீமதாசார்யர், தன் பூர்வாசிரமத்தின் தம்பியான விஷ்ணுதீர்த்தருக்கு பிரணவத்திலிருக்கும் நாதத்தினால் ஆன வராகமூர்த்தியை வழங்கினார். ஸ்ரீமுஷ்ணம் க்ஷேத்திரத்தில் ஸ்ரீஹரியின் ரூபமான வராக ரூபம் இருக்கிறது. இத்தகைய மூர்த்திகளில் அந்தர்யாமியாக இருக்கும் வராகனை நினையுங்கள். அதுமட்டுமல்லாமல், பூவராகன் தன் இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு, தன் கோரைப் பற்களில் பூமியை தாங்கியவாறும், ஹிரண்யாக்ஷன் முதலான அசுரர்கள் நம் நாடிகளின் உள்ளே நுழையாதவாறு சுஷும்னா நாடியில் கீழிருந்து மேல் வரை பயணம் செய்தவாறும் நம்மை காத்து வருகிறார். இத்தகைய அழகிய ரூபத்தைக் கொண்ட வராக மூர்த்தியை தியானம் செய்ய வேண்டும்.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி வராகனை எப்படி வணங்க வேண்டும்?**

ப:

ஷ்யாம: சுதர்சன-தராபய-ஸத்வரேதோ |
பூம்யா யதோऽகில- நிஜோக்த-பரிக்ரஹைஸ்ச |
த்வேயோ நிஜைஸ்ச தனுபி: ஸகலைருபேத:
கோலோ ஹரி: ஸகல-வாம்பித-ஸித்தயோऽஜ: ||5||

நீல வண்ணத்தில் உடல். நான்கு கைகளில் சக்கரம், சங்கு, அபய, வர சின்னங்கள். பூமி மற்றும் தன் பரிவாரங்களான பிரம்மா முதலான தேவர்களுடன் கூடிய, மற்றும் தன் மற்ற அவதாரங்களுடன் கூடிய வராக ரூபியான ஸ்ரீஹரியை சகல அபீஷ்ட சித்திக்காக நினைக்கவேண்டும்.

***

# 4. நரசிம்ம அவதாரம்

**கேள்வி: நரசிம்ம அவதாரத்தின் நோக்கம் என்ன?**

பதில்: ஹிரண்யகசிபுவை அழிப்பது. பக்த பிரகலாதனுக்கு அருளுவது.

**கே: அதனால் நமக்கு என்ன பயன்?**

ப: நம் இதயத்தில் இருக்கும் ஹிரண்யகசிபுவை அழிப்பதற்காகவும்; பக்த பிரகலாதனுக்கு அருளுவதற்காகவும் - என்பதாக நினைக்கவேண்டும்.

**கே: மன்னிக்கவும். புரியவில்லை.**

ப: ஹிரண்யகசிபு என்றால் தங்கத்தினாலான படுக்கை. நமக்குள் இருக்கும் ஆசையே ஹிரண்யகசிபு. அதை அழிக்கவேண்டும். நாம் ஸ்ரீஹரியின் தாசன் என்னும் சிந்தனையால் மகிழ்ச்சி அடைவதே பிரகலாதன். இதற்காகவே நமக்கு நரசிம்ம அவதாரம் தேவை.

**கே: நரசிம்மரின் ரூபம் எப்படி இருக்கிறது?**

ப: சிம்மத்தின் தலை. மனிதனின் உடல். இரண்டும் சேர்ந்ததுபோல் உள்ளது.

**கே: ஓஹோ. அப்படியென்றால் சில படங்களில் சிங்கத்தின் தலை இருப்பதில்லையே?**

ப: அப்படிப்பட்ட தவறான படங்களை கண்டிப்பாக பார்க்கவேண்டாம். முகம் சிங்கத்தைப் போன்றே இருக்க வேண்டும். முகத்தில் மேல் பாகமும் கீழ் பாகமும் வெவ்வேறாக இருக்க வேண்டும். ஒரு முறை சிங்கத்தின் முகத்தைப் பாருங்கள். உங்களுக்கே புரியும்.

**கே: நரசிம்மரின் உருவம் எப்படி இருக்கும் என்பதை சற்று விளக்குங்களேன்.**

ப: தொட்டால் சுடும் நெருப்பைப் போன்ற மூன்று கண்கள். கோரமான அடர்ந்த பிடரிமயிர். பிரம்மாண்டத்தையே தின்றுவிடுவதைப் போல் பெரிய வாய். கூர்மையான பற்கள். கூர்மையான கத்தியைப் போன்ற நாக்கு. கண்களுக்கேற்ப புருவங்கள். குகைகளைப் போன்ற மூக்கு துவாரங்கள். வானிலுள்ள நட்சத்திரங்களே மாலைகள் என்பது போல உயரமான தேகம். ஆயிரமாயிரம் கைகள். வஜ்ராயுதங்களையே பொடிபொடியாக்கும் நகங்கள். இவரின் தொடைமேல் ஹிரண்யகசிபு. குடலை உருவி மாலையாக அணிந்து கொண்ட தேகம்.

மலையைப் போன்ற இந்த உடலால், கோடி அசுரர்களை நொடியில் கொல்லும் வலிமையுடைய இந்த ரூபம். அற்புதம். அதி அற்புதம்.

**கே: பாவம். குழந்தையான பிரகாலதனுக்கு இந்த கோரமான ரூபத்தைக் கண்டு பயம் உண்டாகியிருக்குமே?**

ப: இல்லையாம். ஸ்ரீஹரியிடம் 'உன்னுடைய இந்த கோர ரூபத்தினால் எனக்கு பயம் ஏற்படவில்லை. சம்சார சுழற்சியைக் (பிறப்பு / இறப்பு) கண்டே நான் பயப்படுகிறேன்' என்றானாம் குழந்தை பிரகலாதன்.

**கே: சம்சார சாகரத்தில் மூழ்கியிருக்கும் நமக்கு இதன் பொருள் விளங்கவில்லை. நரசிம்மரின் அருளுக்கு பாத்திரராவதற்கு என்ன சொல்லி ஸ்துதிக்கவேண்டும்?**

ப: நமோ பகவதே துப்யம் புருஷாய மஹாத்மனே |
ஹரயே அத்புதஸிம்ஹாய ப்ரஹ்மணே பரமாத்மனே ||

என்று நரசிம்மரை வணங்கவேண்டும்.

**கே: நரசிம்ம மந்திரத்தைப் பற்றி சற்று சொல்லவும்.**

ப: ஓம் நமோ பகவதே நரசிம்மாய தேஜஸ்தேஜஸே ஆவிராவிர்பாவ வஜ்ரநக கர்மாஷயாத் ரந்தய கந்தய தமோ க்ரஸ ஸ்வாஹா அபயமாத்மனே பூமிஷ்டாத் ஓம் ஹோம் (மாலா மந்திரம்)

இதைத் தவிர, உக்ரம் வீரம் ஆகிய 32 எழுத்துக்களின் மாலாமந்திரம், 24 எழுத்துக்களின் மந்திரம், நரசிம்ம காயத்ரி, ஏகாக்ஷர மந்திரம், மன்யு சூக்தம், வஜ்ரநகாய எனத் துவங்கும் மந்திரம் ஆகியவை மிகவும் மகிமையுள்ளவை. ஆசார்யரின் நகஸ்துதி, த்ரிவிக்ரம பண்டிதரின் நரசிம்மஸ்துதி, விஜயீந்திரரின் பூகண்டம் ஆகிய ஸ்தோத்திரம், நரசிம்மரைப் பற்றிய பாடல்கள், நரசிம்ம சூளாதிகள் ஆகியவை மக்களுக்குப் பிடித்தவை.

**கே: அனைவரும் மேற்கண்ட மந்திரங்களை சொல்லலாமா?**

ப: அல்ல. விரத அனுஷ்டானங்களைச் செய்யும் சத்பிராமணர்கள் மட்டுமே இவற்றைச் சொல்லலாம். அவர்களுக்கும் குரு உபதேசம் தேவை மற்றும் 100க்கு மேல் ஜபிக்க வேண்டுமெனில் ஸ்ரீஹரியிடமிருந்து ஒப்புதல் வரவேண்டும்.

**கே: அனுஷ்டானங்கள் இல்லாதவர்கள் இவற்றை ஜபித்தால் என்ன ஆகும்?**

ப: சோதனை செய்து பார்க்கவேண்டுமெனில் செய்து பாருங்கள். எனக்குத் தெரியாது. ஆனால் ஓரிருவர் இவற்றை கழுத்தளவு நீரில் நின்று ஆயிரக்கணக்கில் ஜபித்து, பின்னர் அவர்களுக்கு மனநோய் வந்ததாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

**கே: நரசிம்ம மந்திரம், நரசிம்மர் உருவச்சிலை, நரசிம்ம சாலக்கிராமம் ஆகியவை மிகவும் பயம் தரக்கூடியவை என்கிறார்கள் சிலர். நீங்களும் அப்படியே சொல்கிறீர்கள். ஆகவே இவைகளின் சகவாசமே நமக்கு வேண்டாம்.**

ப: நியமங்களை சிரத்தையுடன் பின்பற்றி பூஜித்தால் நரசிம்மரின் அருளைப் பெறலாம். நியமங்களை மீறினால் அவை நமக்கு பாதகமானவை.

**கே: லட்சுமி, பிரம்மா முதலான தேவர்களைவிட ஸ்ரீஹரி பிரகலாதனையே அதிகம் விரும்பினார். ஆனால், பிரகலாதன் 19ம் வகுப்பை (தாரதம்ய வகுப்பு) சேர்ந்தவர். இது எப்படி?**

ப: ஏகத்ர ஏகஸ்ய வாத்ஸல்யம் விசேஷாத் தர்சயேத் ஹரி: |
அவரஸ்யாபி மோஹாய க்ரமேண்யைவாஸி வத்ஸல: ||

என்கிற ஸ்ரீமதாசார்யரின் வாக்கியத்தின்படி, அசுர மோகனத்திற்காக ஸ்ரீஹரி அவ்வப்போது அவர்களின் மேல் அதிக பிரியத்தைக் காண்பிக்கிறார். அல்லது, அதிக மக்களை உடைய தாயானவள், நோயினால் துன்பப்படும் ஒரு குழந்தையிடம் மட்டும் அதிக பிரியம் காட்டுவதைப் போலவே ஆகும்.

**கே: ரத்தம் தோய்ந்த சடலத்தை தன் மடியில் போட்டுக்கொண்டு, குடலை மாலையாக அணிந்து, ரத்தத்தை பிடரிமயிரில் நனைத்த நரசிம்மருக்கு தீட்டு ஏற்படவில்லையா?**

ப: இத்தகைய நுட்பமான கேள்விகளுக்கும் ஸ்ரீமதாசார்யர் பதில் அளித்திருக்கிறார். 'அதிபலதிதிசுத ஹ்ருதயவிபேதன ஜய ந்ருஹரேமல பவ மம சரணம்' எந்தவித தோஷமும் இல்லாத பரிசுத்தமான நரசிம்மனை சரணடைவோம் என்கிறார்.

**கே: எந்த மன்வந்தரத்தில் எந்த யுகத்தில் இந்த அவதாரம் நடைபெற்றது?**

ப: வைவஸ்வத மன்வந்தரம் நான்காவது யுகத்தில் இந்த அவதாரம் நடைபெற்றது.

**கே: எந்த மாதம், திதி, நட்சத்திரம் மற்றும் கிழமை?**

ப: வைசாக மாதம் சதுர்தசி சித்ரா நட்சத்திரம் வெள்ளிக்கிழமை

**கே: மாலையிலா?**

ப: அல்ல. அதற்கு முன்னர்.

**கே: அனைவரும் மாலையில்தான் நடைபெற்றது என்கிறார்களே?**

ப: மாலைக்கு முன்னரே தூணிலிருந்து வெளிப்பட்டு, மாலை வேளையில் ஹிரண்யகசிபுவைக் கொன்றார். ஆகையால் மாலை வேளையில் நரசிம்மரின் பூஜை செய்வது விசேஷமானது. மாலைக்கு சற்று முன்னரிலிருந்து மாலை வரை, பூனை எலியைத் துரத்துவதைப் போல் ஹிரண்யகசிபுவை துரத்தி பின்னர் கொன்றார் என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: நரசிம்மர் விசேஷமாக எங்கு இருக்கிறார்?**

ப: ஹரிவர்ஷ கண்டத்தில் பிரகலாதனிடம் பூஜை செய்துகொள்பவராக இருக்கிறார். மற்றும் மாலை வேளைகளில், சந்தி எழுத்துக்களில், வேதங்களின் சம்ஹிதை சந்திகளில், நம் கஷ்ட காலங்களின் சந்தியிலும் கூட நரசிம்மர் இருக்கிறார்.

**கே: நரஹரியை தினமும் எங்கு, எப்படி நினைக்கவேண்டும்?**

ப: நம் உடலில், இதயத்தின் மத்தியில் வெள்ளை வண்ணத்தில், அணுவை விட குறைந்த அளவில் வீற்றிருக்கும் நரசிம்மர் 'க்ஷ' என்னும் எழுத்திற்கு உரிய தேவதைக்கு உரியவராக இருக்கிறார். வீட்டை விட்டு கிளம்பும்போது ஏதும் வின்னங்கள் வராமலிருக்க அவரின் கருணை நிறைந்த முகத்தினை நினைக்காதவனின் இந்தப் பிறவி வீண்தானே?

**கே: பிரகலாதனுக்கு நரசிம்மர் அளித்த உபதேசங்களில் தற்போதைய மக்களுக்கு இருக்கும் செய்திகள் என்ன?**

ப:

1. நாம் விரும்புவதை வேண்டிக்கொள்வதே ஸ்ரீஹரிக்கு செய்யும் பிரார்த்தனையாகும்.
2. பணத்தை எப்படி சம்பாதிப்பது என்று இன்றைய பள்ளிகள் சொல்லிக் கொடுப்பதே கல்வி.
3. வயதானபிறகு (வேலையிலிருந்து ஓய்வு பெற்றபிறகு) சர்வமூல கிரந்தங்கள் படிப்பது

இப்படி தவறாக சிந்திப்பவர்களே இன்று பலர் இருக்கின்றனர். 'குரோக்தமபி ந க்ராஹ்யம்', 'கௌமாரே ஆசரேத் ப்ராக்ஞ:', 'யஸ்த ஆசிஷ ஆஷாஸ்தே' என்று பிரகலாத ராஜர் சொல்வது, மேற்கண்ட மக்களுக்கு சவுக்கடி.

**கே: தந்த்ரசாரசங்கரஹ கிரந்தத்தின்படி நரசிம்மரை எப்படி வணங்கவேண்டும்?**

ப:

த்யாயேன் நரசிம்மம் முருவிருத்தி ரவி த்ரிநேத்ரம்
ஜானு ப்ரசக்த கர யுக்ம மதாபராப்யாம்
சக்ரம் தரஞ்ச தததம் பிரியயா ஸ்வமேதம்
திக்மாம்ஷுகோட்யதிக தேஜ சமக்ர்ய சக்திம் ||15||

மிகப் பெரியதான வட்டவடிவ சூரியனைப் போல் ஒளிரும் மூன்று கண்கள் உடைய, இரண்டு கைகளை இடுப்பில் வைத்தவரான, சக்ர சங்கத்தினை ஏந்தியவரான, கோடி சூரியனைவிட அதிக ஒளியைக் கொண்டவரான நரசிம்மர். அருகில் லட்சுமி. இப்படிப்பட்ட உத்தமமான உருவத்தை உடைய நரசிம்மரை நினைக்கவேண்டும்.

***

## 5. வாமனன்

**கேள்வி: வாமன அவதாரம் நடந்தது எப்போது?**

பதில்: இதே வைவஸ்வத மன்வந்தரத்தில்.

**கே: வாமனாவதாரம் நடைபெற்றது பூமியில் எந்த பாகத்தில்?**

ப: நர்மதா நதி தீரத்தில்.

**கே: வாமனன் என்றால் யார்?**

ப: கஸ்யபர் மற்றும் அதிதியரின் கடைசி மகன்.

**கே: அதிதிக்கு எவ்வளவு மக்கள்?**

ப: விவஸ்வான், அர்யமா, பூஷா, த்வஷ்டா, ஸவிதா, பக, தாதா, விதாதா, வருண, மித்ர, ஸத்ய, உருக்ரம. இதில் கடைசியாக இருக்கும் உருக்ரமனே உபேந்திரன். இவனே வாமனன். 'அக்ஞுகன்ய: ஜகன்யஜ:'. அதிதியின் கடைசி மகன், தேவதைகளில் முதலாமவன் - என்று பாகவதம் சொல்கிறது.

**கே: உபேந்திரன் என்றால்?**

ப: ஒவ்வொரு மன்வந்தரத்திலும் இந்திர பதவியை ஆளும் தேவதைகள் வெவ்வேறானவர்கள். அவரவர்களை அந்த பதவியில் அமர்த்தி, அவர்களைக் காப்பாற்றுவதற்காக இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபமே 'உபேந்திரன்'.

**கே: அனைத்து மன்வந்தரங்களுக்கும் உபேந்திரனே வாமனனாக இருக்கிறாரா?**

ப: அப்படியில்லை. இந்த வைவஸ்வத மன்வந்தரத்தில் உபேந்திரன் வாமனனாக இருக்கிறார். அடுத்த மன்வந்தரத்தில் 'சார்வபௌமன்' என்று அழைத்துக் கொள்கிறார். அதற்கடுத்த மன்வந்தரங்களில் ரிஷப, விஷ்வக்சேன, தர்மசேது, ஸ்வதர்ம, யோகேஸ்வர, ப்ருஹத்பானு ஆகிய பெயர்களில் இந்திர பதவியில் அமர்பவர்களை காப்பாற்றுகிறார். இதைப் பற்றி மேலதிக தகவல்கள் அடுத்து ஸ்ரீஹரியின் அவதாரங்களான சார்வபௌமவை (ராஜராஜேஸ்வர) விளக்கும்போது பார்க்கலாம்.

**கே: அனைத்து மன்வந்தரங்களிலும் இருக்கும் இந்திரன் ஒருவரே அல்லவா? இந்திரன் என்பது ஒரு தேவதையின் பெயர்தானே?**

ப: இல்லை. இந்திரன் என்பது ஒரு பதவியின் பெயர். ஆறாவது மற்றும் ஏழாவது மன்வந்தரத்தில் புரந்தர என்னும் தேவதை இந்திர பதவியை வகித்தார். அடுத்த மன்வந்தரத்தில் பலி இந்திர பதவியை அடைகிறார்.

**கே: உபேந்திரன் வாமனனாகி வந்ததன் காரணம் என்ன?**

ப: இந்திரனிடமிருந்து பலி ஸ்வர்க்க பதவியை அபகரித்தார். ஆகவே அவனை அழிப்பதற்காக வாமனாவதாரம் நடைபெற்றிருக்கிறது.

**கே: பலி அடுத்த மன்வந்தரத்தில் இந்திரன் ஆகிறான் என்றீர்கள். அப்படி இருக்கும்போது இந்த மன்வந்தரத்திலேயே அவன் இந்திரன் ஆகியிருந்தால் என்ன தப்பு?**

ப: ஒருவருக்கு ஒரு ஆண்டு ஆனபிறகு பதவி கொடுக்கவேண்டும் என்று நிச்சயம் ஆகியிருக்கிறது. அப்படியிருக்கும்போது, அவன் அதற்கு முன்னரே பதவியில் அமர்ந்து நானே பீடாதிபதி என்றால், அது தவறுதானே!

**கே: இந்திர பதவியை அபகாரம் செய்வதற்கு பலிக்கு என்ன அவசியம்?**

ப: பாற்கடல் கடையும்போது தனக்கு அமிர்தம் கிடைக்கவில்லை. தேவர்கள் அவரை ஏமாற்றிவிட்டனர் என்ற கோபம் இருந்தது.

**கே: இந்திர பதவியை அடையும் அளவிற்கு பலிக்கு எப்படி சக்தி வந்தது?**

ப: அசுரர்களின் குரு சுக்ராச்சாரியர். இவர் பலி மூலமாக 100 அஸ்வமேத யாகங்கள் செய்து, 'விஸ்வஜித்' யாகத்தை செய்வித்தார். இதனாலேயே பலிக்கு அத்தகைய சக்தி வந்தது.

**கே: பலி, பிரகலாதரின் பேரன். இவரின் இந்த துர்புத்தியை பிரகலாதர் ஏன் தடுக்கவில்லை?**

ப: தேவர்களின் பதவிக்கு போட்டி போடப்போகிறேன் என்று பலி, பிரகலாதரிடம் முதலிலேயே சொல்லிவிட்டார். ஸ்ரீஹரியின் விருப்பத்தை அறிந்திருந்த பிரகலாதர், பலிக்கு 'ததாஸ்து - அப்படியே ஆகட்டும்' என்று அனுமதி அளித்தார். தன் பேரனிடம் அதர்மம் - அநியாயங்கள் இல்லை என்னும் அறிவு பிரகலாதருக்கு இருந்தது.

**கே: பலி இந்திர பதவிக்கு வந்தபிறகு நடந்த கதை என்ன?**

ப: தன் சக்தியினால் அனைத்து தேவர்களையும் வென்ற பலி, இந்திர பதவில் சுகமாக காலம் கழித்து வந்தார். சில காலம் ஆனபிறகு அவர் மனதில் ஏதோ குழப்பம், பிரச்னை. ஏதோ தப்பு செய்திருக்கிறோம் என்று தோன்றியது. அவரைச்

சுற்றி இருப்பவர்களுக்கும் இதே குழப்பம் நிலவியது. பல அபசகுனங்கள் தோன்றின. பலியின் ஆட்சிக்கு ஏதோ பிரச்னை வரப்போகிறதென்று அனைவருக்கும் சந்தேகம் வந்தது. இதனால் பலி மேலும் குழப்பமடைந்தார். தன் மனதை சமாதானப்படுத்துவதற்காக தன் தாத்தாவான பிரகலாதனை அணுகினார்.

'தாத்தா! என் ஆட்சியில் பல அபசகுனங்கள் தோன்றுகின்றன. ஏதோ பயமாக இருக்கிறது. இதற்கான காரணத்தை விளக்குவீர்களா?'

பேரனின் உதவியற்ற நிலைக்கு தாத்தா மனமிரங்கினார். உடனே உண்மை நிலையை அறிந்தார். முன்னர், பலியின் கதி என்ன ஆகப்போகிறதென்று அறிந்தார். பிரகலாதன் தியானம் செய்து, ஸ்ரீஹரியின் விஸ்வரூபத்தை கண்டார். அதிதியின் கர்ப்பத்தில் வாமனனைக் கண்டு, அவனிடம் அனைத்து உலகத்தையும், தன்னையும், பலியையும்கூட கண்டார். பலியிடமிருந்த ஆட்சி அனைத்தையும் பறிப்பதையும் கண்டார். தான் கண்டவற்றை பலியிடம் தெரிவித்தார்.

விஷயத்தை அறிந்த பலி பயம் கொள்ளவில்லை. மாறாக கோபம் கொண்டான். 'என் பலம் மற்றும் பலம் பொருந்திய என் சேனையின் முன் ஸ்ரீஹரி என்ன செய்யமுடியும்?' என்று கூவினான். விஷ்ணு துரோகமான இந்த வசனத்தைக் கேட்ட அந்த கணமே பிரகலாதர் 'உன் அனைத்து ஆட்சியும் அழிந்துபோகட்டும்' என்று சபித்தார். அந்த சாபத்தைக் கேட்ட பலி அவரிடம் மன்னிப்பு கோரினான். விஷ்ணு துரோகம் செய்ய மாட்டேன் என்று வாக்களித்தார்.

பிரகலாதரின் இந்த சாபம், பின்னர் பலியின் அழிவிற்கு காரணமாக இருந்தது. (வாமன புராணம்).

**கே: தேவேந்திரனின் பதவியை அபகரிக்க வேண்டுமெனில், பலி தாமஸ ஜீவியாக இருக்கவேண்டுமல்லவா?**

ப: பலி தைத்யராக இருந்தபோதிலும் சுத்த சாத்விக ஜீவியாக இருந்தார். ஆனால் அவ்வப்போது மட்டும் அவருக்கு அசுர ஆவேசம் வந்துவிடுகிறது என்று ஸ்ரீமதாசார்யர் தனது தாத்பர்ய நிர்ணயத்தில், 'அசுராவேஷத:' என்று குறிப்பிடுகிறார். ஆக இரு ஜீவிகள், பலியின் உடலில் இருந்து ஆண்டுகொண்டிருந்தன.

**கே: பலியிடம் இரு ஜீவிகள் குடிகொண்டிருந்தன என்று எப்படி நிர்ணயம் செய்கிறீர்கள்?**

ப: மேலே குறிப்பிட்டதைப் போல், ஸ்ரீஹரியைப் பற்றி பிரகாலதரிடம் பலி கேலியாகப் பேசினார். ஸ்ரீஹரி, வாமனனாக அவதாரம் எடுத்தபோதும், அவனது அகங்காரம், மமதைகளை அவரிடம் வெளிப்படுத்தினான். மற்றொரு முறை ஸ்ரீஹரிக்கு தன்னிடமிருந்த அனைத்தையும் அர்ப்பணம் செய்தார்.

**கே: வாமனாவதாரத்தின் பின்புலம்?**

ப: இந்திர பதவியை இழந்த தேவர்கள் அனைவரும், ஸ்ரீஹரியிடம் போய் முறையிட்டனர். தான் அவதரித்து, உங்கள் அனைவரையும் காப்பாற்றுவேன் என்று ஸ்ரீஹரி தேவர்களிடம் கூறினார். அதே சமயத்தில், அதிதியிடம் தன்னை மகனாக பெறவேண்டும் என்று தவம் செய்யுமாறு சொல்லவும் தேவர்களிடம் சொன்னார். இப்படி வாமனபுராணம் சொல்கிறது.

**கே: அதிதியே தனது மக்களின் கஷ்டகாலத்தை அறிந்து, தவம் மேற்கொண்டாள் என பாகவதம் சொல்கிறதே?**

ப: ஆம். அதிதிக்கும் தவம் செய்யவேண்டும் என விருப்பம் இருந்தது. அதே சமயத்தில், ஹரியின் ஆணையும் வந்தது. இப்படி இரண்டையும் சேர்த்து பார்க்கவேண்டும்.

**கே: வாமனனை மகனாக அடையவேண்டுமென்று அதிதி, எந்த தவத்தை மேற்கொண்டாள்?**

ப: வாரிசு இல்லாதவர்களுக்கு சொல்லப்படும் விரதம் என்றால் அது பயோவிரதம். அதையே அதிதியும் மேற்கொண்டாள்.

**கே: இந்த காலத்தில் வாரிசு இல்லாதவர்கள் இந்த விரதத்தை செய்யலாமா?**

ப: பயோவிரதத்தை மேற்கொண்டால் வாரிசு கண்டிப்பாக பிறக்கும். வாரிசு வேண்டும் என்பவர்கள், விஷ்ணு ப்ரீத்யர்த்தமாக இந்த விரதத்தை செய்யலாம்.

**கே: வாமன அவதாரம் ஆன நாள்?**

ப: பாத்ரபத சுத்த விஜயத்வாதசி, ஸ்ரவண நட்சத்திரம், அபிஜித் முகூர்த்தத்தில், சங்கு-துந்துபி ஆகிய வாத்திய கோஷத்துடன், அப்ஸரஸ்-கந்தர்வர்கள் ஆகியவர்களின் நடன-பாடல்களுடன், தேவ, ரிஷி, பித்ரு, அக்னிகளின் ஸ்தோத்திரங்களுடன், புஷ்பவிருஷ்டி ஆகும் சமயத்தில் வாமன அவதாரம் நடந்தது.

**கே: வாமன அவதாரத்தை எப்படி தியானிக்க வேண்டும்?**

ப:

அஜீனதண்ட கமண்டலு மேருலாருசிரா
பாவனவாமன மூர்த்தியே ।
மிதஜகத் த்ரிததாய ஜிதாரயே
நிகமவாக்படவே வடவே நம: ॥

**கே: பலியின் வீட்டிற்கு வாமனன் எப்படி வந்தார்?**

ப: தர்ப்பைபுல்லினால் ஆன அரை ஞாண் கயிறு, பூணூல், கிருஷ்ணாஞ்சனத்தின் மேல்துண்டு அணிந்து கொண்டு, கண்களைப் பறிக்கும் அழகுடன் ஒரு பிரம்மசாரி ரூபத்தில், வாமனன் அனைவரின் மனதிலும் அமைதியை உண்டாக்குபவனாக, சிரித்த முகத்துடன், பலியை கடைத்தேற்றுவதற்காக, அஸ்வமேத யாகம் நடைபெற்றுக் கொண்டிருந்த வேளையில், ஸ்ரீஹரி பலியின் வீட்டிற்கு வந்தார்.

**கே: மூன்று அடி நிலத்தை வாமனன் தானமாக கேட்டபோது, பலி ஏன் கோபம் கொண்டார்?**

ப: தன்னிடம் தானம் கேட்பவர்கள் மறுபடி வேறு யாரிடமும் தானம் கேட்கக்கூடாது என்னும் அகங்காரம் பலியிடம் இருந்தது. ஸ்ரீஹரி எதிரில் வந்து நின்றபோதும், அவர் எதைக் கேட்டாலும் தானம் அளிப்பேன் என்ற கர்வம் இருந்தது. இதற்கெல்லாம் காரணம் - அவரிடமிருந்த அசுர ஆவேசம்.

**கே: பலி கொடுக்க இருந்த தானத்தை சுக்ராச்சாரியார் தடுத்தார். ஆகவே, சுக்ராச்சாரியார் துஷ்டர்தானே?**

ப: சுக்ராச்சாரியார் ஒரு சிறந்த தேவதை. அசுரர்களின் குருவாக இருந்தார். ஸ்ரீஹரியின் விருப்பத்திற்கேற்ப அசுரர்களுக்கு அனுகூலம் செய்து தருவதே அவரின் கடமையாக இருந்தது. இப்படிச் செய்வதால் அவருக்கு தோஷம் ஏற்படவில்லை. 'உங்கள் யாகத்திற்கு என்னால் தடை வந்தது' என்று வாமனன் கூறியபோது - 'ஸ்ரீஹரியான நீ எங்கள் யாகம் நடக்கும்போது எதிரில் வந்து நின்றதால், தடை எப்படி ஆகும்?' என்று கேட்டார்.

**கே: வாமனன், த்ரிவிக்ரமனாகி வளர்ந்து நின்றபோது, ஒரு காலடியால் பூமியை, இரண்டாவது காலடியால் வானத்தை அளந்த காட்சி, 'உத்தானபாத ஆசனம் (யோக)' போல இருந்ததா?**

ப: இது சரியல்ல. பலிக்கு எங்கு பார்த்தாலும் ஸ்ரீஹரியின் பாதங்களே தெரிந்தன. வானத்தில் ஸ்ரீஹரியின் இரண்டாவது பாதம் தெரிந்தது. ஸ்ரீஹரி தன் விஸ்வரூப தரிசனத்தை அந்த சமயத்தில் காண்பித்தார். நாம் காலடி வைப்பதுபோல், தன் காலை சிறிது தூக்கியே இரண்டாவது அடியை வைத்தார் ஸ்ரீஹரி.

**கே: ஸ்ரீஹரியின் விஸ்வரூப தரிசனத்தை அனைவரும் கண்டனரா?**

ப: பலி மற்றும் சுக்ராச்சாரியார் கண்டனர். பலியை விட உத்தமரான தேவர்கள் கண்டனர். மற்றவர்களுக்கு வாமன ரூபத்திலேயே ஸ்ரீஹரி காணக் கிடைத்தார். குருக்ஷேத்திரத்தில், அர்ஜுனன், பீமன் மற்றும் சிலருக்கு மட்டுமே ஸ்ரீகிருஷ்ணனின் விஸ்வரூப தரிசனம் காணக் கிடைத்தது போலவே இதுவும்.

**கே: த்ரிவிக்ரமனாக வளர்ந்து நின்றபோது, இந்த பிரம்மாண்டத்தின் ஓடு உடைந்ததுபோல் ஆயிற்று என்று பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால், அவரது இடது காலின் நகத்தின் முனை உடைந்தது என்ற கதை பிரபலமாகியிருந்தாலும், பாகவதத்தில் எட்டாம் ஸ்கந்தத்தில் ஏன் இது குறிப்பிடப்படவில்லை?**

ப: ஆம். ஆனால் ஐந்தாம் ஸ்கந்தத்தில் இருக்கும் பாகீரதி கத்யத்தில் 'வாமபாதாங்குஷ்ட நக நிர்பின்ன' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதன் பிறகான கதையை எட்டாம் ஸ்கந்தத்தில் அறியவேண்டும்.

**கே: பிரம்மாண்டத்தின் ஓடு உடைந்தபோது, சுரகங்கை உலகத்தில் பாய்ந்தாள். அவளின் வேகத்திற்கு உலகத்தில் இருந்தவர்கள் அனைவரும் அழிந்துபோயிருக்கவேண்டுமே?**

ப: அதற்காகவே பிரம்மதேவர் அவளை தன் கமண்டலத்தில் பிடித்தார். பிறகு ஸ்வர்க்கம் முதலான லோகங்களுக்கு வந்தாள். பகீரதன் அவளை பூமிக்கு வரவழைத்தபோது, ருத்ரதேவர் தன் ஜடையில் பிடித்தார். பிறகே பூமிக்குள் பிரவேசித்தாள் கங்கை. 'காம் கச்சதி இதி கங்கா' என்பதைப்போல், பூமியில் பிரவேசித்ததால் அவளுக்கு 'கங்கா' என்று பெயர் வந்தது.

**கே: மூன்றாவது அடியை ஸ்ரீஹரி பலியின் மேல் வைத்து, அதோலோகத்திற்கு (பாதாளத்திற்கு) அனுப்பினார். இதற்கான காரணம் என்ன?**

ப: ஸ்ரீஹரி யாரை இரட்சிக்கப் போகிறாரோ, முதலில் அவரிடமிருந்து அவரின் செல்வத்தை பறித்துக் கொள்கிறார். பலியை இரட்சிப்பதற்காகவே முதலில் அவரிடமிருந்த அனைத்து வைபவங்களையும் ஸ்ரீஹரி பறித்துக் கொண்டார்.

**கே: ஆனால், பல அரசர்கள் தங்கள் செல்வத்துடனேயே வாழ்ந்து, பிறகு சத்கதியை அடைந்திருக்கிறார்கள் என்பதற்கு பல ஆதாரங்கள் உள்ளனவே?**

ப: ஆம். செல்வத்தை வைத்திருப்பது / பாதுகாப்பது தவறில்லை. அதை வைத்திருப்பதால் கர்வம் கொள்வதே தவறு. செல்வம் வந்தபோது கர்வம் வராதிருந்தால், அத்தகைய செல்வம் ஸ்ரீஹரியின் அருளினாலேயே கிடைத்தது என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

**கே: ஸ்ரீஹரியின் ரூபத்தை பிரகலாதன் பார்த்தாரா?**

ப: ஆம். அதுமட்டுமல்லாமல், தன் பேரனான பலியை ரட்சிப்பாயாக. இவன் செய்த தவறுகளை மன்னிப்பாயாக என்று வேண்டினார். அவர் வேண்டுதலின்படியே ஸ்ரீஹரி, தான் பலியை ரட்சிப்பதோடு மட்டுமல்லாமல், அடுத்த மன்வந்தரம் வரையில், அதோலோகத்தில் பலியின் வீட்டின் வாயிலை தான் கபில ரூபத்தினால் காப்பேன் என்று ஆசிர்வதித்தார்.

**கே: வாமனன் மற்றும் த்ரிவிக்ரம ரூபத்தின் சிறப்பு அம்சங்கள் என்ன?**

ப: தினமும் காலைவேளையில் 'ஹேமாத்ரி ஷிகராகாரம்' என்னும் ததிவாமன ஸ்தோத்திரத்தை படிக்கவேண்டும். த்ரிவிக்ரம ரூபத்தினால், பிரம்மாண்டத்தின் ஓட்டினை உடைத்தபோது, த்ரிவிக்ரமரின் பாதத்தைக் கழுவியபின், கங்கை பூமியில் பாய்ந்தபோது பிரம்மாண்டமே தங்கத்தைப் போல் ஜொலித்தது. இந்த காட்சியை நம் மனதில் நிறுத்தி தியானிக்கவேண்டும்.

**கே: பலிச்சக்ரவர்த்தியிடமிருந்து நாம் கற்கவேண்டியது என்ன?**

ப: நாம் ஹரிபக்தர்கள். ஆனால் நம் மனதில் எட்டு வகையான மதங்கள் குடிகொண்டிருக்கின்றன. இந்த துஷ்ட சக்திகளை நாம் அழிக்கவேண்டும். நற்குணங்களை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பிக்க வேண்டும். அதற்காக நம் இதயத்தில் வாமனனின் அவதாரம் நிகழவேண்டும். பலியிடம் இருந்த கர்வம், தற்புகழ்ச்சி ஆகியவற்றை அழித்து, அவன் தலைமேல் தன் காலை வைத்து அருளினார். பலியைப் போல் நாமும் நம்மை மற்றும் நம் தலையை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து, அவன் சரணாகதியை அடையவேண்டும்.

**கே: வாமனாவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: மூன்று காலடிகளினால் பலியை ரட்சித்தார். இதைபோலவே நம் வாழ்க்கையிலும் ஸ்ரீஹரி தன் மூன்று ரூபங்களினால் ரட்சிக்க வேண்டும். ஜாக்ரதே, ஸ்வப்ன, சுஷும்ன (முழிப்பு, கனவு மற்றும் தூக்கம்) ஆகிய மூன்று நிலைகளிலும், விஸ்வ, தைஜஸ், ப்ராக்ஞ ஆகிய ரூபங்களினால் குழந்தை, வாலிப, முதிய ஆகிய மூன்று பருவங்களிலும், அனிருத்த, பிரத்யும்ன, நாராயண என்னும் ரூபங்களினால், முன், பின் மற்றும் நடுவில், நரசிம்ம, ஸ்ரீகிருஷ்ண, ராம ரூபங்களினால் நம்மை காப்பாற்றவேண்டும். பலிக்கு விஸ்வரூப தரிசனத்தை அளித்தாற்போல், எங்கு பார்த்தாலும் ஸ்ரீஹரியைக் காணும் புத்தியைக் கொடுத்து நம்மை காப்பாற்றவேண்டும்.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி ஸ்ரீஹரியை எப்படி தியானம் செய்யவேண்டும்?**

ப: த்யாயேத் ஸுசுக்லமரவிந்த தலாயதாக்ஷம்
ஸௌவர்ண பாத்ர ததி போஜ்யமதாம்ருதம் ச ।
தோர்ப்யாட்ம் ததானமபில்யைஸ்ச சுரை: பரீதம்
ஷீதாம்ஷு மண்டல கதம் ரமயா சமேதம் ||30||

தங்கப் பாத்திரத்திலிருக்கும் அமிர்தத்தை தன் கைகளில் பிடித்துக்கொண்டு, தன் குடும்பத்தினரான அனைத்து தேவர்களுடனும் மற்றும் ரமாதேவியுடனும்

சந்திரமண்டலத்தில் அமர்ந்திருக்கும், தாமரையைப் போல் மலர்ந்திருக்கும் ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

உத்யத்ரவி ப்ரபவரீந்த்ர தரௌ கதாம் ச
ஞானம் ச விபுதமஜம் ப்ரியயா சமேதம் |
விஸ்வாவகாசமபித: ப்ரதி பூரயந்தம்
பாசா ஸ்வயா ஸ்மரத விஷ்ணுமஜாதி வந்த்யம் ||32||

உதிக்கும் சூரியனைப்போல ஒளிரும் கைகளினால் சக்ர, சங்க, கதா, ஞான முத்திரைகளைக் காட்டும், தன் ஒளியினால் உலகில் நிறைந்திருக்கும், பிரம்மர் முதலான தேவர்களினால் வணங்கப்படும், ரமாதேவியுடன் கூடிய, அழிவில்லாத நாராயணனை தியானிக்கவேண்டும்.

***

# 6. பரசுராமர்

**கேள்வி: பரசுராம அவதாரத்தின் சிறப்பு என்ன?**

பதில்: அற்புதமான, நம் கற்பனைக்கு எட்டாத ரூபம். பூமியில் சிரஞ்சீவியாகி துஷ்டர்களை அழித்து, பக்தர்களை காக்கும் ரூபம்.

**கே: பரசுராமரின் காலம் என்ன?**

ப: இதே வைவஸ்வத மன்வந்தரத்தின் த்ரேதாயுகம். வைசாக சுத்த த்விதீயா.

**கே: அவதாரம் நடைபெற்ற இடம் எது?**

ப: தெளிவாக தெரியவில்லை. இமய மலைக்கு பக்கத்தில் என்று பொதுவாகச் சொல்லலாம்.

**கே: சிரஞ்சீவியான ரூபம் எனில், இன்றும் பூமியில் இருக்கிறாரா?**

ப: ஆம். சுமார் 4 கோடி ஆண்டுகளுக்கு முன் அவதாரம் எடுத்த இந்த ரூபம், இன்றும் பக்தர்களை காப்பாற்றுவதற்காக மகேந்திர மலையில் தவம் செய்து வருகிறார்.

**கே: பரசுராம அவதாரத்தின் நோக்கம் என்ன?**

ப: கடவுள் இல்லை, தர்மம் இல்லை, பசுக்களை மற்றும் பிராமணர்களை பூஜிக்க வேண்டியதில்லை என்ற நிலை வரும்போது, வர்ணாஸ்ரம தர்மங்களை நாசம் செய்யும் துஷ்டர்களை அழிக்கவே பிறந்த அவதாரம் பரசுராம அவதாரம்.

**கே: அப்படியா? தற்போது நம் காலத்தில் பலரும் தர்ம காரியங்களை மூடநம்பிக்கை என்கிறார்கள். தாங்கள் சொன்ன துஷ்ட க்ஷத்ரியர்களின் லட்சணங்கள் இந்த காலத்து மனிதர்களிடமும் காணப்படுகிறதே? அப்படியிருக்கும்போது, இப்போதும் பரசுராமர் வரவேண்டுமல்லவா?**

ப: கலியுகம் தொடங்கி ஓராயிரம் ஆண்டுகள் ஆகியிருந்தபோது, ஸ்ரீஹரி புத்த அவதாரம் எடுத்து கலியுகத்தில் தர்மத்தை நிலைநாட்டினார். கலியுகம் முடியும்வரை ஸ்ரீஹரி இன்னொரு அவதாரம் எடுப்பதில்லை. இது யுகதர்மம்.

**கே: பரசுராமதேவரின் வம்சம்?**

ப:

அத்ரியின் சகோதரர் பிருகு.
பிருகுவின் மகன் ஓர்வன்.
இவரின் மகன் ருசிகன்.
ருசிகனின் மகன் ஜமதக்னி.
ஜமதக்னியின் மகனே பரசுராமர்.
இது சந்திர வம்சம்.

**கே: பரசுராம அவதாரத்தின் பின்புலம் என்ன?**

ப: இது ஒரு புராணக்கதை. காதி என்பவருக்கு சத்யவதி என்றொரு மகள் இருந்தாள். அவளின் பேரழகைக் கண்ட ருசிகன் என்னும் ரிஷிக்கு அவளை மனைவியாக அடையும் ஆசை வந்தது. காதி அரசனிடம் சென்று அவர் மகளை தனக்கு மணமுடிக்குமாறு வேண்டினார். ருசிகன் மஹாதபஸ்வி.

அப்போது காதி அரசர் ஒரு வேண்டுகோளை வைக்கிறார். தான் சொல்வதைப்போல் உள்ள 1000 குதிரைகளைக் கொண்டு வந்து கொடுத்தால், திருமணம் நடக்கும் என்கிறார். ருசிகனும் வருணனைக் குறித்து கடும்தவம் செய்து, அவர் கேட்டதைப்போலவே 1000 குதிரைகள் - ஒரு காது கருப்பு நிறம். உடல் முழுவதும் வெள்ளை நிறம் - இப்படியான குதிரைகளை தருவித்து அதை ராஜனுக்கு சமர்ப்பிக்கிறார். அவற்றைக் கண்டு ஆச்சரியமடைந்த ராஜா மறுபேச்சின்றி தன் மகளை ருசிகனுக்குக் கொடுத்து, வெகு விமரிசையாக திருமணத்தை நடத்தினார்.

பல காலமாக ருசிகனுக்கு வாரிசு உண்டாகவில்லை. அங்கு காதி ராஜனுக்கும் மேற்கொண்டு வாரிசு உண்டாகவில்லை. ருசிகனின் மனைவி மற்றும் காதி ராஜனின் மனைவி இருவரும் ருசிகனிடம் வந்து தங்களுக்கு ஆண் வாரிசு வேண்டும் என்று வேண்டினர். ருசிகன் இருவருக்கும் சரு (அன்னம்) கொடுத்து, தன் அத்தையை அரச மரத்தைச் சுற்றிவந்து பின் அதை உண்ண வேண்டும் என்றும்; தன் மனைவியை அத்தி மரத்தைச் சுற்றிவந்து பின் அதை உண்ண வேண்டும் என்றும் கூறினார்.

ருசிகன் கூறியதைப் போல் செய்யாமல் சத்யவதி மற்றும் அவர் தாய் தங்கள் சருவினை மாற்றிக் கொண்டனர். மரத்தையும் மாற்றிக் கொண்டனர். ஆகையால், அரசாட்சி செய்வதற்கான குழந்தை பிறக்காமல், சத்யவதியின் தாய்க்கு விஸ்வாமித்ரர் பிறந்தார். அவரின் மகளான சத்யவதிக்கு பிராமண தர்மத்திற்கு அனுசரணையான குழந்தை பிறப்பதற்கு பதில், வீர பராக்ரமரான க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்கான ஒரு மகன் பிறந்தார் என்று தெரியவருகிறது. சருவை மாற்றி சாப்பிட்டதால், இப்படி வாரிசுகளும் மாற்றிப் பிறந்தன. சத்யவதி ஆனவள், தன் தவறை ஒப்புக்கொண்டு, தனக்கு பிராமண தர்மத்தை கடைப்பிடிக்கும் வாரிசே வேண்டும் என்று கேட்டதால், ருசிகன், மகன் ஜமதக்னி பிராமண தர்மத்தையே கடைப்பிடிப்பார் என்றும் பேரன் க்ஷத்ரிய தர்மத்தை கடைப்பிடிப்பார் என்றும் வரமளித்தார்.

ருசிகனின் இத்தகைய தவவலிமையினாலேயே ஸ்ரீஹரி ‘பரசுராம’ என்னும் ரூபத்தினால், சத்யவதியின் பேரனாக அவதாரம் செய்தார்.

**கே: அவதாரத்திற்கான காரணம்?**

ப: குஷனின் மகன் குஷிகன்.
குஷிகனின் மகன் காதி ராஜன்.
இவரின் மகள் சத்யவதி.
சத்யவதியை ருசிகரிஷிக்கு திருமணம் செய்து கொடுத்தார்.
அவதாரத்திற்கு ருசிகரிஷியே காரணம்.

**கே: ருசிகனின் மகன் ஜமதக்னி. இவருக்கு எத்தனை வாரிசுகள்?**

ப: வசுமான், ருமன்வான், சுஷேண, விஷ்வாவசு மற்றும் பரசுராமர் இப்படி ஐந்து மகன்கள். பரசுராமரே சாக்ஷாத் ஸ்ரீஹரி.

**கே: முதன்முதலில் பரசுராமர் கையால் கொல்லப்பட்டவர் யார்?**

ப: அப்படி கொல்லப்பட்டவர் க்ஷத்ரியர் யாரும் அல்லர். தன்னைப் பெற்ற தாய் என்பதே இதற்கான பதில்.

**கே: பெற்ற தாயின் தலையைக் கொய்தது தப்பில்லையா?**

ப: தாயைக் காப்பாற்றவே செய்தது அது. கொன்றதாக ஆகாது. மேலும் தந்தையின் சொல்லை தட்டாமல் இருப்பதற்காக செய்தது.

**கே: ஜமதக்னி, ரிஷிபத்னியான ரேணுகாவின் தலையைக் கொய்யவேண்டும் என்று மகனுக்கு கட்டளையிட்டார். அப்படி அவர் மனைவி என்ன தவறை செய்தார்?**

ப: கந்தர்வர்கள் நதியில் குளித்துக்கொண்டிருந்தபோது, ரேணுகா அவர்களைக் குறித்து தன் மனதில் தவறான எண்ணம் கொண்டாள். அதை தன் ஞானதிருஷ்டியில் கண்டுகொண்ட ஜமதக்னி, இத்தகைய தண்டனையைக் கொடுத்தார்.

**கே: சின்ன தவறுக்கு இத்தகைய பெரிய தண்டனையா?**

ப: இது சிறிய தவறல்ல. இது தண்டனையாகத் தெரிந்தாலும் தண்டனையல்ல. மோட்சத்திற்கான வழி. ரிஷிகளுக்கு வரும் கோபம் கெட்டதல்ல. கருணையே ஆகும். தன் மனைவி செய்த பாவத்திற்கான பரிகாரமாகவே இதைச் செய்தார். கௌதமர் தன் மனைவி அகலிகைக்குக் கொடுத்த சாபத்தைப் போன்றதே இதுவும்.

**கே: தாயின் தலையைக் கொய்த பரசுராமருக்கு பாவம் வரவில்லையா?**

ப: இல்லவே இல்லை. தந்தையின் சொல்லைக் காப்பாற்றினார் என்றும், தாயை மோட்சத்திற்கு அனுப்பினார் என்ற புண்ணியமே வந்தது. ஆனால் அனைவருக்கும் அதிபதியான ஸ்ரீஹரியே புண்ய-பாவத்தை தீர்மானிப்பவர். ஆகவே கணவனான ஜமதக்னிக்கு இந்த காரியத்திற்காக பாவம் வந்து சேர்ந்தது.

**கே: பாவம் வந்து சேர்ந்ததால் ஜமதக்னிக்கு என்ன ஆயிற்று?**

ப: சிறிது காலம் கழித்து, கார்த்தவீர்யார்ஜுனனின் வாரிசுகள் மற்றும் சேனைகள் வந்து ஜமதக்னியின் தலையைக் கொய்தனர்.

**கே: ஸ்ரீஹரியின் ரூபமான தத்தாத்ரேயரிடம் உபதேசம் பெற்ற அவரது பக்தர் கார்த்தவீர்யார்ஜுனன். அவரை பரசுராமர் கொன்றார். அப்படிக் கொன்றது தப்பில்லையா?**

ப: கார்த்தவீர்யார்ஜுனன் தெய்வபக்தராக இருந்தாலும் மிகவும் கர்வம் கொண்டிருந்தார். ஜமதக்னி ரிஷியின் ஆசிரமத்தில் இருந்த ஹோமதேனுவை கவர்ந்து, கோ மற்றும் பிராமணருக்கு அவமானத்தை ஏற்படுத்தினார். இதற்காகவே பரசுராமர் கையால் கொல்லப்பட்டார்.

**கே: கார்த்தவீர்யார்ஜுனன் ஸ்ரீஹரியின் சுதர்சன சக்கரத்தின் அவதாரம் என்கிறார்கள். ஒரு முறை சுதர்சன சக்கரத்திற்கு கர்வம் உண்டானபோது, மகாவிஷ்ணு - நீ பூமியில் சஹஸ்ரபாஹுவாக பிறப்பாய். நான் ரிஷி புத்திரனாகப் பிறக்கிறேன். நம் இருவரின் சக்தியை பூமியே பார்க்கட்டும் - என்றார். அதன்படியே தற்போது கார்த்தவீர்யார்ஜுனன் மற்றும் பரசுராமர் யுத்தம் செய்தனர். பரசுராமர் மகாவிஷ்ணு ரூபமாததால் அவரே வென்றார். இப்படியாக ஒரு கதை இருக்கிறதே. இது உண்மையா பொய்யா?**

ப: இந்த கதைக்கு தக்க ஆதாரம் இல்லை. யாரோ கிளப்பிய புரளி என்றே சொல்லலாம். ஏனென்றால், சுதர்சன சக்கரம், 8வது கக்ஷையில் (தாரதம்ய) வரும் சாட்சாத் ஷண்முகன். கார்த்தவீர்யார்ஜுனன், சக்ரவர்த்திகளின் வகுப்பில், (தாரதம்யத்தில்) வெகு கீழே வரும் ஒரு தேவர் ஆவார்.

**கே: கார்த்தவீர்யார்ஜுனனின் 17 அக்ஷோஹிணி சைன்யத்தை பரசுராமர் ஒருவராக அழித்தார். கார்த்தவீர்யார்ஜுனரையும் அழித்தார் என்றால், இது பாவமான செயல் அல்லவா?**

ப: தந்தையான ஜமதக்னி மகனுக்கு சொல்வது என்னவென்றால்: 'ராம ராம மஹாபாஹோ பவான் பாபமகார்ஷேத். ராஜனை தேவையில்லாமல் கொன்றிருக்கிறாய். அதற்கான பிராயச்சித்தமாக ஒரு ஆண்டு காலம்

தீர்த்தயாத்திரை செய்வாயாக'. பாவம் - புண்ணியம் இதெல்லாம் ஸ்ரீஹரியின் ரூபமான பரசுராமரின் லீலை அவ்வளவே.

**கே: பரசுராமர் 21 முறை பூமியை சுற்றி வந்து, க்ஷத்திரியர்களை அழித்தார் என்கிறார்களே. இந்த எண்ணிக்கைக்கு என்ன காரணம்?**

ப: புராணங்களில் இதற்கான பதில் உள்ளது. பரசுராமர் இல்லாதபோது, கார்த்தவீர்யார்ஜுனரின் மகன்கள், ஜமதக்னியின் தலையைக் கொய்தனர். அப்போது அவர் மனைவி, 21 முறை தன் மகனை சத்தமாக அழைக்கிறார். 21 முறை தாயின் கூக்குரலைக் கேட்ட மகன், 21 முறை பூமியை சுற்றி வந்து, க்க்ஷத்ரியர்களின் குலத்தை நாசம் செய்து, தாய்க்கு மகிழ்ச்சி அளித்தார்.

**கே: மொத்தம் எத்தனை க்ஷத்திரியர்களை பரசுராமர் கொன்றார்?**

ப: எண்ணிக்கையே இல்லை. அரசர்களின் தலை-முண்டங்களினாலான ஒரு பெரிய மலையையே பரசுராமர் உருவாக்கினார். அவர்களின் ரத்தத்தினால் ஐந்து ஏரிகளை உருவாக்கினார். அதையே சமந்தபஞ்சக என்று அழைக்கலாயினர்.

**கே: சில புத்தகங்களில் ஸ்யமந்தபஞ்சக என்று இருக்கிறதே?**

ப: இது தவறு. சமந்தபஞ்சக என்பதே சரியான பெயர். ஸ்யமந்தகமணி என்னும் பெயரைக் கேட்ட சிலர், இதையும் ஸ்யமந்தபஞ்சக என்று தவறாக சொல்லலாயினர்.

**கே: ரத்தத்தினாலான ஏரியை நிர்மாணித்தபின் பரசுராமர் என்ன செய்தார்?**

ப: மாஹிஷ்மதி நகரத்திலிருந்து தந்தையின் தலையைக் கொண்டு வந்து அவருடைய உடலுடன் சேர்த்து, ரத்த நதியினால் வணங்கி, அவரை பிழைக்க வைத்தார். சப்தரிஷிகளின் வரிசையில் தன் தந்தையையும் சேர்த்தார். அங்கிருந்தே ஜமதக்னியின் வம்சம் துவங்கியது. ஜமதக்னி கோத்திரத்தின் பல்லாயிரம் சஜ்ஜனர்களின் மூலபுருஷரராக தன் தந்தையை நிறுவி அவருக்கு புகழ் சேர்த்தார்.

**கே: எல்லா க்ஷத்ரியர்களையும் கொன்றபிறகு, பூலோகத்தின் நிலைமை என்ன ஆயிற்று?**

ப: மொத்த பூலோகமும் பரசுராமரின் கீழ் வந்தது. நான்கு சமுத்திரங்களை கஸ்யபருக்கு தானம் அளித்தார்.

**கே: அனைத்தையும் தானம் செய்தபிறகு, அவர் எங்கு வசித்தார்?**

ப: தனக்கென்று எந்த இடமும் இல்லாதபோது, கடலின் மேல் தன் கோடலியை வீசினார். கோடலி விழுந்த இடத்தை கடல் அவருக்கென்று விட்டுக்கொடுத்தது. அங்கு இவர் வசித்தார். அதுவே தக்ஷிண கன்னட க்ஷேத்திரத்தின் பரசுராம க்ஷேத்ரம் எனப்படுகிறது. இன்றும் பாஜக க்ஷேத்திரத்தில் பரசுராம மலையில் துர்காதேவியுடன் பரசுராமர் வாசம் செய்கிறார்.

**கே: பரசுராமரை பூஜை செய்வது எப்படி?**

ப: ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களின் பூஜையைவிட பரசுராமரின் பூஜை / உபாசனை மிகவும் முக்கியமானது. இதர ரூபங்களை உருவச்சிலை ஆகியவற்றை வைத்து பூஜை செய்தால், பரசுராமரை அக்னியில் (நெருப்பில்) பூஜை செய்யவேண்டும். அக்னியின் மூலமாக தன் ஆகாரத்தை நேரடியாக ஏற்றுக்கொள்ளும் பரசுராமரை திருப்திபடுத்தி நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்ளவேண்டும்.

**கே: பரசுராமர் நமக்கு சொல்லும் செய்தி என்ன?**

ப: 'ராமோSத்ரிகோடேஷு அவ்யாத்' 21 முறை பூமியை சுற்றி வந்து துஷ்ட க்க்ஷத்ரியர்களைக் கொன்ற பரசுராமர், இன்றைக்கும் பக்தர்களுக்கு அருள் புரிந்தவாறு மலைகளில் வசிக்கிறார். வாழ்க்கையில் நாம் எதிர்கொள்ளும் பிரச்னைகள், சாஸ்திரங்களை பின்பற்றும்போது வரும் சந்தேகங்களை பெரும் தடைக்கற்களாக நினைக்கிறோம். அக்ஞானம் என்னும் பெரிய மலையே நம்மை மோட்சத்திற்கு போகாமல் தடுக்கும் இடர் ஆகும். இந்த அனைத்து தடைகளையும் உடைப்பதற்காகவே பரசுராமர் நம் இதயத்தில் வரவேண்டும். அஞ்ஞானம் என்னும் மலையைத் தகர்த்து எறிய வேண்டும். துஷ்ட க்ஷத்ரியர் என்னும் இருட்டை, சூரியனைப் போல் நாசம் செய்யும் ஞானசூரியனான பரசுராமருக்கு அனந்த வந்தனங்கள்.

**கே: தந்த்ரசார சங்கிரஹத்தின்படி பரசுராமரை எப்படி வணங்கவேண்டும்?**

ப:

அங்கார வர்ணமபிதோSண்ட பஹி: ப்ரபாவி
ர்வ்யாப்தம் பரஷ்வத தனுர்தரமேக வீரம் ।
த்யாயேதஜேஷ புருஹூத முகை:ஸ்துவத்பி
ராவேஷமாத்ம பதவீம் ப்ரதி பாதயந்தம் ||35||

நெருப்பைப்போல பிரகாசிப்பவரும், பிரம்மாண்டத்தின் உள்ளேயும் வெளியேயும் தன்னுடைய ஒளியினால் வியாபித்திருப்பவரும், கோடலி தரித்திருப்பவரும், வீரர்களில் முன்னிலை வகிப்பவரும், நான்முகன், ருத்ரன், இந்திரன் ஆகிய தேவர்களால் துதிக்கப்பட்டவரும், அவர்களுக்கு தன் ஸ்வரூபத்தை உபதேசித்துக் கொண்டிருப்பவருமான பரசுராம ரூபம் கொண்ட ஸ்ரீஹரியை தியானிப்போம்.

***

# 7. ராமன்

**கேள்வி: ஸ்த்ரிஹத்யா (பெண்களைக் கொல்லுதல்), பிரம்மஹத்யா (பிராமணர்களைக் கொல்லுதல்), நிரபராதிகளைக் கொல்லுதல், மாத்ருத்யாக, பித்ருத்யாக, சகோதரத்யாக (தாய்,தந்தை, சகோதரர்களைத் துறத்தல்) - இப்படி அனைத்து வித தோஷங்களும் உள்ளவே ஸ்ரீராமனிடம்?**

பதில்: அமைதியாக உங்கள் பிரச்னைகளை / கேள்விகளைக் கேளுங்கள். அனைத்திற்கும் சரியான பதில்கள் உள்ளன. 'நற்குணங்களை மட்டுமே கொண்டவன், தோஷங்களே இல்லாதவன் - ஸ்ரீராமன்' என்பதை உங்களுக்கு தெரியப்படுத்துகிறேன்.

**கே: 'அவத்யா: ஸ்த்ரி ஈத்யாஹு: தர்மஞா: தர்மனிஸ்சயே' (மகாபாரதம் 1-147-29). பெண்களைக் கொல்லக்கூடாதென்று மகாபாரதம் சொல்கிறது. ஆனால் ஸ்ரீராமன் முதன்முதலில் கொன்றதே தாடகி என்ற பெண்ணைத்தான். இது தவறில்லையா?**

ப: நீங்கள் சொன்ன மகாபாரதத்தின் வசனம், துஷ்ட பெண்களைக் கொல்லக்கூடாதென்று சொல்லவில்லை. சமூகத்திற்கு ஆபத்து விளைவிப்பவராகவும், பற்பல சஜ்ஜனர்களை துன்புறுத்துபவராகவுமாக இருந்தால், அத்தகைய பெண்ணைக் கொல்வது தப்பல்ல.

**கே: ஆனாலும், முதலில் பெண்ணையே கொல்ல வேண்டியிருந்ததா?**

ப: இதற்குப் பின்னால் ஒரு உத்தமமான தத்துவம் உள்ளது. இன்றைய சமூகத்திற்கு இதில் ஒரு நீதிக்கதை இருக்கிறது. ஒரு பெண், தன் வீட்டினை கட்டிக் காப்பாற்றிக்கொண்டு, கணவனை / மக்களை நன்கு பார்த்துக் கொண்டு, ஸ்ரீஹரி மகிழ்ச்சியடையும்படி இருக்கவேண்டும். இதற்கு எதிராக நடந்துகொள்பவள், நல்ல மனைவியாக இல்லாமல், வீட்டை நாசம் செய்பவளாக ஆகிறாள். மேலும் இவளால், ஊர், நாடு ஆகியவையும் நாசமாகின்றன. இப்படிப்பவர்களை, பெண் என்று கருதி, திருத்தாமல் விடுவது தப்பாகும். ஸ்ரீராமன் தன் அவதாரத்தின் துவக்கக் காலத்தில் இதையே சுட்டிக் காட்டியிருக்கிறார்.

**கே: அப்படியென்றால், சூர்ப்பணகையை ஏன் கொல்லவில்லை?**

ப: கொல்லக்கூடாது என்றில்லை. ஆனால் அவளின் பின் இருக்கும் அனைத்து துஷ்டர்களையும் ஒருசேர கொல்லவேண்டும் என்பதால், ஸ்ரீராமன் செய்த தந்திரமே அது.

**கே: 'என்னைத் திருமணம் செய்துகொள்' என்று சொன்னதற்காக, சூர்ப்பணகையின் மூக்கு, காதுகளை கத்தரித்து விடலாமா?**

ப: சூர்ப்பனகை ஒரு விதவை. காமுகள். பொய் பேசுபவள். மோசடி செய்பவள். சீதையை கொன்று தின்பதற்கு வந்தவள். பற்பல ரிஷி முனிவர்களின் தவத்திற்கு இடையூறு செய்தவள். இப்படி எல்லாவற்றிற்கும் சேர்த்து ஸ்ரீராமன் அவளுக்கு தண்டனை கொடுத்தார்.

**கே: வேடர்குல சபரியின் எச்சிலை ஸ்ரீராமன் எதற்கு தின்றார்?**

ப: வால்மிகி ராமாயணத்தில் இப்படி சொல்லப்படவில்லை. ஆசார்யரின் தாத்பர்ய நிர்ணயத்திலும் இந்த விஷயம் இல்லை.

**கே: தசரதருக்கு இஷ்டமில்லாதபோதும் ஸ்ரீராமன் ஏன் காட்டிற்குப் போக வேண்டியதாயிற்று?**

ப: இப்படி கேட்பதே தவறு. இரு வரங்களைக் கொடுக்கிறேன் என்று தசரதன், கைகேயிக்கு வாக்கு கொடுத்திருந்தார். ஆகையால், தசரதனுக்கு இஷ்டமிருந்ததோ இல்லையோ, ஸ்ரீராமனை காட்டிற்கு அனுப்பவேண்டியதே ஆயிற்று. தந்தையின் வாக்கிக்கேற்ப ஸ்ரீராமனும் காட்டிற்குக் கிளம்பினார். தாய் தந்தையரிடம் எப்படிப்பட்ட பக்தியை காட்டவேண்டும் என்பதை ஸ்ரீராமன் செய்து காட்டினார்.

**கே: தங்க மான் இருப்பதற்கு சாத்தியமே இல்லை என்று ஸ்ரீராமனுக்கு தெரிந்திருக்கவில்லையா? அற்பப் பொருளின் மேல் ஆசைகொண்டு ஏன் அந்த மானுக்குப் பின்னால் ஓடினார்?**

ப: மாரீசன் என்னும் அரக்கனை கொல்வதற்காக ஓடினாரே தவிர, தங்க மானுக்காக அல்ல. மற்றும் மாயா-சீதையை ராவணன் கடத்தவேண்டும் என்பதற்காக ஓடினார்.

**கே: ஸ்ரீராமனின் நற்குணங்களைப் பற்றி மாரீசன், ராவணனிடம் எடுத்துக் கூறினான். ஆகையால், மாரீசன் சாத்வீகன்தானே?**

ப: சாத்வீகன் என்றிருந்தால், ராவணனை விட்டு ஓடிவந்து ராமனிடம் சரணாகதி அடைந்திருக்கவேண்டும். அதுமட்டுமல்லாமல், உயிர் விடும்போது 'ஹே சீதா, ஹே லட்சுமணா' என்று ராமனின் குரலில் கூவினான். இவற்றினாலேயே மாரீசன் சாத்வீகன் இல்லை என்று நிரூபணமாகின்றது.

**கே: ராவணன் சீதையை அபகரித்தான். அந்த சந்தர்ப்பத்தில், சீதை பரபுருஷனை (கணவன் அல்லாத பிற ஆண்களை) தொடுவதுபோல் ஆயிற்றா?**

ப: ராமனின் மனைவியான சீதை, மாயாசீதை என்னும் பொம்மையை அக்னிதேவரிடமிருந்து செய்வித்து, வேதவதி என்ற பெயருடன் தனக்கு பதிலாக வைத்து, தான் கைலாசத்திற்குப் புறப்பட்டாள். ராவணன் அபகரித்தது சீதாதேவியை அல்ல. மாயாசீதையை.

**கே: எப்படியிருந்தாலும், சீதை ராவணனிடம் இருந்தபோது ராவணன் சீதையை தொட முயற்சிக்கவில்லையா?**

ப: இதற்கு புராணங்களில் சுவாரசியமான கதை உண்டு. ராவணன் மற்ற பெண்களை தொட்ட மாத்திரத்தில் மரணம் அடைவான் என்று சாபம் பெற்றிருந்தான். ஆகவே ராவணன் உயிரோடு இருந்த காரணத்தில், அவன் மாயாசீதையைக்கூட தொட்டிருக்கவில்லை என்று தெரிகிறது.

**கே: அண்ணன் தம்பியான வாலி சுக்ரீவருக்கு நடுவில் ராமன் ஏன் மூக்கை நுழைக்கவேண்டும்?**

ப: சுக்ரீவன் ராமனிடம் சரணடைந்தான். வாலியைக் கொல்லவேண்டும் என்று வேண்டினான். சரணாகதி அடைந்தவரின் வேண்டுதலை நிறைவேற்றுவது ஸ்ரீராமனின் இயல்பாகும்.

**கே: நிரபராதியான வாலியை ஏன் ராமன் மறைந்திருந்து கொன்றார்?**

ப: தேவைதைகள் தங்களின் அவதார நோக்கத்தை முடித்து, மறுபடி மூலரூபத்தை அடைவதற்கு ஆவலுடன் இருப்பார்கள். வாலியின் அவதார நோக்கம் முடிந்திருந்தது. ராமனின் சேவை மிச்சம் இருக்கவில்லை. ஆகையால், வாலியின் மகிழ்ச்சிக்காகவே ராமன் இப்படி மறைந்திருந்து கொன்று வாலிக்கு அருளினார்.

**கே: உங்கள் பதில் மனதிற்கு திருப்தி அளிக்கவில்லை. வாலி-சுக்ரீவன் கதையை பார்க்கும்போது, ராமன் சுக்ரீவனை மட்டும் ஏன் ஆதரித்தார்?**

ப: இதற்கு ஸ்ரீபுரந்தரதாசர் பதில் அளிக்கிறார். 'அனுமன நம்பித சுக்ரீவ கெத்த, அனுமன நம்பத வாலியு பித்த'. எந்த பக்தன் ஜீவோத்தமரான வாயுதேவரை நம்புகிறாரோ, அவரை ஸ்ரீஹரி என்றும் கைவிடுவதில்லை. உத்தம ஜீவியாக இருந்தாலும், வாயுதேவரை வணங்கவில்லை என்றால், அவரை ஸ்ரீஹரி கைவிடுகிறான் என்று வாலி - சுக்ரீவன் கதையின் மூலம் ஸ்ரீராமன் தெரிவிக்கிறார்.

**கே: அண்ணனுக்கு துரோகம் செய்த விபீஷணனை ஸ்ரீராமன் தன் பக்கம் சேர்த்துக்கொண்டது சரியா?**

ப: விபீஷணன் அண்ணனை துறந்தான் என்பதைவிட ராவணனே விபீஷணனை துரத்தினான் என்பதே சரி. அந்த சமயத்தில் விபீஷணன் ராமனிடம்

சரணடைந்தான். அனுமனை கலந்தாலோசித்துவிட்டு, ராமன் விபீஷணனை சேர்த்துக் கொண்டார். இதன்மூலம் ஒரு மிகப்பெரிய தத்துவத்தை எடுத்துக் காட்டினான். விஷ்ணுபக்தி யாரிடம் இருந்தாலும் அவர் வெல்வர். விஷ்ணுத்வேஷம் யாரிடம் இருந்தாலும் அவர் தோற்பர்.

**கே: ராவணன் ஒரு பிராமணன். இவனைக் கொன்றதால் ராமனுக்கு பிரம்மஹத்யா தோஷம் வரவில்லையா?**

ப: வர்ணம், தர்மம் எதுவும் முக்கியமில்லை. ஸ்ரீஹரி பார்ப்பது நல்ல நடத்தையை மட்டுமே. துஷ்டனான ராவணனிடத்தில் எந்தவித பிராமணத்வமும் இருந்திருக்கவில்லை. அவனைக் கொன்றதன் மூலம் ஸ்ரீராமனுக்கு கடுகளவு தோஷமும் வரவில்லை.

**கே: மகாபதிவிரதையான சீதையை, ஸ்ரீராமன் ஏன் அக்னி பிரவேசம் செய்யுமாறு கூறினார்?**

ப: அன்றைய காலத்தில் இது நடைமுறையிலிருந்த தண்டனையே ஆகும். யாராவது திருடிய குற்றத்தில் பிடிபட்டால், காய்ச்சிய இரும்புக் கம்பியை பிடிக்கச் செய்வது ஒரு தண்டனை. அப்படி அவன் திருடியிருக்கவில்லையெனில், நெருப்பு அவனை சுட்டிருக்காது. குற்றம் செய்திருந்தால் மட்டுமே சுட்டிருந்தது. ஸ்ரீராமனுக்கு சீதை ஒரு பதிவிரதை என்று தெரிந்திருந்தது. தோஷமற்றவளான சீதையை நெருப்பு சுடாது என்றும் தெரிந்திருந்தது. இதனை உலகிற்கு தெரியப்படுத்தவே, அக்னிப் பிரவேசம் செய்யுமாறு பணித்தார்.

**கே: சீதை தோஷமற்றவள் என்று தெரிவிப்பதற்கு வேறெதுவும் வழி இருக்கவில்லையா?**

ப: அக்னிபிரவேசம் செய்யச் சொன்னதற்குப் பின் இன்னொரு காரணமும் இருந்தது. அக்னிப் பிரவேசம் செய்ததும், மாயாசீதையின் உருவிலிருந்த வேதவதி, தன் தந்தையான அக்னி தேவனின் வீட்டிற்குச் சென்றாள். கைலாசத்தில் சிவன் பார்வதியிடம் பூஜை / மரியாதை பெற்றுக்கொண்டிருந்த சீதாதேவி அக்னியிலிருந்து வெளிவந்தாள். இதற்காக நடைபெற்றதே அக்னிப் பிரவேசம்.

**கே: அனைவரும் ராம ராஜ்யத்தைப் புகழ்கின்றனர். ஆனால், சூத்ரரான சம்பூகனை கொன்று ஸ்ரீராமன், சூத்ரரிடம் விரோதம் கொண்டார். இது எப்படி சரியாகும்?**

ப: ஆம். ஸ்ரீராமன் சம்பூகனை கொன்றார். ஆனால் அவன் சூத்திரன் என்பதற்காக கொல்லவில்லை. ராவணனை பிராமணன் என்பதற்காக கொல்லவில்லை. சம்பூகனிடமிருந்த கெட்ட நோக்கத்தைக் கண்ட ராமன் அவனைக் கொன்றார்.

**கே: சூத்திரன் தவம் செய்யக்கூடாது என்பதற்காகவே அவனைக் கொன்றார். சரிதானே?**

ப: சம்பூகன் தவம் செய்தது சரியே. பார்வதியின் வரத்தின் மூலம் ஒரு கல்பத்திற்கான ஆயுளை பெற்றிருந்தான். மறுபடி, தான் பார்வதியின் கணவன் ஆகவேண்டுமென்ற கெட்ட நோக்கத்துடன் தவத்தை செய்யத் துவங்கினான். அதற்காகவே ராமன் அவனைக் கொன்றார்.

**கே: யாரோ ஒரு சலவைத் தொழிலாளியின் பேச்சைக் கேட்டு ஸ்ரீராமன் சீதையை ஏன் தியாகம் செய்தார்?**

ப: 'ஏவம் பஹுவிதா வாசோ வதந்தி புரவாஸின: | நகரேஷு ச சர்வேஷு ராஜன் ஜனபரேஷு ச' என்று வால்மிகி ராமாயணம் சொல்வதைப் போல் அனைத்து வீடு, சாலை, நகரங்களிலும் அனைவரும் சீதையின் பதிவிரதத்தைப் பற்றி சந்தேகப்பட்டு பேசத் துவங்கினர். மக்களுக்கு இருந்த சந்தேகத்தைப் போக்க வேண்டியது அரசனின் கடமை என்பதால், ஸ்ரீராமன் சீதையை உலகத்தின் பார்வைக்காக தியாகம் செய்தார். ஒரு அரசனுக்கு மனைவியின் நலனைவிட நாட்டு மக்களின் நலனே முக்கியம் என்பதை நிரூபித்தார்.

**கே: தன் வாழ்க்கை முழுவதும் அண்ணனின் சேவை செய்த லட்சுமணனைக் கூட ஸ்ரீராமன் இறுதியில் விலக்கினார். இது தப்பில்லையா?**

ப: ஸ்ரீராமன் சிவனுடன் பேசிக்கொண்டிருந்தபோது, வேறு யார் வந்தாலும் உள்ளே விடாதே என்று லட்சுமணனிடம் சொல்லியிருந்தார். ஆனால், துர்வாசர் வந்தபோது லட்சுமணன் அவரை உள்ளே விட்டான். என் பேச்சை மீறினாய் என்று கூறி ஸ்ரீராமன் லட்சுமணனை விலக்கினார். இது உண்மையே. ஆனால், லட்சுமணனின் அவதார காலம் முடிவடைந்திருந்தது. லட்சுமணன் சாக்ஷாத் ஆதிசேஷன். ராமன் பரந்தாமத்திற்கு செல்வதற்கு முன் தன் படுக்கையான சேஷதேவரை தன்னிடத்திற்கு அனுப்பினார். அதற்காக செய்யப்பட்ட நாடகமே இதுவாகும்.

**கே: இதுவரை கேட்ட கேள்விகள் அனைத்திற்கும் வந்த பதில்கள் திருப்திகரமாகவே இருந்தன. ஆனால், ராமனைப் பற்றிய பதில்களினால், ஸ்ரீராமன் ஒரு சிறந்த அரசன் என்று மட்டுமே தெரிகிறது. ஸ்ரீமன் நாராயணனே ஸ்ரீராமன் என்கிற எண்ணம் வருவதில்லை. இதற்கு உங்கள் பதில் என்ன?**

ப: 'மர்த்யாவதாரஸ்தி ஹமர்த்யாசிக்ஷணம்' என்கிற வாக்கியத்தின்படி ஸ்ரீஹரி அவதாரம் எடுக்கும்போது சாதாரண மனிதனைப் போலவே நடமாடுகிறார். ஆனாலும், அவ்வப்போது தன் பற்பல நற்குணங்களை நிருபிக்கிறார்.

**கே: ராமாயணத்தைப் பற்றி அந்த காலத்தில் பல்வேறு விமர்சனங்கள் இருந்தன. லட்சுமணன் சீதையின் மேல் மோகம் கொண்டிருந்தான். சேதுவை**

**ராமன் கட்டவில்லை. ராவணன் மற்றும் சீதைக்கு சம்பந்தம் இருந்தது - ஆகியன. இந்த கருத்துகளின் மேல் பல புத்தகங்களையும் எழுதியிருக்கின்றனர். இதற்கு உங்கள் பதில் என்ன?**

ப: தம்மிடம் இருக்கும் தோஷங்களை ஸ்ரீஹரியின் மேல் போடுவது துஷ்டர்களின் லட்சணமாகும். ஆதாரமே இல்லாமல் சொந்த கற்பனையில் உருவான கட்டுக்கதைகள் ஆகையால் அவை நிரூபிக்கப்பட முடியாமல் தோற்றுப் போகின்றன. இவற்றிற்கு பதில் சொல்லவே தேவையில்லை. மற்றும் முன்னரே திரு. ஹயவதன புராணிகர் 'சீதாயன' என்னும் தனது புத்தகத்தில் இத்தகைய கட்டுக்கதைகளுக்கு பதில் அளித்திருக்கிறார். இன்னொரு வாரப் பத்திரிக்கையில் வந்திருந்த சில கெட்ட விமர்சனங்களுக்கு, நம் குருவான திரு. விஷ்வேச தீர்த்த ஸ்ரீபாதங்களவர் தம் ஒரு கட்டுரையில் பதில் அளித்து, கண்டனம் தெரிவித்திருக்கிறார்.

**கே: ராமனை எப்படி வணங்கவேண்டும்?**

ப: ஸ்ரீராமனை நம் இதயக் கமலத்தில் நினைத்து, சரணாகதி அடைய வேண்டும். 'ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே, சஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வரானனே', என்று ருத்ரதேவர் பார்வதிக்கு உபதேசித்த இந்த மந்திரத்தை தினமும், எந்நேரமும் ஜபித்தவாறே இருக்கவேண்டும்.

**கே: நம் வாழ்க்கைக்கான பாடங்களாக ராமாயணத்தில் காணப்படும் பல்வேறு சம்பவங்களில் ஒரு உதாரணத்தை சொல்லுங்களேன்.**

ப: நானும் காட்டிற்கு வருகிறேன் என்று சீதாதேவி ராமனிடம் அடம் பிடிக்கிறாள். ஸ்ரீராமன் திரும்பத்திரும்ப காட்டிற்கு வரவேண்டாம் என்றாலும், அவள் ஒப்புக்கொள்வதில்லை. நான் ஒரு பதிவிரதை. பதிவிரதைகளுக்கு கணவனை விட்டு வேறு யாரும் கதியில்லை.

ந பிதா ந ஆத்மஜோ ந ஆத்மான மாதா ந சகேஜன: |
இஹ ப்ரேத்ய ச நாரீணாம் பதிரேகோ கதி: சதா ||

தந்தை, மகன், தாய், உறவினர் இப்படி யாருமே ஒரு பெண்ணிற்கு ஆதரவளிப்பர் இல்லை. இந்த உலகத்திலும், பர உலகத்திலும் கணவன் ஒருவனே ஒரு பெண்ணிற்கு கதி. இந்த ஸ்லோகத்தைச் சொல்லி சீதை காட்டிற்குப் புறப்பட்டாள்.

இதே சமயத்தில், லட்சுமணனின் மனைவியான ஊர்மிளையும், தானும் வனவாசத்திற்கு காட்டிற்கு வருகிறேன் என்று லட்சுமணனிடம் அடம் பிடிக்கிறாள். சீதை சொன்னதைப் போல் எனக்கும் கணவனே கதி. என்னை விட்டு தனியே காட்டிற்குப் போகாதீர்கள் என்றாள். அப்போது லட்சுமணன், ஊர்மிளைக்குச் செய்த உபதேசம் மிகவும் அருமையானது.

ஹே ஊர்மிளா. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கடமை இருக்கின்றது. நீ என்னுடன் வனவாசத்திற்கு வந்தால், நான் உன் சேவை செய்யவோ? அல்லது அண்ணன் / அண்ணிக்கு சேவை செய்யவோ? வீட்டில் இருப்பதே உன் போன்ற பதிவிரதைக்கு அழகு. சீதைக்கு அண்ணனுடன் காட்டிற்குச் செல்வதே பதிவிரதம். அனைவரின் பதிவிரதமும் ஒரே மாதிரி இருப்பதில்லை. புரிந்துகொள். நான் ஸ்ரீராமனின் தாசன். நீ தாசனின் மனைவி. தாசியாக இருந்து, கணவனின் தாஸ்யத்திற்கு விரோதம் வராமல் நடந்துகொள்ளவேண்டியது உன் கடமை.

இந்த கதையிலிருந்து தெரிவது என்னவென்றால் - அவரவர் கடமைகளை சரிவர செய்து வாழ்க்கையை நடத்தவேண்டும் என்பதே.

**கே: எல்லாவற்றையும் ஏன் சரியாகத் தெரிந்து கொள்ளவேண்டும்?**

ப: சாக்ஷாத் மகாவிஷ்ணுவே ஸ்ரீராமனாக அவதரித்தார். இவர் பற்பல நற்குணங்களால் நிரம்பியவர். எந்தவித தோஷங்களும் அற்றவர். இவரது அவதாரத்தைப் பற்றி, அதன் கதைகளைப் பற்றி முழுவதுமாக அறியும் சாமர்த்தியம் சாமான்ய மனிதர்களுக்கு இருப்பதில்லை. ஆகவே எந்தவித களங்கங்களையும், தோஷங்களையும், பொறுப்பில்லாமல் ஸ்ரீஹரியின்மேல் செலுத்தக்கூடாது. ராமாயணம் முதலான புனிதமான கிரந்தங்களை சரியாகப் படித்து புரிந்துகொண்டால், மோட்சம் கிடைக்கும். இதையே தவறாகப் புரிந்துகொண்டால் தமஸ் (கெட்டது) கிடைக்கும்.

**கே: ராமாயணத்திலிருந்து நமக்கான முக்கிய செய்தி என்ன?**

ப: அனுமன் மூலமாக தன் மோதிரத்தை ஸ்ரீராமன் சீதைக்கு அனுப்பினார். தனது அபய ஹஸ்தம்(ஆசி) எப்போதும் இருக்கிறது என்னும் செய்தியை அனுப்பினார். சீதை அதே அனுமனின் மூலமாக சூடாமணியை கொடுத்து அனுப்பினாள். இதன் மூலம், தான் ராமனுக்கு எப்போதும் தலை வணங்குகிறேன் என்ற செய்தியை அனுப்பினாள். அதைபோல், நாமும் அனுமன் மூலமாக அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்தால், ஸ்ரீஹரி தனது அபய ஹஸ்தத்தை நமக்குக் காட்டி அருளுவார் என்பதே முக்கியமான செய்தியாகும்.

**கே: தந்திரசார சங்க்ரஹத்தின்படி ராமச்சந்திரனை எப்படி வணங்கவேண்டும்?**

ப: ஷ்யாமம் ரவீந்திரமித தீதிதிகாந்தியுக்தம்
ஞானம் ஷரஞ்ச தததம் ப்ரியயா சமேதம் |
ஸ்வாத்மஸ்வ ரூபமமிதம் ஹனுமன்முகேஷு
சந்தர்ஷயந்தமஜிதம் ஸ்மரதோருகீர்பி: || 26 ||

பற்பல சூரியர்களைக் காட்டிலும் அதிகமாகப் பிரகாசிப்பவரும், பற்பல சந்திரர்களைக் காட்டிலும் அதிக ஒளி தருபவரும், ஞான முத்திரை, அம்புகளை கைகளில் தரித்திருப்பவரும், உயர்வான வேதவசனங்களால் அனுமன்

முதலானோர்க்கு தன் ஸ்வரூபத்தை உபதேசித்துக் கொண்டிருப்பவரும், மற்றவர்களால் வெற்றி கொள்ளப்படாதவரும், ஸ்யாம வண்ணத்தவரும், சீதாதேவியுடன் கூடியவரான ஸ்ரீராமசந்திரனை தியானியுங்கள்.

***

## 8. கிருஷ்ணன்

**கேள்வி: ஸ்ரீமன் நாராயணன் கிருஷ்ணனாக அவதரித்தது எதற்காக?**

பதில்: துஷ்டர்களைக் கொன்று, பக்தர்களை காப்பாற்றுவதற்காக.

**கே: இதற்கு எதற்கு பூலோகத்திற்கு வரவேண்டும்? அனைத்திலும் வல்லவரான ஸ்ரீஹரி, இருந்த இடத்திலிருந்தே இதை செய்திருக்கலாமே?**

ப: இதுவே அனைவருக்கும் இருக்கும் கேள்வி. ஆனால் இதற்கான விடை மிகவும் ஆச்சரியமாகவும், வியப்பாகவும் இருக்கும்.

**கே: அது என்ன?**

ப: தன் பற்பல லீலாவினோதங்களை, விளையாட்டு குணங்களையும் காட்டுவதே அவதாரத்தின் முக்கிய நோக்கமாகும். அவதாரம் செய்யவில்லையென்றால், பக்தர்கள் ஸ்ரீஹரியின் லீலைகளை, சரித்திரங்களை தாமே எப்படி நினைத்துப் பார்க்க முடியும்? ஸ்ரீகிருஷ்ணனின் கதை மிகவும் அழகானது. சுவாரசியமானது.

**கே: இரவு வேளையில் தைத்யரின் கட்டுப்பாட்டிலிருந்த சிறையில் ஏன் அவதரித்தார்?**

ப: இந்த சம்சார வாழ்க்கையே ஒரு சிறைச்சாலை. இங்கு இருட்டில் சிக்கிக்கொண்ட பக்தர்களை தான் இங்கேயே வந்து காப்பேன் என்று தெரிவிக்கிறார். அரக்கர்களின் நேரமான இரவு வேளையில் பிறந்து, நான் யாருக்கும் பயப்படுபவன் இல்லை என்றும் தெரிவிக்கிறார்.

**கே: ராமாவதாரத்தில் தாடகை என்னும் பெண்ணை முதலில் கொன்றார். கிருஷ்ணாவதாரத்திலும் பூதனி என்னும் பெண்ணையே முதலில் கொன்றார். இப்படி ஸ்த்ரி-ஹத்யா செய்வது தப்பில்லையா?**

ப: துஷ்ட பெண்களை கொல்லாமல் விடக்கூடாது என்னும் உத்தேசத்துடன், விஷத்தைக் கொடுக்கவந்த பெண்ணிடம் அதையே திருப்பிக் கொடுத்தான்.

**கே: பூதனி யார்?**

ப: தாடகை என்னும் அரக்கியே பூதனியாக வந்தாள். குபேரனிடம் சாபம் பெற்ற ஊர்வசி இந்த உருவத்தில் இருந்தாள். பூதனியைக் கொன்று, ஊர்வசியை சாபத்திலிருந்து விடுவித்தார் கிருஷ்ணர்.

**கே: பால், தயிர், வெண்ணெய் இவற்றையெல்லாம் திருடுவது, இவனின் மகிமைக்கு இழுக்கு அல்லவா?**

ப: பக்தர்கள் தன் பால்ய லீலைகளைக் கேட்டு மகிழ்ச்சி அடையவேண்டும். பாடி நடனமாட வேண்டும். இந்த உத்தேசத்துடன் ஸ்ரீஹரி பாலலீலைகளின் மூலம் மனங்களை குளிர்வித்தார். மற்றும் உலகத்தின் அனைத்து பொருட்களும் அவனுடைய சொத்தே ஆனதால், திருடுவது என்பதே இல்லை.

**கே: 16,108 பெண்களை திருமணம் செய்து கொள்ள என்ன கட்டாயம்?**

ப: நரகாசுரனை கொன்று, 16108 பெண்களை சிறையிலிருந்து மீட்டார். ஆனால் சமுதாயத்தில் அனைவரும் அந்தப் பெண்களை சந்தேகக் கண்ணோடு பார்க்கின்றனர், அவர்களை ஏற்றுக்கொள்ள யாரும் தயாராக இல்லை. அந்த எல்லாப் பெண்களின் வாழ்க்கையுமே அழியும் நிலை ஏற்பட்டது. ஆகையால், ஸ்ரீகிருஷ்ணன் அவர்கள் அனைவரையும் தானே திருமணம் செய்துகொண்டு, தன் பட்டத்து அரசிகளாக்கிக் கொண்டார். இவரின் இந்த கருணை யாருக்கு வரும்?

**கே: கிருஷ்ணனைப் போல நாமும் பற்பல பெண்களை ஏன் திருமணம் செய்யக்கூடாது?**

ப: கிருஷ்ணன் சர்வதந்த்ர ஸ்வதந்திரன். அவர் செய்ததை அஸ்வதந்த்ரர்களான நாம் செய்யவே கூடாது. அவரைப் போல் ஆயிரம் ரூபங்களை எடுக்கும் சாமர்த்தியம் நமக்கு எங்கு உள்ளது? பெரியவர்கள் செய்வதை நாமும் செய்யவேண்டும் என்றில்லை. சரி, ருத்ரதேவர் விஷம் குடித்தார். நாமும் முதலில் விஷம் குடிப்போமா? பிறகு மற்றதை பார்ப்போம்.

கொஞ்சமாவது கிருஷ்ணனின் கதையை புரிந்துகொள்ளாமல், அவரைக் கேலி பேசினால், அவரது லீலைகளைப் புரிந்துகொள்ளாமல் தப்பு அர்த்தம் கொண்டு, பல பெண்களை திருமணம் செய்தால், கடும் தண்டனையிலிருந்து தப்பமுடியாது.

**கே: ஸ்ரீஹரிக்கு எதற்கு பல பெண்களுடன் திருமணம்?**

ப: மகாலட்சுமியை விட்டு வேறு எந்த பெண்ணுடனும் ஸ்ரீஹரி திருமணம் செய்துகொள்லவில்லை. இந்த எல்லா பெண்களிடமும் லட்சுமியின் திவ்ய சன்னிதானம் இருந்தது. லட்சுமியின் சன்னிதானம் இருந்ததாலேயே, கிருஷ்ணன் அவர்களை திருமணம் செய்துகொண்டார்.

**கே: தாய் மாமனான கம்சனை ஏன் கொல்ல வேண்டியிருந்தது?**

ப: காலநேமி என்னும் மகா தைத்யனே கம்சன். பூதனி, சகடாசுரன், த்ருணாவர்த, பஸ்மாசுரன், பகாசுரன், உக்ராசுரன், தேனுகாசுரன், ப்ரலம்பாசுரன், சங்கசூடாசுரன், அரிஷ்டாசுரன், கேஷி, வ்யோமாசுரன் ஆகிய அசுரர்களை கிருஷ்ணனைக்

கொல்வதற்காக அனுப்பினான். அது மட்டுமல்லாமல் 20 அக்ஷோஹிணி சேனையை கிருஷ்ணனுக்கு எதிராக போர் புரிய அனுப்பினான். அபலையான தன் தங்கை தேவகியை சிறையில் அடைத்தான். இவன் ஒருவனை கொல்லாமல் உலகில் அமைதி நிலவ வாய்ப்பில்லை.

**கே: காலயவனனுக்குப் பயந்து ஓடியது எதற்காக?**

ப: கிருஷ்ணன் நிராயுதபாணியாக காலயவனனின் மூன்று கோடி அக்ஷோஹிணி சைன்யத்தை வென்றார். பிறகு தன் பக்தனான முசுகுந்தனை ரட்சிப்பதற்காக மற்றும் அவன் மூலம் காலயவனனைக் கொல்வதற்காக, காலயவனனை கொல்லாமல் முசுகுந்தனின் குகைக்கு ஓடிப் போனார்.

**கே: கிருஷ்ணனைக் கொல்லும் மகன் பிறக்கட்டும் என்று கர்காச்சாரியருக்கு ருத்ரதேவர் வரம் அளித்திருந்தார். அதன்படி பிறந்த காலயவனன், கிருஷ்ணனை கொல்லவேயில்லை. வரம் வேலை செய்யவில்லையே?**

ப: கிருஷ்ணன் காலயவனனுக்கு ஒரு பாம்பினை அனுப்பிவைத்தார். அதன் பெயரும் கிருஷ்ணன். பல எறும்புகளைக் கொண்டு காலயவனன் அந்த பாம்பினைக் கொன்றான். கிருஷ்ணன் என்னும் பாம்பினைக் கொன்றதால், ருத்ரதேவரின் வரம் வேலை செய்தது என்றே கொள்ளவேண்டும்.

**கே: ருக்மிணியை கடத்திச் சென்ற சம்பவம். இந்த கால வாலிபர்களுக்கு கெட்ட வழியைச் சொல்வது போல் உள்ளதே?**

ப: லட்சுமி மற்றும் விஷ்ணுவினை பிரிக்கும் சாமர்த்தியம் யாருக்கும் இல்லை. ஆனால், ருக்மி, சிசுபாலன் ஆகியோர் கெட்ட ஆலோசனைகளின்படி இத்தகைய செயலைச் செய்ய முயன்றனர். ருக்மிணி, கிருஷ்ணனை மட்டுமே தன் மனதில் வரித்திருந்தாள். கிருஷ்ணனும் ருக்மிணியை தன்னவளாக ஸ்வீகரித்து அருளினார்.

**கே: ருக்மிணியை கிருஷ்ணன் ஏன் கடத்தினார்?**

ப: இதிலிருந்து ஒரு பெரிய எச்சரிக்கையை விடுக்கிறார். ஸ்ரீஹரியை விட்டு லட்சுமியை மட்டும் பூஜித்தால் அல்லது ஸ்ரீஹரியை மறந்து செல்வத்தை மட்டும் சேர்த்தால் அப்படிப்பட்ட செல்வம் அனைத்தும் அழிந்துபோகும். விஷ்ணு மற்றும் மகாலட்சுமியை ஜோடியாக பூஜிக்கவேண்டும். சம்பாதித்த செல்வத்தை நற்காரியங்களுக்கு செலவழிக்கவேண்டும். ருக்மிணியை கடத்தியதிலிருந்து இந்த செய்திகள் நமக்கு தெரியவருகிறது.

**கே: ருக்மிணி கல்யாணம் பற்றி சொல்லுங்கள்.**

ப: பீஷ்மகனின் மகள் சாட்சாத் ஸ்ரீமகாலட்சுமி. இவளை ஸ்ரீஹரிக்கே சமர்ப்பணம் செய்யவேண்டும். ஆனால் ஜராசந்தன், ருக்மி ஆகியோர் ருக்மிணியை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்யாமல், சிசுபாலனுக்குக் கொடுத்து திருமணம் செய்ய முயன்றனர். ருக்மிணியை அபகரித்ததன் மூலம், ஸ்ரீஹரி அனைத்து துஷ்ட ராஜர்களின் வாழ்க்கையையும் அழித்தார். இதுவே அனைத்து மக்களுக்கும் ஸ்ரீகிருஷ்ணனின் எச்சரிக்கை / செய்தி. லட்சுமியை மட்டும் தனியாக பூஜை செய்வோருக்கு துக்கமே பிறக்கும். விஷ்ணுவினுடன் லட்சுமியை பூஜித்தால் மட்டுமே வேண்டியவற்றைப் பெற முடியும் என்று நிரூபித்தார்.

வாழ்க்கையில் நாம் பல்வேறு செல்வங்களை / பொருட்களைப் பெறுகிறோம். அவை அனைத்திற்கும் லட்சுமிதேவியே அதிகாரி. சம்பாதித்த அனைத்தையும் பக்தியுடன் ஸ்ரீஹரிக்கே சமர்ப்பணம் செய்யவேண்டும். லட்சுமியின் ஆசியுடன் வந்த செல்வங்களை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்வது நம் அனைவரின் கடமை. நாம் சம்பாதிக்கும் ஞானத்தையும்கூட, விஷ்ணுவின் மகிமையை பரப்பும் வண்ணம் செலவிடவேண்டும். பணம் செல்வங்களை விருந்தினரை வரவேற்று உபசரிப்பதில் செலவழிக்கவேண்டும். பெற்ற புகழை, கர்வம் கொள்ளாமல், ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ரிய குணங்களை மேலும் அறிவதில் செலவழிக்கவேண்டும்.

இப்படி அனைத்து வகை செல்வங்களையும் ஸ்ரீஹரிக்கே சமர்ப்பணம் செய்வதால், லட்சுமி நாராயணரின் திருமண மகிமை புரிய வரும். இப்படிப்பட்ட சிந்தனையே ஸ்ரீகிருஷ்ணன் - ருக்மிணியின் திருமண மங்களோத்ஸவம். இப்படிப்பட்ட உன்னத சிந்தனைகள் இல்லாமல், வெறும் சிலைகளை வைத்துக்கொண்டு, லட்சுமி நாராயணரின் திருமண உற்சவங்களைக் கொண்டாடினால், எந்தவித நற்பலன்களும் கிடைக்காது என்பதை அனைவரும் புரிந்துகொள்ளவேண்டும்.

**கே: ஸ்யமந்தகமணியை திருடியவன் என்று கருதப்படுபவனுக்கு ஏன் இவ்வளவு புகழ்?**

ப: பழி கொண்ட பக்தரின் பாவ பரிகாரத்திற்காக ஸ்யமந்தகமணி திருடியதாக ஸ்ரீகிருஷ்ணன் ஒரு நாடகம் ஆடினார். பிறகு பழி வந்தபோது அதை எப்படி தீர்த்துக்கொள்ளவேண்டும் என்பதையும் காட்டினார். இதனால், ஸ்ரீகிருஷ்ணனின் புகழ், பெருமை இவையெல்லாம் குறையவில்லை.

**கே: ஸ்ரீகிருஷ்ணன் கௌரவர்களின் இல்லங்களை ஏன் தன் சூழ்ச்சியினால் அழித்தார்?**

ப: பல தேவதைகள் மற்றும் தைத்யர்கள் உலகில் அவதாரம் செய்கின்றனர். தைத்யர்களைக் கொன்று, தேவதைகளுக்கு அருளுவதே ஸ்ரீகிருஷ்ணனின் வேலையாகும்.

**கே: உறவினர்களுக்கிடையே கலகத்தை ஏற்படுத்துவது தவறு இல்லையா?**

ப: உறவினால் சேர்ந்தால் அதனால் எந்த பலனும் இல்லை. மனதால் ஏற்படும் சம்பந்தமே முக்கியம். துஷ்டர்கள், உறவினால் மட்டுமே சேர்ந்த உறவினர் ஆவர். தன் மனங்களில் பரம விரோதிகள். ஸ்ரீஹரியை வெறுப்பவர்களாகவும் இருக்கின்றனர். இத்தகைய விரோதிகள் எங்கிருந்தாலும் ஸ்ரீஹரி விடுவதில்லை. கிருஷ்ணாவதாரம் நடைபெற்றதே இத்தகைய துஷ்டர்களை அழிப்பதற்காகத்தான்.

பரித்ராணாய சாதூனாம் வினாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்ம சம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகே யுகே ॥

**கே: பல துஷ்டர்களை ஸ்ரீகிருஷ்ணன் முறையற்ற (நேர்மையற்ற) வழியில் கொன்றிருக்கிறார். அல்லது கொல்வதாக முடிவு செய்கிறார். இது தப்பு இல்லையா?**

ப: பயங்கரவாதிகளை, திருடர்களை பிடிக்கும்போது சட்டம் எந்தவித தடைகளையும் போடுவதில்லை. அநியாய மார்க்கத்தில் அவர்களை கொன்றாலும் தப்பில்லை என்னும் சிந்தனை இன்றும் உள்ளது. அநியாய வழியில் வாழ்ந்தவர்களை அநியாய வழியிலேயே கொல்ல வேண்டும் என்பது ஸ்ரீஹரியின் சட்டம்.

**கே: ஜரா என்னும் வேடனின் அம்பிற்கு உயிரை விட்ட ஸ்ரீகிருஷ்ணனை எப்படி தேவன் என்று சொல்வது?**

ப: ப்ராக்ருத (அழியும்) உடல் இல்லாத ஸ்ரீகிருஷ்ணன், அஞ்ஞானிகளின் மோகத்திற்காக இத்தகைய நாடகங்களை பலமுறை நடத்தியிருக்கிறார். பரந்தாமத்திற்கு நுழையும்போது, ஒரு அழியும் உடலை உருவாக்கி, ஒரு அரச மரத்தின் கீழ் வைத்துவிட்டு, அப்ராக்ருத (அழிவில்லாத) உடலில் வைகுண்டத்தை அடைந்தார். அந்த ப்ராக்ருத உடலையே பிறகு அர்ஜுனன் எரித்தான். இதனை அறியாத அஞ்ஞானிகள், ஸ்ரீகிருஷ்ணனை சாதாரண மனிதன் என்று நினைத்து, அப்படி நினைத்ததாலேயே பெரிய துக்கங்களில் போய் வீழ்வார்கள்.

**கே: கிருஷ்ணன் எவ்வளவு ஆண்டுகள் உயிருடன் இருந்தார்?**

ப: 106 ஆண்டுகள் 2 மாதங்கள் ஸ்ரீகிருஷ்ணன் இந்த பூவுலகில் தன் மகிமைகளை லீலைகளை செய்தவாறு இருந்தார்.

**கே: கிருஷ்ணாவதாரத்தைப் பற்றி முழுமையாக தெரிவிக்கும் கிரந்தம் எது?**

ப: பாகவதத்தில் கிருஷ்ணனின் பால லீலைகள் முழுமையாக விவரிக்கப்பட்டுள்ளது. அதற்குப் பிறகான கதைகள், மகாபாரதத்தில் உள்ளது. இது மட்டுமல்லாமல், அனைத்து புராணங்கள், வேதங்களிலும் கிருஷ்ணனின்

கதைகளைக் காணலாம். ஸ்ரீகிருஷ்ணனின் நிர்துஷ்ட குணங்களை, ஸ்ரீமதாசார்யரின் தாத்பர்ய நிர்ணயத்தில் மிகத் தெளிவாக சொல்லியிருப்பதை படிக்கலாம்.

**கே: கிருஷ்ணனை மகிழ்ச்சிப்படுத்த நாம் என்னென்ன செய்யவேண்டும்?**

ப: பகவத்கீதை கிருஷ்ணனின் வாக்கு. அதிலும் 15வது அத்தியாயம். அதிலும் 'த்வாயியௌ புருஷௌ லோகே' என்னும் 4 ஸ்லோகங்கள் கிருஷ்ணனுக்கு மிகவும் பிடித்தவையாகும். இந்த 4 ஸ்லோகங்கள் சொல்லும் பொருளை அறிந்துகொண்டு, வாழ்க்கையில் விஷ்ணு சர்வோத்தமத்வத்தை அறிந்து, இப்பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்ளவேண்டும்.

**கே: ஸ்ரீகிருஷ்ணனை எப்படி நினைக்கவேண்டும்?**

ப: த்யாதேத்Sரின்மணினிபம் ஜகதேகவந்த்யம்
சௌந்தர்யசாரம் அரிஷங்க வராபயானி ।
தோபிர்ததானமஜிதம் சரசம் ச பைஷ்மீ
சத்யாசமேதம் அகிலப்ரதம் இந்திரேசம் ॥ 40 ॥

இந்திரநீல மணிக்கு ஒப்பானவர். அனைத்து உலகங்களும் வணங்கக்கூடியவர். 4 கைகளில் சக்ர, சங்கு, வர, அபய முத்திரைகளை தரித்திருப்பவர். யாராலும் வெல்லப்பட முடியாதவர். பக்தர்களுக்கு அருளுபவர். ருக்மிணி, சத்யபாமாவுடன் இருப்பவர். இத்தகைய ஸ்ரீலட்சுமிபதியான ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

***

# 9. புத்தன்

**கேள்வி: புத்தாவதாரம் நடந்தது எப்போது?**

பதில்: கலியுகம் பிறந்து ஓராயிரம் ஆண்டுகள் ஆன பிறகு.

**கே: புத்தாவதாரத்தின் நோக்கம் என்ன?**

ப: த்ரிபுராசுரர்கள் ருத்ரரால் கொல்லப்பட்ட பிறகு, பூமியில் மறுபடி பிறந்தனர். நல்ல தத்வஞானத்தைப் பெற்று மோட்ச சாதனைக்கு செல்ல முற்பட்டனர். பற்பல துஷ்டர்களுக்கும் தத்வஞான உபதேசத்தைக் கொடுக்கத் துவங்கினர். இவர்களை அப்படிச் செய்யாமல் தடுக்க நடந்ததே புத்தாவதாரம்.

**கே: அசுரர்கள் தத்வஞானத்தைப் பெற்றால் மகிழ்ச்சி அடையவேண்டும். அதை விட்டு, அவர்களை தடுப்பது ஏன்?**

ப: புனிதமான தத்வஞானம் துஷ்டர்களுக்கு என்றும் போய் சேரக்கூடாது. ஏதாவது செய்து அவர்கள் தத்வஞானத்தைப் பெற்றாலும், என்றாவது ஒரு நாள் கெட்ட காரியங்களை செய்தே தீருவர். ஆகையால், தத்வஞானம், மோட்சத்திற்கான வழிகள் ஆகியவை துஷ்டர்களுக்குக் கிடைக்கக்கூடாது என்று ஸ்ரீஹரி தக்க செயல்களை செய்கிறார்.

**கே: புத்தாவதாரத்தின் பின்னணி என்ன?**

ப: துர்ஜனர்களிடம் இருக்கும் ஞானத்தை அழிக்கவேண்டுமென்று தேவர்கள், ஸ்ரீமன் நாராயணனிடம் சென்று முறையிட்டனர்.

**கே: புத்தாவதாரம் எப்படி நடந்தது?**

ப: 'புத்தோ நாம்னா ஜனசுத: கேகடேஷு பவிஷ்யதி' என்னும் பாகவதத்தின் வாக்கியத்திற்கேற்ப த்ரிபுராசுரர்களில் முதலாமவன் சுத்தோதன என்னும் பெயரில் பிறந்தான். அவனின் மகனாக ஸ்ரீஹரி அவதரித்தார்.

**கே: அசுரர் குலத்தில் விஷ்ணுவின் அவதாரம் எப்படி நடந்தது?**

ப: இது சரியல்ல. அசுரர் குலத்தில் விஷ்ணு அவதாரம் செய்யவில்லை. அப்போதே பிறந்திருந்த அசுர குழந்தையை மாற்றி அந்த இடத்தில் ஒரு

குழந்தையாக விஷ்ணு படுத்துக்கொண்டார். அதைத் தெரியாத அவர்கள், விஷ்ணுவையே தங்கள் குழந்தையாக வளர்த்து வந்தார்கள்.

**கே: தசாவதாரத்தில் இருக்கும் புத்தன் வேறு. இப்போது உலகத்தில் புகழ் பெற்று இருக்கும் கௌதம புத்தர் வேறு என்று பலரும் சொல்கின்றனர். இப்படியிருக்கும்போது, விஷ்ணுவை சுத்தோதனனின் மகன் என்று எப்படி சொல்கிறீர்கள்?**

ப: சுத்தோதனின் மகனின் இடத்தில் குழந்தையாக காண்பித்துக்கொண்ட விஷ்ணுவின் ரூபமே, தசாவதாரத்தில் சேர்ந்திருக்கும் புத்தன். சுத்தோதனின் நிஜமான குழந்தையாக இருந்தவரே கௌதம புத்தர். இருவரையும் ஒருவரே என்று நினைப்பது தவறு. இந்த விஷயத்தில் ஸ்ரீமதாசார்யர் தெளிவாக கூறுகிறார். 'சுத்தோதனனேத்யேவ ஜெனேऽபி ஜோக்த:' என்று தாத்பர்ய நிர்ணயத்தில் 32வது அத்தியாயத்தில் கூறுகிறார். புத்தனாகி அவதரித்த விஷ்ணு பூலோகத்தில் அதிக காலம் இருக்கவில்லை. தன் வேலை முடிந்ததும், சுவர்க்கத்தில் தேவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டி புறப்பட்டுவிட்டார். பிறகு சுத்தோதனன் ஜினன் என்று அழைக்கப்பட்டதாக பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது.

**கே: அவதரித்தவுடன் புத்தன் என்ன செய்தார்?**

ப: அனைவரும் பின்பற்றும் வைதிக காரியங்களைக் கண்டு சத்தமாக சிரிக்கத் துவங்கினார்.

**கே: பிறந்த குழந்தை சிரிப்பதைக் கண்டு ஜினன் முதலானவர்கள் வியப்படையவில்லையா?**

ப: ஆம். நீ யார் என்று கேட்டனர். அனைத்தையும் அறிந்தவன் ஆகையால் 'நான் புத்தன்' என்று குழந்தை பதில் அளித்தது. குழந்தையின் பதிலைக் கேட்ட அனைவரும் வாயடைத்துப் போயினர்.

**கே: அனைத்து அசுரர்களுக்கும் புத்தன் என்ன உபதேசித்தார்?**

ப: அனைத்தும் அழியக்கூடியவையே. அனைத்தும் தற்காலிகமானவையே. அனைத்தும் அசத்யமானவையே என்று உபதேசித்தார்.

**கே: தேவர்கள் புத்தனுடன் ஏன் போர் புரிந்தனர்?**

ப: இது ஒரு நாடகம். அங்கிருந்த அசுரர்களுக்கு தன் முக்கியத்துவத்தை தெரிவிப்பதற்காக நடத்தப்பட்ட நாடகம் இது. விஷ்ணுவும் புத்தனிடம் தோற்றுப் போனதாக நாடகம் ஆடினார்.

**கே: சுதர்சன சக்கரத்தின் மேல் புத்தன் அமர்கிறான் என்கிற கதையின் பின்புலம் என்ன?**

ப: தேவர்கள் புத்தன் மேல் ஆயுதங்களை பிரயோகித்தபோது, புத்தன் அவற்றை விழுங்கிவிட்டார். சுதர்சன சக்கரத்தை விஷ்ணு ஏவியபோது, அதையும் உடனே பிடித்து, ஆசனம் போல் செய்து அதன் மேல் அமர்ந்தார். 'நீயே சர்வோத்தமன்' என்று தேவர்கள் அனைவரும் கூறி, தங்கள் இருப்பிடத்திற்கு திரும்பினர். ஜினன் முதலான தைத்யர்கள் புத்தனின் பேச்சுகளை உண்மையென்று நம்பினர்.

**கே: சத்யஸ்வரூபனான விஷ்ணுவே புத்தனாக இருக்கிறான். புத்தனாக இருக்கும்போது பொய்யான தர்மத்தை உபதேசித்தது எப்படி சரியாகும்?**

ப: ஸ்ரீஹரி எப்போதும் பொய் பேசுவதில்லை. புத்தனின் பேச்சுகளைக் கேட்டு, அசுரர்கள் தர்மங்களை விட்டது அவர்கள் சரியாகப் புரிந்துகொள்ளாததாலேயே. அனைத்தும் சூன்யம் என்பது புத்தனின் நிஜமான கருத்து அல்ல.

**கே: இதை எப்படி சொல்கிறீர்கள்?**

ப: தான் நினைத்ததை புத்தன் தேவர்களிடத்தில் சொல்லியிருக்கிறார். அவர் பேச்சுகளின் நிஜமான பொருளை தேவலோகத்தில் தேவர்களிடம் விளக்கினார். இதுவே 'பிரஷாந்தவித்யா' என்று பிரபலமாயிற்று.

**கே: புத்தரூபியான விஷ்ணு ஜடமான இந்த உலகத்தை ஞானம் என்று கூறினார். இது எப்படி?**

ப: 'ஞா' - அனைத்தையும் அறிந்த ஸ்ரீஹரியிடமிருந்து 'அன' - உலகம் ஊக்கத்துடன் வளர்கிறது. ஆகையால் இந்த உலகமானது ஞானரூபம் என்றே பொருளாகுமே தவிர ஜடஸ்வரூபம் என்று பொருளல்ல.

**கே: அனைத்து உலகமும் சூன்யம் என்று புத்தன் கூறினார். இதன் பொருள் என்ன?**

ப: சூன்யன் என்று பெயர் கொண்ட ஸ்ரீஹரியிடமிருந்து தோன்றி வளர்வதால், இந்த உலகத்திற்கு சூன்யம் என்று பெயர். இதுவே இதன் நிஜமான பொருள்.

**கே: 'அசத்' மற்றும் 'அபாவ' என்றால் என்ன?**

ப: அ என்றால் ஸ்ரீஹரி. அவனால் அழியக்கூடியதாக இருப்பதால் இந்த உலகம் அசத் எனப்படுகிறது. அ என்னும் ஸ்ரீஹரியிடமிருந்து உலகம் தோன்றியதால், அபாவ எனப்படுகிறது.

**கே: புத்தனிடமிருந்து எவ்வளவு மதங்கள் தோன்றின?**

ப: ஜைன மதம் தோன்றியது இதே புத்தனிடமிருந்து. பௌத்த மதத்தில்கூட நான்கு பிரிவுகள் தோன்றின. புத்தனின் ஒரே சொற்பொழிவைக் கேட்டு, பலரும் பற்பல மதங்களை துவக்கினர்.

**கே: 'பத்தலெ நிந்தஹ பௌத்தனிகே' என்று தாசராயர் கூறியிருக்கிறார். புத்தன் ஏன் நிர்வாணமானான்?**

ப: தேவலோகத்தில் த்ரிபுராசுரர்களைக் கொல்வதற்காக புத்தன் அவரது மனைவியரின் முன் நிர்வாணமானான். இப்படி செய்ததன் மூலம் த்ரிபுராசுரர்களைக் கொன்றான்.

**கே: ராமானுஜரின் மதத்தவர் புத்தனை தசாவதாரத்தில் சேர்ப்பதில்லை. ஏன்?**

ப: மேலே சொன்னதைப் போல, புத்தனின் பேச்சுக்களைக் கேட்ட சிலர், இவர் ஸ்ரீஹரியே அல்ல என்று கூறினர். ஆகையால், ராமானுஜ மதத்தவரும் புத்தரை ஸ்ரீஹரியின் அவதாரம் என்று ஒப்புக்கொள்ளாமல் தசாவதாரத்தில் சேர்க்காமல், பலராமனை தசாவதாரத்தில் சேர்த்து, தமக்கென்று ஒரு தனி வழியை தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.

**கே: மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ஹ, வாமன, பரசுராம, ராம, கிருஷ்ண, புத்த, கல்கி - இவையே தசாவதாரங்கள் என்று நாம் தெரிந்திருக்கிறோம். இதில் வேறு எதுவும் பிரச்னை இருக்கிறதா?**

ப: ஆம். வங்காள தேசத்தில் கிருஷ்ணனை தசாவதாரத்தில் சேர்ப்பதில்லை. 'கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம்' என்ற வாக்கியப்படி கிருஷ்ணன் மூலரூபியானவன். மத்ஸ்ய, கூர்ம, வராகன் ஆகியன கிருஷ்ணனின் அவதாரங்கள் என்கின்றனர். இப்படியாக தசாவதாரங்களில் பல குழப்பங்கள் உள்ளன. ஆனால் ஸ்ரீமதாசார்யர், புராணங்களின் ஆதாரங்களின்படி தசாவதாரத்தை தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

**கே: புத்தன் சாக்ஷாத் ஸ்ரீஹரியே என்றான பிறகு அவரின் உபாசனா முறைகள் ஏன் சரியாக சொல்லப்படவில்லை?**

ப: புத்தாவதாரம் நம் காலத்திற்கு மிக அருகில் நடந்த ஒரு அவதாரம். அவரின் பேச்சுகள் / உபதேசங்கள் நம்மை மயக்குவதாக இருப்பதால், அவற்றை தவறாக புரிந்துகொள்ளக்கூடிய வாய்ப்புகள் அதிகம். ஆகவே தத்வஞானத்தை நிலைநிறுத்த கிருஷ்ணாவதாரத்தைப் பூஜிப்பதே வழக்கமாக இருக்கிறது. அதுவே நம் பழக்கமாகவும் ஆகியுள்ளது.

**கே: ஸ்ரீஹரியின் புத்தன் என்னும் ரூபத்தை எப்படி சிந்தனை செய்து பூஜிப்பது?**

ப; பௌத்தாவதாரத்தின் உபதேசங்களின் மூலம், தாமஸர்களுக்கு மித்யாஞானத்தை அளித்து, பிரஷாந்தவித்யா மூலம் தேவர்களை ரட்சித்த சர்வக்ஞனான புத்தனை தசாவதாரங்களின் நடுவில் சிந்தனை செய்து பூஜிக்கவேண்டும்.

**கே: புத்தாவதாரத்தை ஸ்ரீவாதிராஜர் தனது தசாவதாரஸ்துதியில் எப்படி வர்ணித்திருக்கிறார்?**

ப: புத்தாவதாரகவி புத்தானுகம்பகுரு பத்தாஞ்சலௌ மயி தயாம்
ஷௌத்தோதனிப்ரமுக ஸைத்தாதிகாசுகம பௌத்தாகம ப்ரணயன |
க்ருத்தாஹிதாஸூஹ்ருதி ஸித்தாஸிகேடதர ஷுத்தாஷ்வயான கமலா
ஷுத்தாந்தயாம்ருசிபி னத்தாகிலாங்க நிஜமத்தாऽவ கல்க்யபித போ: || 32 ||

முன்னர் உலகத்தில் பல அசுரர்கள் தோன்றினர். அவர்கள் அனைவரும் வைதிக தத்வஞானத்தையே பின்பற்றினர். அதனால் பாலில் விஷம் கலந்ததுபோல், தத்வஞானமே அழியும் நிலை ஏற்பட்டது. அப்போது சுத்தோதனன் என்னும் ராஜனுக்கு ஒரு மகன் பிறந்தான். அந்த குழந்தையை மாற்றிவிட்டு, ஸ்ரீஹரி குழந்தையாக அவதாரம் எடுத்து அங்கு படுத்துக்கொண்டான். உலகத்தில் சூன்யம், அனைத்தும் தற்காலிகமானவை / அழியக்கூடியவை மற்றும் பொய் என்று உபதேசித்தார். தாம் உபதேசித்த அனைத்தும் உண்மையே என்று அனைவரையும் நம்பவைத்தார். தேவர்களுடன் போர் புரிந்து அவர்கள் எய்த பாணங்களை முழுங்கினார். சுத்தோதனன் முதலானோர் இந்த குழந்தை சொல்லும் மதமே உண்மை என்று நம்பி, வைதிக மார்க்கத்தை விட்டுவிட்டனர். சொர்க்கத்தில் இந்த புத்தன் தேவர்களுக்கு உண்மையான ஞானத்தை உபதேசித்தார். அதுவே பிரஷாந்த வித்யா என்று பெயர்கொண்டு புகழ்பெற்றது. பூலோகத்தில் உபதேசித்த பொய்யான ஞானமே புத்தமதம் என்று பரவிற்று. ஞானிகளில் சிறந்தவனே, கருணையுடையவனே, புத்தாவதாரியான ஸ்ரீஹரியே, நான் கை கூப்பி உன்னை வேண்டுகிறேன்.

இப்படியாக ஸ்ரீவாதிராஜ குருசார்வபௌமர் புத்தாவதாரியான ஸ்ரீஹரியை மனமுருகி வேண்டுகிறார்.

**கே: புத்தாவதாரம் நமக்கு சொல்லும் செய்தி என்ன?**

ப: த்ரிபுராசுரர்கள் ருத்ரதேவரால் கொல்லப்பட்டிருந்தனர். அவர்கள் மறுபடி பூமியில் பிறந்தனர். உத்தமான தத்வஞானத்தைப் பெற்றனர். நைவேத்தியம் செய்யப்பட்ட புனித உணவில் நாய் வாய் வைத்ததைப் போல், அவர்கள் தத்வஞானத்தைப் பெறுவதற்கு முற்பட்டனர். தத்வஞானிகள் என்றும் அழியக்கூடாது என்பது ஸ்ரீஹரியின் கட்டளை. அதைபோலவே அயோக்கியர்கள் என்றும் நற்கதியைப் பெறக்கூடாது என்பதே ஸ்ரீஹரியின் விருப்பம் ஆகும். இப்படிப்பட்ட துஷ்டர்களை அழித்து, சஜ்ஜனர்களுக்கு அருளுவதற்காக ஸ்ரீஹரி புத்தனாக அவதரித்தார். நாம் பெற்ற தத்வஞானத்தை நல்லபடியாக

மற்றவர்களுக்கு வழங்கவேண்டும். எந்த காரணத்தாலும் அதை கெட்டவர்களுக்கு உபதேசிக்கக்கூடாது. இதற்காக புத்தாவதாரத்தை நிரந்தரமாக சரணடைந்து வணங்கவேண்டும்.

***

## 10. கல்கி

**கேள்வி: கல்கி அவதாரம் எப்போது?**

பதில்: கலியுகத்தின் இறுதி காலத்தில்.

**கே: ஸ்ரீஹரி எங்கு கல்கியாக அவதரிப்பார்?**

ப: ஷம்பள க்ராமமுக்யஸ்ய ப்ராம்ஹணஸ்ய மஹாத்மன: |
பவனே விஷ்ணுயஷஸ: கல்கி: ப்ராதுர்பவிஷ்யதி ||

ஷம்பளம் என்னும் கிராமத்தில், விஷ்ணுயஷஸ் என்னும் பிராமணரின் வீட்டில் ஸ்ரீஹரி 'கலி' என்னும் ரூபத்தில் அவதரிப்பார்.

**கே: அவதாரத்தின் நோக்கம் என்ன?**

ப: கலியின் தாக்கத்தால் பூமியில் எல்லா இடங்களிலும் திருடர்களே நிறைந்திருப்பர். அவர்கள் அனைவரையும் கொல்வதே அவதாரத்தின் முக்கிய நோக்கமாகும்.

**கே: அவர்களை கல்கி எப்படி அழிப்பார்?**

ப: குதிரையில் வாளை ஏந்தியவாறு, அனைத்து ஐஸ்வர்யங்களாலும் நிறைந்த கல்கியானவர், பூமியில் நிறைந்திருக்கும் திருடர்களை அழிப்பார்.

**கே: எவ்வளவு நேரத்தில்?**

ப: வெறும் 12 மணி நேரத்தில், லட்சக்கணக்கான ஆண்டுகளாக இருந்த கழிவுகளை துடைத்தெறிந்து, அனைத்து துஷ்டர்களையும் கொன்றழிப்பார்.

**கே: சஜ்ஜனர்களின் நிலைமை?**

ப: இரவு வேளையில் சஜ்ஜனர்கள் தூங்கிக் கொண்டிருக்கும்போது, தன் உடலிலிருந்து சந்தனத்தை உற்பத்தி செய்து, அந்த சந்தனத்தால் சஜ்ஜனர்களின் மனதில் இருக்கும் கெட்ட எண்ணங்களை துடைத்து அழிப்பார்.

**கே: அனைத்து துஷ்டர்களும் அழிந்தபிறகு என்ன நடக்கும்?**

ப: அடுத்த நாள் க்ருதயுகம் துவங்கும்.

**கே: கலியுகத்தின் முடிவில் பிரளயம் வருமா?**

ப: அல்ல. பிரளயம் வராது. பூமி அழியாது. கல்கி அனைத்து துஷ்டர்களையும் அழிப்பார். க்ருதயுகத்தின் துவக்கத்திற்கு உந்துசக்தியாக இருப்பார்.

**கே: கல்கி அவதாரத்தின் கதையை சுருக்கமாக கூறவும்.**

ப: கலியின் ஆவேசத்தால் எல்லா இடங்களிலும் அதர்மம் தலைவிரித்தாடும். பூமிதேவி மிகவும் துக்கமடைவாள். பூமிதேவியின் துக்கத்தை அறிந்து, பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீமன் நாராயணனிடம் சென்று முறையிடுவர். சஜ்ஜனர்களின் ரட்சணைக்காக 'கல்கி' என்னும் பெயரில் அவதாரம் செய்து ஸ்ரீஹரி பூமிதேவியின் துக்கத்தைப் போக்குவார்.

விஷ்ணுவின் தசாவதாரங்களில் கடைசியானது கல்கி. கலியுகம் மற்றும் க்ருதயுகத்தின் நடுவில் விஷ்ணுயஷஸ் மற்றும் சுமதி என்னும் தம்பதிகளுக்கு 'கல்கி' என்னும் பெயரில் அவதாரம் செய்வார். பரசுராமரிடமிருந்து அனைத்து கல்விகளையும் கற்று பெருமை அடைவார். இவரது பெருமையை மெச்சி, ருத்ரதேவர் இவருக்கு வாள் மற்றும் குதிரையை அளிப்பார். பின்னர் சிங்களத்தீவின் ராஜனான ப்ருஹத்ரதனின் மகளான பத்மாவதியை திருமணம் செய்வார்.

பூமியின் அனைத்து பாகங்களிலும் வியாபித்திருக்கும் கலியை முற்றிலுமாக அழிப்பார். ஒரே நாளில் அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநிறுத்தும் கல்கியின் சக்தி நம் கற்பனைக்கு எட்டாதது. கலியுகத்தின் கடைசி நாளில், கலியை அழித்து, க்ருதயுகத்தின் துவக்கத்தில் அனைத்து சஜ்ஜனர்களுக்கும் தர்மத்தின் வழியைக் காட்டும் அவதாரமே 'கல்கி'.

**கே: கல்கியை எப்படி பூஜிக்க வேண்டும்?**

ப: 'கல்கி கலே: காலமலாத் ப்ரபாது' கலியின் தாக்கத்தால் உருவான கழிவுகள் அனைத்தையும் துடைத்தெறிந்து, என்னை தூய்மைப்படுத்து என்று வணங்கவேண்டும்.

தசாவதாரத்தின் கடைசி ரூபத்தை பலமுறை வணங்குவோம். ஒவ்வொரு நொடியும் நமக்குள் தோன்றும் கெட்ட சிந்தனைகளை அழித்து, நல்ல எண்ணங்களை வளர்க்குமாறு அவனை சரணடைவோம்.

தசாவதாரத்தில் ஸ்ரீஹரி காட்டிய பல்வேறு லீலாவினோதங்களை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நொடியும் நினைத்து மகிழ்ச்சியடைந்து, மனதில் ஸ்ரீஹரியையே நினைத்தவாறு, தசாவதாரத்தின் சிந்தனையை ஸ்ரீமத்வமடத்தின் ஸ்ரீகிருஷ்ணனுக்கு சமர்ப்பணம் செய்வோமாக.

**கே: கல்கி அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: அதர்மம் தலைவிரித்தாடும்போது, ஸ்ரீஹரி கல்கியாக அவதாரம் செய்து, தர்மத்தை நிலைநாட்டுவார். இது பிரம்மாண்டத்தைப் (உலகத்தைப்) பற்றிய விஷயம். பிண்டாண்டத்தில் (நம் உடலில்) பிரம்மாண்டத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் மட்டுமே அவதாரங்களைப் பற்றி சிந்தித்ததன் பலன் கிடைக்கும். நம் மனதில் இருக்கும் அதர்ம, அநியாய, ஆதாரம் இல்லாத சிந்தனைகள் ஆகிய கெட்ட குணங்கள் கலியாக தலைதூக்கும்போது, ஸ்ரீஹரி அவற்றை அழிப்பதற்காக கல்கியாக வரவேண்டும். பூமிதேவியைப்போல் நம் புத்தியும் (அறிவு), பிம்பரூபியான ஸ்ரீமன் நாராயணனிடம் முறையிட வேண்டும். அப்போது, ஜீவாத்மா என்னும் குதிரையில் ஏறி, மெய்யறிவு (ஞானம்) என்னும் வாளை ஏந்தி, மனதில் தலைதூக்கும் கலியை அழித்து, ஸ்ரீஹரி கல்கியாக காட்சி தருவார். இத்தகைய கல்கியின் அவதாரத்தை தினமும் நம் மனதில் நினைத்து அவனை வணங்கவேண்டும்.

**கே: கல்கி அவதாரத்தின் சிறப்பு என்ன?**

ப: கலியை அழிப்பதனால் கல்கி என்னும் பெயரைப் பெற்றார். கலியுகத்தில் உள்ள அனைத்து சஜ்ஜனர்களுக்கும் இந்த கல்கிரூபியான ஸ்ரீஹரியே ஆதரவு/ கதியாக இருக்கிறார். கலியுகத்தின் சஜ்ஜனர்களுக்கு கல்கி அவதாரம் கடைசியானது. க்ருதயுகத்தின் சஜ்ஜனர்களுக்கு இதுவே முதலாவதாகும். த்வாபர மற்றும் கலியுகத்தின் சந்தியில், ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்து அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநாட்டினார். கலியுகம் மற்றும் க்ருதயுகத்தின் சந்தியிலும் இதே ஸ்ரீஹரி, அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவார். அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநாட்டுபவரான கல்கி ரூபியான ஸ்ரீஹரியை நாம் எப்போதும் நினைக்கவேண்டும்.

நம் மனதில் தசாவதாரங்கள் நிலைத்திருக்க வேண்டும். முதலில், வேதங்களிலிருந்து ஞானத்தைப் பெற்று நம் மனதை நிறைக்கவேண்டும். அதற்காக மத்ஸ்யாவதாரம் ஆகவேண்டும். ஞானத்தின் எடையினால் மனம் அமிழ்கிறது. அதை மேலெடுக்க வேண்டுமெனில், கூர்மாவதாரம் ஆகவேண்டும். ஹிரண்யன் என்னும் கெட்ட சிந்தனையின் அழிப்பிற்காக வராகன் பிறக்கவேண்டும். பக்தி என்னும் பிரகலாதனை அருளுவதற்காக நரசிம்மர் அவதரிக்கவேண்டும். ஒவ்வொரு பொருளை சம்பாதிக்கும்போதும் உண்டாகும் கர்வத்தை அழிக்க, வாமனனின் சிறிய பாதங்கள் நம் மனதில் தோன்ற வேண்டும். பற்பல துர்குணங்கள் என்னும் க்ஷத்ரியர்களை அழிக்க கோடலி பிடித்த ராமன் ஓடி வரவேண்டும். பிறகு நம் மனதில் ராமன் மற்றும் கிருஷ்ணன் இருவரும் வந்து அமரவேண்டும். இவர்கள் நம் மனதில் இருப்பதற்கு பிரச்னை ஏற்பட்டால், புத்தன் மற்றும் கல்கி ரூபங்கள் நம்மை ரட்சிக்கவேண்டும்.

***

## 11. புருஷ

**கேள்வி: புருஷாவதாரத்தின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

பதில்: பிரளயகாலத்தில் பரமாத்மா தனி ஒருவனாக தானே படுத்திருந்தார். இவரை 'சூன்ய' என்னும் பெயரில் சாஸ்திர கிரந்தங்கள் அழைக்கின்றன. இந்த சூன்ய நாமக ஸ்ரீஹரிக்கு உலகத்தைப் படைக்க வேண்டும் என்ற எண்ணம் உதித்தது. அப்போது எங்கும் சூழ்ந்திருந்த இருட்டை விலக்கி தன்னை 'சூன்யன்' என்ற பெயருடன் எல்லா இடங்களிலும் வெளிப்படுத்தினார். பெரிய உலகத்தை ஸ்ருஷ்டி செய்து அதில் புருஷ ரூபனாக தான் விஸ்வரூபம் எடுக்கவேண்டும் என்று எண்ணினார். பிறகு 24 தத்வங்களையும் மற்றும் உலகத்தையும் ஸ்ருஷ்டித்து சேஷசாயியாக படுத்தார்.

இவரே பத்பனாபன். இவரின் நாபியிலிருந்து 24 இதழ்களையுடைய ஒரு தாமரை மலர்ந்தது. அந்த தாமரையிலிருந்து நான்முக பிரம்மன் தோன்றினார். அந்த பத்பனாப ரூபத்திலிருந்து நாராயண, வாசுதேவ, வைகுண்ட என்ற மூன்று ரூபங்கள் அனந்தாசன, ஸ்வேதத்வீப, வைகுண்டம் ஆகிய இடங்களில் வெளிப்பட்டன. இந்த ரூபங்களுக்கு முன்னர், மத்ஸ்ய கூர்மாதி ரூபங்கள் வெளிப்பட்டன.

முதன்முதலில் பத்பனாப ரூபத்திலிருந்து வெளிப்பட்ட ரூபமே 'சனத்குமாரன்'. சனகாதி முனிவர்களுக்கெல்லாம் பிரம்மசரியத்தை உபதேசித்த முதல் அவதாரம் இதுவே. அதன்பிறகு, வராக, மஹிதாஸ, ஐதரேய, நாராயண ஆகிய ரூபங்களை எடுத்தார். நர, ப்ருது, பலராம என்னும் மூன்று ஆவேச அவதாரங்களையும் எடுத்தார். இந்த மூன்று அவதாரங்களைத் தவிர, மற்ற அனைத்தும் ஸ்ரீஹரியின் ஸவரூப அவதாரங்கள் என்றே அழைக்கப்பட்டன. இந்த அனைத்து அவதார ரூபங்களுக்கும் பிம்பமூர்த்தியில் வேறுபாடு இல்லை. ஆகையால் மத்ஸ்ய, கூர்ம ஆகிய அவதாரங்கள் ஸ்ரீஹரியின் ஸ்வரூப அவதாரங்கள் எனலாம். பிரம்மாதி ஜீவர்கள் அனைவரும் பிரதிபிம்பர்கள் ஆவர். ஜடப் பொருட்களை பிரதிமை ரூபங்கள் எனலாம்.

**கே: ஸ்ரீஹரியின் முதல் அவதாரம் 'புருஷ' என்று சிலரும், 'சனத்குமார' என்று சிலரும் சொல்கின்றனர். இதில் எது சரி?**

ப: புருஷ என்னும் ரூபமே முதலாவதாகும்.

ஆத்யோSவதார புருஷ: பரஸ்ய
கால;ஸபாவ: ஸதஸன்மனஸ்ச ।
த்ரவ்யம் விகாரோ குண-இந்திரியாணி

விராட் ஸ்வராட்ஸ்தாம்ஸு சரிஷ்ணு பூம்ன: ||

கால, ஸ்வபாவ அபிமானிகள், முக்யபிராணர், லட்சுமி, மனஸ், பஞ்சபூதங்கள், உலகம், சத்வம் முதலான குணங்கள், பத்து இந்திரியங்களின் அபிமானி தேவதைகள், கருடன், இந்திரன், அசையும் மற்றும் அசையா பொருட்கள் ஆகிய அனைத்தும் இந்த புருஷ நாமக ஸ்ரீஹரியின் ஸ்வரூபம் இல்லை என்றாலும், புருஷனுக்கு மிகவும் பிடித்தவை ஆகையினால் 'புருஷ' என்றே அழைக்கப்பட்டன. இதனாலேயே முதலாவது அவதாரம் 'புருஷ' என்று சொல்லலாம். மேலும் ஸ்ரீஹரி ஸ்ருஷ்டி செய்யும் எண்ணத்தில் மஹத்தத்வம் மற்றும் 16 கலைகளுடன் கூடிய 'புருஷ' என்னும் ரூபத்தை எடுத்தார் என்று சொல்லப்படுகிறது.

**கே: சனத்குமார என்னும் அவதாரமும் முதலாவதே என்று இந்த பாகவத ஸ்லோகம் சொல்கிறது.**

**ஸ ஏவ ப்ரதமம் தேவ: கௌமாரம் ஸர்வமாஸ்தித: |**
**சசார துஸ்சரம் ப்ரம்ஹா ப்ரஹ்மசர்யமகண்டிதம் ||**

**சனத்குமார் அவதாரம் முதலாவதாகும். இவன் அனைத்து நற்குணங்களால் நிரம்பி, பிரம்மசர்யத்தை பின்பற்றுபவனாக, சனகாதிகளுக்கு உத்தமமான குரு என்று அழைக்கப்பட்டான் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் சனத்குமார அவதாரம்கூட முதலாவதாகும் என்று சொல்லலாம் அல்லவா?**

ப: உலகத்தை ஸ்ருஷ்டிப்பதற்கு முதலாக 'சூன்ய' என்ற பெயருடன் முதலில் எடுத்த ரூபம் 'புருஷ' என்னும் ரூபம். உலகத்தின் உள், சேஷசாயியாக பத்பனாப ரூபத்தில், முதன்முதலில் வெளிக்கொணர்ந்த ரூபம் 'சனத்குமார' ரூபம். ஆகையால் உலகத்தின் வெளியில் முதலில் புருஷ ரூபமே ஆகும். உள்ளில் முதலில் சனத்குமார ரூபம். இதில் எந்தவித குழப்பமும் இல்லை.

**கே: முதல் அவதாரம் புருஷன் என்றது சரி. ஆனால், காலம், ஸ்வபாவம் ஆகியவையும் ஸ்ரீஹரியின் ரூபங்களே. பிரம்மாதிகள் ஸ்ரீஹரியின் ஆவேச அவதாரங்களாயினர். 'ஆத்யோSவதார: புருஷ:' என்று மேலே சொல்லப்பட்ட ஸ்லோகத்தைப் பார்க்கும்போது இது தெரிகிறது. ஆகையால், பிரம்மன் முதலாதவர்களும் ஸ்ரீஹரியின் அவதாரங்களே என்று சொல்லலாமா?**

ப: 'புருஷ: தஸ்யைவ ஆத்யோSவதார:' என்ற பத்மபுராணத்தின் ஆதாரத்தில் புருஷன் மட்டுமே ஸ்ரீஹரியின் ஸ்வரூப அவதாரமே தவிர காலம் முதலானவை அல்ல என்று தெளிவாகத் தெரிகிறது. ஜடப்பொருட்களான காலம் முதலானவையும், அவற்றின் அபிமானி தேவதைகளாகட்டும் ஸ்ரீஹரியின் ஆவேச அவதாரங்கள் ஆவதற்கு சாத்தியமே இல்லை. புருஷனுக்கு மிகவும் பிடித்தவர்களாக இருக்கும் காரணத்தால் புருஷனின் அவதாரங்கள் ஆகியிருக்கிறார்கள் என்பதே பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. காலம்,

ஸ்வபாவம் ஆகியவற்றில் ஶ்ரீஹரியின் சன்னிதானம் இருப்பதினால் அவை அவதாரங்கள் என்று புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது.

**கே: சூன்ய நாமக ஶ்ரீஹரி புருஷ என்னும் அவதாரத்தை முதன்முதலில் எடுத்தார் என்றும், அந்த புருஷ என்னும் உடலை அடைந்து, பின்னர் பிரளயகாலத்தில் அந்த உடலை தியாகம் செய்தார் என்றும் சொன்னால், ஶ்ரீஹரியும் நம்மைப் போலவே 'அநித்யன்' (அழிவுள்ளவன்) என்று ஆகின்றதல்லவா?**

ப: 'ஜக்ருஹே பௌருஷம் ரூபம்' என்னும் வாக்கியத்திற்கு, நம்மைப் போல் புருஷ என்னும் உடலை அடைந்தார் என்று பொருள் இல்லை. ஶ்ரீஹரி ஒரு உடலை எடுப்பதும் இல்லை. விடுவதும் இல்லை. அவருக்கும் அவரது உடலுக்கும் சிறிதுகூட வித்தியாசமே இல்லாதது ஒரு காரணம். மேலும் ஶ்ரீஹரி ஆதி அந்தம் இரண்டும் இல்லாததாலும் அந்தந்த ரூபத்தில் தோன்றுகிறார், பின் மறைகிறார் என்று பொருள் கொள்ளவேண்டும். பிரளயகாலத்தில் எல்லா இடங்களிலும் தமஸ் என்னும் இருள் சூழ்ந்திருந்தது. அந்த இருளை விரட்டியபோது முதலில் தோன்றியதே புருஷ என்னும் ரூபம் என்று பொருள் கொள்ளவேண்டுமே தவிர, ஒரு உடலை அடைந்தார் என்று பொருள் கொள்ளக்கூடாது.

**கே: புருஷ என்னும் அவதாரம் எப்படி நடந்தது? சற்று விரிவாக கூறவும்.**

ப: பிரளயகாலத்தில் தனி ஒருவனாக ஆல இலையில் பாலகிருஷ்ணனாக படுத்திருந்த நாராயணனுக்கு, உலகத்தைப் படைக்கவேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஒரு தீபத்திலிருந்து இன்னொரு தீபத்தை ஏற்றுவதுபோல், சூன்ய என்னும் ரூபத்திலிருந்து புருஷ என்னும் ரூபத்தில் தோன்றினார். இதுவே முதலாம் அவதாரம். அப்போது லட்சுமிதேவி, ப்ரக்ருதி என்னும் ரூபத்தில் தோன்றினாள். அந்த ப்ரக்ருதியிடம் புருஷன் தன் வீர்யத்தை செலுத்தினார். இதிலிருந்து ஹிரண்யகர்பன் பிறந்தார். புருஷனிடமிருந்து பிறந்த அந்த ஹிரண்யகர்பனுக்கும் புருஷ என்றே பெயர். ஹிரண்யகர்பனின் மனைவியின் பெயர் ஸ்ரத்தாதேவி. அவளுக்கும் ப்ரக்ருதி என்றே பெயர்.

பிரளயகாலத்தில் ஸ்தூல சரீரங்கள் இல்லாத காரணத்தால், ஹிரண்யகர்பன் மற்றும் ஸ்ரத்தாதேவி இருவரும் தற்போது ஸ்தூல சரீரங்களைப் பெற்றனர். இவர்களிடமிருந்து அஹங்கார தத்வாபிமானி தேவதைகள் பிறந்தனர். இப்படி 'வ்யோம சம்ஹிதை'யில் சொல்லியிருப்பதாக ஶ்ரீமதாசார்யர் பாகவத தாத்பர்யத்தில் தெரிவிக்கிறார்.

**கே: புருஷ என்னும் ஶ்ரீஹரியின் அவதாரம், ஹிர்ண்யகர்பன் என்பவரின் தோற்றத்திற்கு மட்டுமே காரணமா? அல்லது அவரிடமிருந்து வேறு ஏதாவது வேலைகளை நடத்தினாரா?**

ப: இந்த புருஷ என்னும் ஸ்ரீஹரியின் அவதாரத்தின் மகிமைகளை சொல்லி முடிப்பது சாத்தியமே இல்லை. இவர் நான்முகனிற்கு மட்டும் தந்தை இல்லை. 14 லோகங்களும் இந்த புருஷனிடமிருந்தே பிறந்தன. எல்லா பிராணிகளும் இவரிடமிருந்தே பிறந்தன. அனைத்து தத்வங்களும்கூட புருஷனிடமிருந்தே பிறந்தன. ஆகையால் இவனை 16 கலைகளால் ஆன புருஷன் என்று சாஸ்திரங்கள் அழைக்கின்றன.

**கே: 16 கலைகள் என்றால் என்ன? இவனை 16 கலைகளால் ஆனவன் (ஷோடச கலாத்மக) என்று ஏன் அழைக்கிறார்கள்?**

ப: பஞ்ச பூதங்கள் மற்றும் பதினொன்று இந்திரியங்கள் சேர்ந்து 16 கலைகள் என்று அழைத்துக் கொள்கின்றன. இவர்களின் ஸ்ருஷ்டிக்கு காரணம் ஆனதால் மற்றும் இந்த 16 கலைகளின் அபிமானி தேவதைகளின் அன்புக்குரியவன் ஆகையால் இவனை 16 கலைகளால் ஆனவன் என்று சாஸ்திரங்கள் அழைக்கின்றன. அல்லது பஞ்சபூதங்கள் மற்றும் பதினொன்று இந்திரியங்களை தன் வயிற்றில் வைத்துக்கொண்டவன் ஆகையால் 16 கலைகளால் ஆனவன் என்றும் சொல்லலாம்.

**கே: 16 கலைகளால் ஆனவன் என்பதால் அவனை வர்ணிப்பதற்காக புருஷசூக்தம் 16 ரிக்குகளால் ஆனது என்று சொல்கிறார்களே?**

ப: கண்டிப்பாக அப்படி சொல்லலாம். இதே புருஷ ரூபனின் விஸ்வரூபத்தை வர்ணிப்பதற்காகவே புருஷசூக்தம் உண்டாயிற்று.

**கே: புருஷசூக்தத்தின் மகிமை என்ன? அதை ஏன் தினமும் சொல்லவேண்டும்?**

ப: பிரம்மாண்டத்தை உருவாக்குவதற்காக உருவாக்கப்பட்ட ரூபமே புருஷ ருபம். ஸ்ருஷ்டி செய்த அந்த புருஷனின் அருமை பெருமை மகிமைகளை ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் நினைத்துப் பார்க்கவே வேண்டும். இப்படிச் செய்வதால் அனைத்து புருஷர்களும் தங்கள் விருப்பங்களை அடைவார்கள். முக்கியமாக சந்தான வரம் கிடைத்து அவர்களின் வம்சம் வளரும். அதுமட்டுமல்லாமல், ஸ்ரீஹரியிடம் பக்தி அதிகமாகி மோட்சம் கிடைக்கும்.

**கே: புருஷ சூக்தத்தின் துவக்கத்தில் புருஷனை வர்ணிக்கும்போது அவருக்கு ஆயிரம் தலைகள், ஆயிரம் கண்கள், ஆயிரம் கைகால்கள் என்று சொல்கிறார்கள். ஆயிரம் தலைகள் இருந்தால், இரண்டாயிரம் கண்கள், இரண்டாயிரம் கைகால்கள் இருக்கவேண்டும் அல்லவா?**

ப: அதற்காகவே ‘சஹஸ்ர’ என்னும் சொல்லிற்கு ‘பற்பல’ என்னும் பொருளை ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார். சஹஸ்ர சீர்ஷா என்னும் சொல்லிற்கு ஆயிரம் தலைகள் என்ற பொருளில்லை. பற்பல தலைகள். அவனது இந்திரியங்களும் அனந்தமானவையே. ஆகவே, ஸ்ரீஹரிக்கு அனந்த தலைகள்,

அனந்த கண்கள், அனந்த கைகால்கள் என்று புருஷசூக்தம் சொல்லியிருப்பதாக தெரிந்துகொள்ளவேண்டும்.

**கே: புருஷ என்னும் சொல்லிற்கு ஆண் என்று பொருள். ஸ்ரீஹரியின் புருஷ ரூபத்திற்கு என்ன பொருள்?**

ப: 'புரி ஷேதே இதி புருஷ:' என்னும் வாக்கியத்தின்படி உடலில் இருக்கும் ஜீவனுக்கு புருஷ என்று பொருள். ஆகையால், புருஷ என்னும் சொல்லிற்கு ஆண் என்று பொருள் கொள்வது மிகவும் தவறு. பெண் மற்றும் ஆண் இருவரும்கூட புருஷ என்று சொல்லலாம். ஸ்ரீஹரியின் விஷயத்தில் 'பூர்வமேவ ஆஸ இதி புருஷ:' என்னும் வாக்கியத்தின்படி முதலிலேயே எல்லா இடத்திலும் நிறைந்திருந்தான் ஆகையால் அவனை புருஷ என்று அழைக்கவேண்டும்.

**கே: இந்த புருஷ என்னும் ரூபம் பிரம்மாண்டத்தின் வெளியே இருக்கிறதா? அல்லது உள்ளே இருக்கிறதா? அல்லது 'புரி ஷேதே இதி புருஷ:' என்று சொல்வதைப்போல் நம் உடலில் இருக்கிறதா? இந்த ரூபங்களெல்லாம் ஒன்றானவையா அல்லது வெவ்வேறு ரூபங்களா?**

ப: ஸ்ரீஹரியின் எல்லா ரூபங்களும் ஒன்றானவையே. வெவ்வேறு அல்ல. ஆனால், புருஷ ரூபம் மூன்று விதங்களாக இருக்கின்றன.

1. பிரம்மாண்டத்தை ஸ்ருஷ்டி செய்யும்முன் தோன்றிய ரூபம்.
2. பிரம்மாண்டம் தோன்றிய பின் அதற்குள் தோன்றிய இன்னொரு ரூபம்.
3. அனைத்து ஜீவர்களின் உள்ளேயும் பிண்டாண்டத்தில் நிரம்பியிருக்கும் இன்னொரு ரூபம்.

இதை இன்னொரு விதத்தில் விளக்கலாம்.

1. நாராயண ரூபியான புருஷ.
2. சதுர்முகனின் உள்ளிருக்கும் புருஷ.
3. சிவனின் உள்ளிருக்கும் புருஷ.

**கே: புருஷ ரூபியான ஸ்ரீஹரியை தேவர்கள் எப்படி வணங்கினர்?**

ப: பரமபுருஷ என்னும் அக்னியில் அனைத்து தேவர்களும் தங்கள் ஆத்மாவையே ஹவிஸ்ஸாக சமர்ப்பித்தனர். அதனைவிடவும் உன்னதமான யாகம் வேறில்லை. இந்த யக்ஞத்தில் வசந்தருதுவே நெய் ஆனது. க்ரீஷ்மருது விறகுகட்டைகள் ஆனது. சரத்ருது நைவேத்தியம் ஆயிற்று. இப்படி அனைத்து உலகமே புருஷனுக்கு ஆஹுதியானது.

**கே: உலகமே ஆஹுதி ஆனது என்றால், பிரம்மாண்டமே நாசமானது என்று பொருள். இப்படியிருக்கும்போது, புருஷனிடமிருந்து உலகம் உருவானது என்று எப்படி சொல்வீர்கள்?**

ப: அதுதான் ஆச்சரியம். தேவர்கள் அனைவரும் சேர்ந்து யாகங்களை செய்தபோது, புருஷனிடமிருந்து ரிக், யஜுர், சாம வேதங்கள் உருவாயின. காயத்ரி முதலான சந்தஸ்கள் அப்போதே நிர்மாணமாயின. அதுமட்டுமல்லாமல், குதிரைகள் மற்றும் பல்வேறு விலங்குகள் ஆகியவையும் இந்த புருஷனிடமிருந்து தோன்றின.

**கே: ஆம். எவ்வளவு ஆச்சரியமான விஷயம். இந்த யாகத்தில் தேவர்கள் பரமபுருஷனான ஸ்ரீஹரியை எப்படி தியானித்தார்கள்? புருஷனின் முகம் எப்படியிருக்கிறது? தோள்கள், கைகால்கள் எப்படியிருக்கின்றன? அவனின் எந்தெந்த பாகங்களிலிருந்து என்னென்ன ஸ்ருஷ்டி ஆயிற்று?**

ப: மிகவும் சுவையான கேள்வி. அந்த புருஷனின் முகத்திலிருந்து பிராமணர்கள், தோள்களிலிருந்து க்ஷத்திரியர்கள், தொடையிலிருந்து வைச்யர்கள், கால்களிலிருந்து சூத்திரர்கள் பிறந்தார்கள். மனதிலிருந்து சந்திரன், கண்ணிலிருந்து சூரியன், வாயிலிருந்து இந்திரன், அக்னி. மனதிலிருந்து வாயு. தொப்புளிலிருந்து ஆகாயம். தலையிலிருந்து ஸ்வர்க்கம். கால்களிலிருந்து பூமி. காதுகளிலிருந்து திசைகள். இப்படி அவனது அனைத்து உடல் பாகங்களிலிருந்தும் உலகின் ஸ்ருஷ்டி நடந்தது.

இப்படி தேவர்கள் புருஷனை யக்ஞத்தில் பூஜித்து, அவனிடமிருந்து உலகத்தில் உள்ள அனைத்தும் உற்பத்தி ஆகும்படி வேண்டினர். தினமும் நாமும் புருஷனை இதைப்போலவே வேண்டி தன்யர் ஆகவேண்டும்.

**கே: நாமும்கூட புருஷர்தானே?**

ப: சிலர் தம்மையே புருஷர் என்று அழைத்துக் கொள்கின்றனர். சிலர் வேதங்கள் விளக்கும் ஒருவரை புருஷன் என்று அழைக்கின்றனர். சிலர் வேதங்களுக்கு அபிமானியான கருடனை புருஷன் என்று அழைக்கின்றனர். வேறு சிலர் உலகத்தை அழிக்கும் வேலையைச் செய்யும் ருத்ரரை புருஷன் என்கின்றனர். பிரம்மாவையும் புருஷன் என்று சிலர் கூறுகின்றனர். புருஷ என்னும் சொல்லிற்கு முக்கியமான / முதன்மையான பொருள் நாராயணன் மட்டுமே ஆகும். மேலே கூறியவர்கள் எல்லாம் இரண்டாம் / அடுத்த பொருள் கொண்டவர்கள் எனலாம். நாராயணன் புருஷ நாமகனாக இவர்கள் அனைவரின் உள்ளும் நின்றிருப்பதால் இவர்கள் புருஷர்கள். ஆகையால், நானே புருஷன் என்று அழைத்துக்கொள்ளும் அனைவருக்கும், எனக்குள் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியே புருஷன் என்ற நினைப்பு எப்போதும் இருக்கட்டும்.

**கே: புருஷாவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் அனைத்து தேவர்களும் புருஷ நாமகனான ஸ்ரீஹரியைக் குறித்து யாகம் செய்தனர். அவரின் வழிகாட்டுதலின்படி நம் வாழ்க்கையும்கூட ஒரு யக்ஞம் ஆகவேண்டும். நம் வாழ்க்கையை புருஷ என்னும் அக்னியில் ஹோமம் செய்யவேண்டும். கை கால்களில் இருக்கும் மொத்த விரல்கள் இருபது. இந்த இருபது விரல்களிலும் அனைத்து தத்வாபிமானி தேவதைகளும் நிறைந்திருக்கின்றனர். இந்த உடல் 21வது. மொத்தம் இந்த 21 சமித்துகளை, அந்த புருஷனுக்கு சமர்ப்பித்து, ஆத்மா என்னும் பூர்ணாஹுதியை கொடுத்து தன்யர் ஆகவேண்டும்.

அல்லது 12 மாதங்கள், 5 ருதுக்கள், மூன்று உலகங்கள், இவற்றை சேர்த்தால் 20 சமித்துகள் ஆகின்றன. 21வது சூரியன். இந்த 21 சமித்துகளைக்கூட அந்த புருஷனுக்கு சமர்ப்பித்து, மேலும் நமக்குக் கிடைத்துள்ள தேச, காலம் ஆகியவற்றை அவனுக்கு சமர்ப்பித்து, தன்யர் ஆகவேண்டும். அப்போதுதான் நமக்கு புருஷ ஜென்மம் வந்ததற்கு நல்ல பயன் கிடைத்ததாக பொருள். இல்லையென்றால் இந்தப் பிறவியே வீண் என்று பொருள்.

***

## 12. சனத்குமார

**கேள்வி: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் ஸ்ரீஹரி முதலில் தன்னையே ஸ்ருஷ்டி செய்துகொண்டார் என்று பாகவதம் சொல்கிறது. ஒரு விளக்கின் உதவியால் பற்பல விளக்குகளை ஏற்றுவதைப்போல், பத்பனாப என்னும் முதல் ரூபத்திலிருந்து ஸ்ரீஹரியின் பற்பல ரூபங்கள் தோன்றின. இவற்றில் முதலாவது அவதாரம் எது?**

பதில்:
‘ஸ ஏவ ப்ரதமம் தேவ: கௌமாரம் ஸர்கமாஸ்தித: |
சசார துஷ்சரம் ப்ரம்மா ப்ரம்மசர்யமகண்டிதம் ||

’புருஷ’ என்னும் ஸ்ரீஹரியே ’சனத்குமார’ என்னும் அவதாரத்தை எடுத்தார். இவர் அனைத்து நற்குணங்களால் நிறைந்தவனாக இருக்கிறார். பிரம்மசர்யத்தை ஸ்வீகரித்து, உலகத்தை காக்கின்றார்.

இப்படி பாகவதம் சொன்னதைப்போல் முதன்முதலில் பத்பனாப ரூபத்திலிருந்து தோன்றியதே சனத்குமார என்னும் ரூபம்.

**கே: மேற்கண்ட ஸ்லோகத்தை கவனமாக பார்த்தால், ஸ்ரீஹரியின் அவதாரத்தின் பெயர் ‘குமார’ என்று தெரிகிறது. மேலும் பாகவதத்தில் பல்வேறு இடங்களில் மற்றும் ஸ்ரீமதாசார்யரின் பாரத தாத்பர்யத்தை கவனித்தால் ‘குமார’ என்பதே அவதாரத்தின் பெயர் என்று தெரிகிறது. ’சனத்குமார’ இல்லையென்றும் தெரிகிறது. இப்படியிருக்கும்போது, ஸ்ரீஹரியின் முதலாவது அவதாரம் ‘சனத்குமார’தான் என்று நீங்கள் எப்படி சொல்கிறீர்கள்?**

ப: ஆம். அனைத்து இடங்களிலும் ஸ்ரீஹரியின் அவதாரத்தை பொதுவாக ‘குமார’ என்றே சொல்லப்பட்டிருக்கிறது. பாகவத தாத்பர்யத்திலும் குமார என்றே சொல்லியிருக்கிறார். ஆனாலும், உலகத்தில் சனத்குமார என்ற பெயரே புகழ்பெற்றிருக்கிறது. இப்படி சொல்வதில் தவறு இல்லை என்பதற்கு ‘சனத்குமாரோSவது காமதேனும்’ என்னும் நாராயண வர்மத்தின் வாக்கியமே சான்றாகும்.

**கே: 1. சனக 2. சனந்தன 3. சனாதன 4. சனத்குமார என்பதாக பிரம்மதேவருக்கு நான்கு பேர் மானஸ குமாரர்கள் இருந்தனர். மிகவும் சிறிய உருவத்தைக் கொண்டிருந்த இவர்கள், பிரம்மசர்யத்தைக் கடைப்பிடித்து மகாதபஸ்விகளாக இருந்தனர். இவர்களில் ஒருவரான சனத்குமார் என்பவரையே நீங்கள் ஸ்ரீஹரியின் அவதாரம் என்று சொல்கிறீர்கள் அல்லவா?**

ப: இல்லவே இல்லை. பிரம்மதேவரின் மானஸ குமாரராக இருந்தவர், மன்மதனின் அவதாரமே தவிர, ஸ்ரீஹரியின் அவதாரம் இல்லை. ஸ்ருஷ்டியில் முதன்முதலில் எடுத்த சனத்குமார என்னும் அவதாரம் மட்டுமே சாட்சாத் ஸ்ரீஹரியின் ஸ்வரூபம் / அவதாரம்.

**கே: நாராயண வர்மத்தில் 'சனத்குமாரோsவது காமதேவாத்' என்று 'காமதேவனிடமிருந்து என்னை சனத்குமாரன் ரட்சிக்கட்டும்' என்று ஏன் பிரார்த்திக்கவேண்டும்? இதன் மர்மம் என்ன?**

ப: இந்த வாக்கியத்தின்படியே, பிரம்மதேவரின் மானஸ குமாரரான சனத்குமாரன், ஸ்ரீஹரியின் அவதாரம் இல்லை என்று தெளிவாகத் தெரிகிறது. ஏனென்றால், பிரம்மதேவரின் மானஸ குமாரனான சனத்குமாரன், சாட்சாத் மன்மதனின் அவதாரமே ஆவார். ஆகையால் காமதேவனிடமிருந்து என்னை காப்பாற்று என்று அவரிடமே வேண்டுகோள் வைப்பது ஆகாது. ஆகையால், நாராயண வர்மத்தில் சொல்லப்பட்டிருக்கும் சனத்குமாரன் என்னும் பெயர் ஸ்ரீஹரியினுடையதே ஆகும். காமதேவரிடமிருந்து என்னை காப்பாற்று என்பது இவரது வேண்டுகோள்.

ஏனென்றால், சனத்குமாரன் என்று அவதாரம் எடுத்த ஸ்ரீஹரி, பிரம்மதேவரின் மானஸ குமாரரான சனத்குமாரன் என்னும் மன்மதனுக்கு பிரம்மசர்யத்தை உபதேசித்து, காமத்தை வெல்லும் வழியை சொல்லிக்கொடுத்தார். ஆகவே நமக்கும்கூட சனத்குமாரன் பிரம்மசரியத்தை வழங்கட்டும் என்பதே இங்கு தெரியவரும் மறைபொருள்.

**கே: காமதேவனுக்கு பிரம்மசர்யத்தை உபதேசிக்க வேண்டுமெனில், தானும் பிரம்மசாரியாக இருக்கவேண்டும் அல்லவா?**

ப: ஆம். சனத்குமாரன் என்னும் ஸ்ரீஹரியின் ரூபமானது பிரம்மசர்ய ரூபமே. சில அவதாரங்களில் கிருஹஸ்த தர்மத்தையும், இன்னும் சில அவதாரங்களில் யதிதர்மத்தையும் போதித்தார். ஆனால், சனத்குமாரன் என்னும் அவதாரத்தில் பிரம்மசரியத்தைக் கடைபிடித்தல், பிரம்மசாரிகள் செய்யவேண்டிய கடமைகள் ஆகியவற்றை முதலில் தான் பின்பற்றி, பின் அதை உபதேசித்தார். ஆகையால் ஒவ்வொரு பிரம்மசாரியும் தன் பிரம்மசர்யத்தைக் கடைப்பிடிக்க, இந்த சனத்குமாரன் என்னும் ரூபத்தை வணங்க வேண்டும். அப்போது மட்டுமே பிரம்மசரியம் அதற்கான மதிப்பை / பொருளைக் கொள்கிறது.

**கே: மன்மதனுக்கு பிரம்மசர்யத்தை உபதேசிப்பது மட்டுமே இவரது வேலையா அல்லது வேறு ஏதாவது ஞானகாரியத்தை செய்திருக்கிறாரா?**

ப: சதுர்முக பிரம்மனுக்கு அனைத்து வேதங்களையும் உபதேசித்த ரூபம் இது. ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் பிரம்மதேவருக்கு வேதங்களை உபதேசித்து, ஸ்ருஷ்டியை துவக்குமாறு கூறிய அதிஅற்புதமான ரூபம் இது.

அதுமட்டுமல்லாது, ருத்ரதேவருக்கும் பிரம்மசர்யத்தை கடைபிடிக்கும் முறைகளை சொல்லிக்கொடுத்த ரூபம் இது.

**கே: சனத்குமாரன் ஆகியவர்களுக்கு, ஸ்ரீஹரியின் ரூபமான குமார ரூபம் ஞானோபதேசம் செய்தார் என்பதற்கு என்ன ஆதாரம் உள்ளது?**

ப:
குமாரநாமா து ஹரி: ப்ரம்ஹசாரிவபு: ஸ்வயம் ।
ஸனத்குமாராய பரம் ப்ரோவாச ஜகதீஸ்வர: ॥

குமார என்னும் ஸ்ரீஹரி பிரம்மாசாரியின் ரூபத்தைக் கொண்டு, சனத்குமார என்னும் பிரம்மதேவரின் மானஸ குமாரனுக்கு மற்றும் ருத்ரன், பிரம்மன் முதலானவர்களுக்கு பர-தத்வத்தைப் பற்றி உபதேசம் செய்தார் என்று கூறும் ஸ்ருதி வாக்கியமே இந்த விஷயத்திற்கான ஆதாரம். மேலும்,

விஷ்ணோ: சனத்குமாராக்யாத் ஷுஸ்ருவுர் ஞானமுத்தமம் ।
சனத்குமார ப்ரமுக: யோகேஷா: பரமேஷ்வராத் ॥

சனத்குமார என்னும் விஷ்ணுவிடமிருந்து உத்தமமான தத்வஞானத்தை சனத்குமார, ருத்ர, சதுர்முக பிரம்மா ஆகியோர் பெற்றனர். மேற்கண்ட வாக்கியத்தை ஸ்ரீமதாசார்யர் பாகவத தாத்பர்யத்தில் கூறியிருக்கிறார்.

**கே: மேற்கூறிய வாக்கியத்தில் ருத்ரதேவருக்கும் பிரம்மசரியத்தை உபதேசித்தார் என்று தெளிவாகக் குறிப்பிடவில்லைதானே?**

ப:
குமாயோ நாம பகவான் ஸ்வயம் ஸ்வஸ்மாதஜாயத ।
திதேஷ ப்ரம்ஹணே ப்ரஹ்ம ப்ரஹ்மசர்யே ஸ்திதோ விபு: ।
யஸ்மாத் சனத்குமாரஸ்ச ப்ரஹ்மசர்யமாபாலயத் ।
ய: ஸ்தாணு: ஸ்தாணுதாம் ப்ராதாத் பகவான் அவ்யயோ ஹரி:

குமார என்னும் ஸ்ரீஹரி தன்னிலிருந்தே அவதாரங்களை எடுத்தார். பிரம்மசர்யத்தின் ரட்சணைக்காக சதுர்முக பிரம்மனுக்கு உபதேசம் செய்தார். இவனிடமிருந்து உபதேசம் பெற்றே, சதுர்முக பிரம்மதேவரின் மகனான சனத்குமாரன் பிரம்மசரியத்தை மேற்கொண்டான். ருத்ரதேவருக்கும்கூட இந்த பிரம்மசர்யத்தைப் பற்றி அழிவேயில்லாத ஸ்ரீஹரி உபதேசம் செய்தார்.

இந்த ஆதாரங்களினால், ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் ஸ்ருஷ்டியின் முதலாம் பிரம்மசாரியை காப்பாற்றுவதின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு அதன் (பிரம்மசர்யத்தின்) மகத்துவத்தை தெரியப்படுத்திய சனத்குமார அவதாரத்தின் முக்கிய நோக்கத்தை நாம் உணரவேண்டும்.

**கே: பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கும் ஶ்ரீஹரியின் பல்வேறு அவதாரங்களில் சனத்குமார என்னும் அவதாரம் ஶ்ரீஹரியின் ஸ்வரூபம் இல்லை என்று பல வியாக்கியானக்காரர்கள் (உரை ஆசிரியர்கள்) சொல்கிறார்கள். நீங்கள் மட்டும் இது ஶ்ரீஹரியின் அவதாரமே என்கிறீர்கள். இது எப்படி சரியாகும்?**

ப: முன்பே சொன்னதுபோல், ஶ்ரீமதாசார்யார் மேற்கோள் காட்டியிருக்கும் பல்வேறு வேத வாக்கியங்களே இந்த விஷயத்தில் ஆதாரமாகும். மேலும் ஶ்ரீஹரியின் குமார அவதாரம், பிரம்மதேவரின் மானஸ குமாரரான சனத்குமாரர் - இந்த இருவரும் வெவ்வேறு என்பது தெளிவு. இந்த விஷயத்தை சில வியாக்கியானக்காரர்கள் கவனிக்காமல் விட்டிருக்கலாம்.

**கே: சனத்குமார என்னும் சொல்லிற்கு என்ன பொருள்?**

ப: சனத் = எப்போதும். கு = கெட்ட ஆசைகள். மார = நாசம் செய்பவன்.

**கே: சனத்குமார என்னும் அவதாரத்தின் மூலம் நாம் அடையவேண்டிய லாபம் என்ன?**

ப: அனைத்து சாதகர்களுக்கும் தங்களின் சாதனை வெற்றி பெறவேண்டுமெனில் பிரம்மசர்யத்தை பின்பற்றுதல் கட்டாயம் ஆகிறது. குறிப்பாக பிராமணருக்கு இந்த பிரம்மசர்யத்தை பின்பற்றுவது மிகவும் அவசியமானது. கிருஹஸ்தாசிரமத்திற்கு முன்னர் பிரம்மசர்யத்தை பின்பற்றுவது எவ்வளவு முக்கியமோ, அதே அளவு கிருஹஸ்தர் ஆனபிறகும் வேறொரு விதமான பிரம்மசர்யத்தைப் பின்பற்றுவதும் முக்கியமே ஆகும். இந்த இரண்டு விதமான பிரம்மசர்யத்தின் ரட்சணைக்காக சனத்குமார என்னும் ஶ்ரீஹரியை நாம் சரணாகதி அடையவேண்டும். அப்போது மட்டுமே, நம்மால் நம் இந்திரியங்களை ஜெயிக்க முடியும். இந்த சனத்குமார என்னும் ஶ்ரீஹரியின் பரிபூர்ண அருளானது, நமக்கு நம் வாழ்க்கை முழுவதற்கும் கிடைக்கட்டும் என்று வேண்டுவோமாக.

***

## 13. ஹயக்ரீவ

**கேள்வி: ஹயக்ரீவ என்றால்?**

பதில்: குதிரை முகம் கொண்டவன்.

**கே: அவதாரம் நடந்த காலம்?**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கக் காலம். தேவர்கள் உருவாவதற்கு முன்னர்.

**கே: ஹயக்ரீவ அவதாரத்தின் நோக்கம்?**

ப: மது-கைடப அசுரர்களை கொன்று, வேதங்களை காப்பாற்றுவதற்காக.

**கே: வேதங்களை காப்பாற்றிய ரூபம், வேதவியாசர் அல்லவா?**

ப: அது த்வாபரயுகத்தின் கதை. இது ஸ்ருஷ்டியின் துவக்கக் கதை. முதன்முதலாக நடந்த ஞான-அவதாரம், ஹயக்ரீவர்.

**கே: மது-கைடபர் யார்?**

ப: ஸ்ரீஹரியின் காதுகளிலிருந்து பிறந்த அசுரர்கள்.

**கே: ஸ்ருஷ்டியின் துவக்கத்திலேயே இந்த அசுரர்கள் பிறந்தனரா?**

ப: ஆம். தேவர்களின் ஸ்ருஷ்டிக்கு முன்னரே பிறந்த இவர்கள், வாயுதேவரின் ஆவேச பலத்தில், தண்ணீரில் பயங்கரமாக வளர்ந்தனர்.

**கே: இத்தகைய அசுரர்களை பிரம்மதேவர் ஏன் கொல்லவில்லை?**

ப: பிரம்மதேவரைக் குறித்து தவம் செய்து, யாராலும் கொல்லப்படக் கூடாதென்று வரம் பெற்றனர். பிரம்மதேவரின் முகத்திலிருந்து வெளிவந்த வேதாபிமானி தேவதைகளை கவர்ந்து கொண்டு, பாதாள லோகத்திற்கு ஓடினர்.

**கே: தன்னிடம் வரம் பெற்ற தைத்யர்களை பிரம்மதேவர் எப்படி கொன்றார்?**

ப: பிரம்மதேவர் ஸ்ரீஹரியைக் குறித்து ஞானஸத்ர யாகத்தை நடத்தினார். வேதங்களைக் காப்பாற்றுவதற்காக மனதை மயக்கக்கூடிய அழகிய ஹயக்ரீவ ரூபத்தில் ஸ்ரீஹரி அவதரித்தார்.

**கே: ஹயக்ரீவ தேவரின் அவதாரம் நடந்தது எந்த நாள்?**

ப: ஸ்ராவண சுத்த பௌர்ணமி அன்று ஹயக்ரீவ ஜெயந்தி.

**கே: ஹயக்ரீவ ஜெயந்தியின் சிறப்பு என்ன?**

ப: மிகவும் சிறப்பானது. ஒரு வருடத்தில் செய்த அனைத்து வேத அத்யயனங்களையும் ஹயக்ரீவ தேவருக்கு சமர்ப்பணம் செய்து, புதிய வேத அத்யயனங்களுக்காக சங்கல்பம் செய்யும் நாள். இதையே 'உபாகர்ம' என்கிறார்கள். அனைத்து வேதங்களுக்கும் ரட்சகராக இருப்பதால் ஹயக்ரீவரின் ஜெயந்தியையே 'உபாகர்ம' என்று கொண்டாடுவது மிகவும் சரியான விஷயம்.

**கே: ஹயக்ரீவர் மது-கைடபரை எப்படி கொன்றார்?**

ப: பாதாள லோகத்தில், காதுகளுக்கு மிகவும் இனிமையான வகையில் சாம-கானத்தைப் பாடத் துவங்கினார். ஹயக்ரீவரைக் காண மது-கைடபர் ஓடி வந்தனர். வேதங்களை எடுத்துக்கொண்டு ஹயக்ரீவர் தன் இருப்பிடத்திற்கு வந்தபோது, மது-கைடபர் யுத்தத்திற்கு தயாரானார்கள். அந்த சமயத்தில், தன் தொடையில் அடித்து மது-கைடபர்களை கொன்றார்.

**கே: இந்த மது-கைடபரின் மேதஸ் என்னும் கொழுப்பு தண்ணீரில் சேர்ந்ததாலேயே பூமி உண்டாயிற்று என்று சொல்கிறார்களே?**

ப: ஆம். அதனாலேயே பூமிக்கு 'மேதினி' என்ற பெயர் உண்டாயிற்று. அது மட்டுமல்லாமல் அவர்களது எலும்புகளே கற்களானது. ஆசனம் இல்லாமல் தரையில் அமர்ந்து செய்யப்படும் நற்காரியங்களின் பலன்களை இந்த தைத்யர்கள் பறிக்கின்றனர் என்றும் சொல்லலாம்.

**கே: பிரம்மதேவர் தனியாக இருந்தபோது அவருக்கு வந்து உதவிய ஹயக்ரீவரின் மேல் அவருக்கு மிகவும் பிரியம் இருந்திருக்கவேண்டுமே?**

ப: ஆம். பிரம்மதேவரை அனைத்தும் அறிந்தவராக ஆக்கிய ஞானரூபம் இது. தன் விரோதிகளான அசுரர்களைக் கொன்று, சம்பூர்ணமான ஞானத்தை உபதேசித்த ரூபம் இது. ஹயக்ரீவ ரூபத்தைக் கண்டால் பிரம்மதேவருக்கு மிகவும் ஆனந்தம். இதையே வேதம் இப்படிச் சொல்கிறது. 'யோ பிரம்ஹாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்யை தம் ஹ தேவமாத்ம புத்திப்ரகாஷம் முமுக்ஷுர்வை ஷரணமஹம் ப்ரபத்யே'.

**கே: ஹயக்ரீவ தேவரின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் சேஷசாயியான நாரயணனின் தொப்புளிலிருந்து தாமரை மலர்ந்தது. அதில் சதுர்முகன் தோன்றினார். அதே தாமரையில், தமோபிந்து, ரஜோபிந்துகளும் பிறந்தன. தமோபிந்துவிலிருந்து 'கைடப', ரஜோபிந்துவிலிருந்து 'மது' என்னும் இரு அரக்கர்கள் பிறந்தனர். (ஶ்ரீஹரியின் காதுகளிலிருந்து பிறந்தனர் என்றும் சொல்லலாம்).

சதுர்முகனைக் குறித்து கடுந்தவம் புரிந்து, யாராலும் வெல்ல முடியாத வரத்தைக் கேட்டுப் பெற்றனர். வரத்தைப் பெற்றதால், நானே இறைவன் என்று கர்வத்துடன் திரியத் தொடங்கினர். சதுர்முகனுக்கு ஸ்ருஷ்டி செய்ய முடியாமல் இவர்கள் பெரிய தடையாக ஆகினர். மூர்த்தி முதலான நான்கு வேதாபிமானிகளை திருடிக்கொண்டு பாதாளலோகத்திற்கு ஓடினர்.

வேதங்கள் இல்லாமல் ஸ்ருஷ்டி எப்படி சாத்தியம்? குழப்பத்தில் ஆழ்ந்த சதுர்முகன், ஶ்ரீஹரியைக் குறித்து தவம் செய்தார். மகனின் வேண்டுதலுக்கு ஶ்ரீஹரி செவிசாய்த்தார். என்ன வேண்டும் என்று கேட்டார். 'ஸ்ருஷ்டி செய் என்று நீ ஆணையிட்டாய். ஆனால் வேதங்களே இல்லை. எனக்கு வேதங்களைக் கொடுத்து அருள்புரிவாயாக' என்று சதுர்முகன் வேண்டினார். ஶ்ரீஹரி புன்னகையுடன் 'ததாஸ்து - அப்படியே ஆகட்டும்' என்றார்.

உடனே மின்னலைப் போன்ற வேகத்தில், ஶ்ரீஹரி, வெள்ளை குதிரையின் அவதாரத்தை எடுத்தார். தன்னை ஹயக்ரீவன் என்று சொல்லிக்கொண்டார். பாதாளலோகத்திற்குச் சென்று மனதிற்கினிய சாம-கானத்தைப் பாடினார். அபூர்வமான இனிய கானத்தைக் கேட்ட மது-கைடபர், குரல் ஒலித்த திசையினை நோக்கி ஓடோடி வந்தனர். அந்தக் கணத்தில் ஹயக்ரீவர் மறைந்தார். அந்த நான்கு வேதங்களையும் எடுத்துக்கொண்டு தன் இருப்பிடத்திற்கு வந்தார். மது-கைடபர் ஶ்ரீஹரியுடன் யுத்தம் செய்யத் தயாராயினர். மலையைப் போன்ற பெரிய உடல்களைக் கொண்ட மது-கைடபரை ஶ்ரீஹரி தன் தொடையில் அடித்துக் கொன்றார். நான்முகனுக்கு நான்கு வேதங்களையும் உபதேசித்து ஸ்ருஷ்டியின் துவக்கத்திற்கு முன்னோடியானார்.

அனைத்து வேதங்களையும் நான்முகனுக்கு உபதேசித்த அந்த ஞானமூர்த்திக்கு அனந்த வந்தனங்கள்.

**கே: ஹயக்ரீவ தேவரின் முகத்திலிருந்து அனைத்து வித்யைகளும் எப்படி வெளிவந்தன?**

ப: இதை ப்ருஹதாரண்யகம் மிக அழகாக எடுத்துரைக்கிறது.

ஸ யதாடர்த்ரைதாக்னேரப்யாஹிதாத் ப்ருதக் துமாவினிஸ்சரந்தி, ஏவம் வா அரே அஸ்ய மஹதோ பூதஸ்ய நிஸ்சயஸிதமேதத் யத்ருக்வேதோ யஜுர்வேத:

ஸாமவேதோடதர்வாம்கிரஸ இதிஹாஸ: புராணம் வித்யா உபனிஷத: ஸ்லோகா: ஸூத்ராண்யனு வ்யாக்யானானி வ்யாக்யானான் யஸ்யைவைதானி நிஸ்வஸிதானி ||

பச்சை மரத்தை எரித்தால் எப்படி புகை சூழ்ந்து வெளிவருமோ அதேபோல், சர்வோத்தமனும், எக்காலமும் நிரந்தரமாக இருப்பவனும் ஆன ஹயக்ரீவ ரூபமான ஸ்ரீஹரியிடமிருந்து ரிக், யஜுர், சாம, அதர்வ என்னும் நான்கு வேதங்களும், மகாபாரதம், உபநிஷத், பஞ்சராத்ர, பிரம்மசூத்ர, வேதவியாக்யான, அனுவியாக்யான இவை அனைத்தும் ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் வெளிவந்தன. அப்படியே மஹத்தத்வம் ஆகியனவும் ஸ்ரீஹரியிடமிருந்து அனாயாசமாக ஸ்ருஷ்டியாயின.

**கே: மது-கைடபரை துர்கை கொன்றார் என்று சப்தஷதி சொல்கிறதே?**

ப: மது-கைடபரைக் கொன்றவர் ஹயக்ரீவர். ஆகையால், அக்ரூரர் நீரில் நின்றவாறு ஸ்ரீஹரியை இப்படி வணங்குகிறார். - 'ஹயஷீர்ஷ்ணே நமஸ்துப்யம் மது-கைடப ம்ருத்யவே'. இவர்களைக் கொன்றதாலேயே ஸ்ரீஹரிக்கு 'மதுசூதனன்' 'மாதவ' என்ற பெயர்கள் வந்தன. மது கைடபர்களை துர்கை கொன்றார் என்று சப்தஷதியில் சொல்லியிருப்பது கல்ப-பேதத்தினால் என்பதாக தெரிந்து கொள்ளவேண்டும்.

**கே: ஹயக்ரீவ தேவரின் விசேஷ சன்னிதானம் இருக்கும் இடம் எது?**

ப: பாகவதத்தில் சொல்லியிருப்பதைப் போல, பத்ராஷ்வ வர்ஷத்தில், 'பத்ரஸ்ரவ' என்னும் மனுவம்சத்தைச் சேர்ந்தவரால் பூஜிக்கப்பட்டு ஹயக்ரீவர் வீற்றிருக்கிறார். மேலும் சந்திர மண்டலத்தில் லட்சுமிதேவியினால் அமிர்தாபிஷேகம் செய்துகொண்டு அனைத்து உலகத்திற்கும் ஒளி தந்து கொண்டிருக்கிறார்.

**கே: சூர்ய மண்டலத்தில் ஹயக்ரீவர் நிலைகொண்டு, காயத்ரி மந்திர பிரதிபாத்யனாக இருக்கிறார் என்று உபநிஷத்கள் சொல்கின்றனவே?**

ப: ஆம். அது பெண் ரூபம். இவர் பிரம்ஹ காயத்ரி மந்திரத்தின் மூலம் வணங்கப்படுபவர். அறியப்படுபவர். வேதங்களால் ஆன உலகத்தைப் படைத்து, குதிரை ரூபம் தாங்கிய இவர், நம் அனைவரின் புத்தியை நல்வழிப்படுத்தட்டும் என்று காயத்ரி மந்திரம் இவரை வணங்குகிறது. காயத்ரி மந்திரத்தை ஜபம் செய்யும் அனைவரும், ஹயக்ரீவரை நினைக்க வேண்டும்.

**கே: சந்திர மண்டலத்தில் அமர்ந்திருக்கும் ஹயக்ரீவரைப் பற்றி விளக்குங்கள்.**

ப: ஸ்ரீவாதிராஜர் 'ஸச்சாஸ்தோதிதவர்த்மனா' என்ற ஸ்லோகத்தில் நம் மனதைக் கவருமாறு வர்ணிக்கிறார். சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவாறு என் பாத

கமலங்களை நினைத்தவாறு, ஆயுதங்களை தரித்து, என்னையே நினைத்து ஜபம் செய்பவர்களுக்கு, அனைத்து செல்வங்களுடன் தத்வஞானத்தையும் கொடுக்கிறேன் என்று புத்தகம், சங்கு, துளசிமாலை மற்றும் ஞானமுத்திரைகளை ஏந்தி நின்றிருப்பார். புத்தகம் பிடித்த கையின் சிறு விரலினால் தன் பாதங்களைக் காட்டிக் கொண்டிருப்பார். இத்தகைய அழகான ஹயக்ரீவரை லட்சுமிதேவி அமிர்தத்தினால் அபிஷேகம் செய்துகொண்டிருப்பாள்.

**கே: புத்தகம், சங்கு, துளசிமாலை மற்றும் ஞானமுத்திரை இவை எதை விளக்குகின்றன?**

ப: பிரம்மசர்ய நிலையில் இருக்கும்போது புத்தகம் படிப்பதில் நேரத்தை செலவழிக்கவேண்டும். கிருஹஸ்த நிலையில் ஈட்டிய செல்வத்தை நல்லவகையில் விநியோகம் செய்யவேண்டும். வானப்ரஸ்த நிலையில் ஸ்ரீஹரியைப் பற்றி நினைத்தவாறு ஞானத்தை அடைய வேண்டும். சன்யாஸ நிலையில் கையில் துளசிமாலை பிடித்து ஸ்ரீஹரியை நினைத்தவாறு தன்யர் ஆகவேண்டும் என்பதை தெரிவிக்கிறார்.

**கே: ஹயக்ரீவ ரூபம் மிகவும் உக்கிரமான ரூபமா?**

ப: பக்தி செய்யாதவர்களுக்கு மிகவும் உக்கிரம். பாதி பக்தி செய்பவர்களுக்கு பாதி உக்கிரம். முழுமையாக பக்தி செய்பவர்களுக்கு மிகவும் பிரியமான ரூபம். ஞானம் பெறுவதற்கு ஹயக்ரீவரை சரணாகதி அடைவோம்.

**கே: சேஷனின் மேல் ஷார்ங்க தனுசை தலையணையாகக் கொண்டு நாராயணன் படுத்திருக்கும்போது, கிருமிகள் நாணைக் கடித்ததால் அது அறுந்து, அவர் தலை துண்டாயிற்று. அப்போது குதிரையின் தலையை ஒட்டவைத்து ஹயக்ரீவன் ஆனார் என்று தேவிபாகவதத்தில் சொல்லியிருக்கிறதே. இதற்கு என்ன பொருள்?**

ப: புராணங்களின் பொருளை புரிந்துகொள்வது சுலபமல்ல. அசுர மோகனத்திற்காக இத்தகைய கதைகள் பற்பல உள்ளன. ஆனால் உண்மையான பொருளைப் பார்த்தால் அது வேறாக இருக்கும்.

**கே: தன் பெயர் கொண்ட ஒருவராலேயே தான் இறக்கவேண்டும் என்று ஹயக்ரீவ என்னும் அசுரன், தேவியிடம் வரம் பெற்றான் என்று தேவிபாகவதத்தில் இருக்கிறது. ஆனால் மது-கைடபரை கொல்வதற்காகவே ஹயக்ரீவ அவதாரம் நடந்திருக்கிறது என்று நீங்கள் கூறினீர்கள். இந்த வேறுபாட்டை விளக்கவும்.**

ப: இது கல்ப-பேதத்தினால் வந்தது எனக் கொள்ளலாம். இந்த கல்பத்தில் மது-கைடபரைக் கொல்வதற்காக ஹயக்ரீவரின் அவதாரம் நடந்திருக்கிறது. வேறொரு கல்பத்தில் ஹயக்ரீவாசுரரைக் கொல்வதற்காக ஹயக்ரீவரின் அவதாரம்

நடந்திருக்கலாம். ஒரே கல்பத்தில் இரு வெவ்வேறு நோக்கங்கள் சாத்தியம் இல்லை.

**கே: ஹயக்ரீவர் என்பவர் ஒரு முனிவர் என்று சொல்கிறார்களே. அப்படியா?**

ப: ஸ்ரீஹரியின் அவதாரம் வேறு. முனிவர் வேறு. இதேபோல் ஹயக்ரீவ என்னும் பெயரில் ராஜன் ஒருவன் இருந்தான் என்றும் மகாபாரத சாந்தி பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: ஞானாவதாரத்தில் முதல் அவதாரம் ஹயக்ரீவர். இதை உலகத்திற்கு தெரியப்படுத்தியவர் ஸ்ரீபாதராயர்தானே?**

ப: ஆம். ஆனால் ஸ்ரீபாதராயருக்கு முன்னால் தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசார்யர் ஹயக்ரீவதேவரை வணங்கும் முறையைப் பற்றி ஞானத்தை வேண்டுபவர்களுக்கு தெரியப்படுத்தினார். மேலும் தாத்பர்ய நிர்ணயத்தில் மூன்றாம் அத்தியாயத்தில் ஹயக்ரீவ அவதாரத்தைப் பற்றி மிகவும் அழகாக விவரிக்கிறார். பிறகு ஸ்ரீபாதராயர், ஹயக்ரீவரை பூஜிக்கும் வழிகளை முதன்முதலில் வழக்கத்திற்குக் கொண்டுவந்தார். பிறகு ஸ்ரீவாதிராஜர் இன்னும் விளக்கமாக ஹயக்ரீவதேவரின் பக்தியை அனைத்து இடங்களிலும் பரப்பினார்.

**கே: ஹயக்ரீவரை ஸ்ரீவாதிராஜர் தனது அனைத்து கிரந்தங்களிலும் நிறைய வர்ணித்திருக்கிறார். அவற்றின் சாரத்தை சுருக்கமாக சொல்லமுடியுமா?**

ப: நம் இதயத்தில் ஹரிபக்தி என்னும் கொடி வளரவேண்டும். அப்போது இந்த சிறிய இதயத்தில் வளரும் ஹரிபக்தி என்னும் கொடியை மெல்லுவதற்காக குதிரை ஓடி வரும் - 'குதுரே பந்திதே நம்ம செலுவகுதிரே பந்திதே'. இதுவே 'ஹரிபக்திலதா'.

**கே: 'ஹயஷீர்ஷோ யாம் பதி தேவஹேளனாத்|' என்று நாராயண வர்மத்தில் சொன்னதன் பொருள் என்ன?**

ப: வேதசாஸ்திரங்கள் மோட்சத்திற்கான வழி. சிலசமயம், வேதசாஸ்திரங்களால் விளக்கப்படுபவனை தெளிவாக புரிந்துகொள்ள முடியாதபோது அல்லது அந்த தேவதைகளின் நற்குணங்களை சரியாக புரிந்துகொள்ளாதபோது அல்லது தவறாக புரிந்துகொண்டபோது, தப்பும்தவறுமாக படித்தபோது, அந்தந்த தேவதைகளை புறக்கணித்ததுபோல் ஆயிற்று. அனைத்து வேதசாஸ்திரங்களுக்கும் ஹயக்ரீவரே அதிபதி. அதனால் மேற்கண்ட செயல்களினால், சாட்சாத் ஹயக்ரீவருக்கே அபசாரம் செய்ததுபோல் ஆகிறது. இத்தகைய அபசாரங்களிலிருந்து ஹயக்ரீவர் என்னைக் காப்பாற்றட்டும். நாராயண வர்மத்தில் சொன்னதற்கு இப்படியும் பொருள் கொள்ளலாம்.

**கே: ஹயக்ரீவரை வணங்கும் முறை இன்னும் அதிகம் பரவுவதற்கு என்ன செய்யவேண்டும்?**

ப: ஸ்ரீஹரியின் பல அவதாரங்கள் ஞான காரியங்களுக்காக நடந்திருக்கின்றன. அவற்றில் ஹயக்ரீவ என்னும் அவதாரம் மிகவும் முக்கியமானது. ஸ்ருஷ்டியின் துவக்கத்திலேயே வேதங்களால் ஆன உலகத்தை உருவாக்கி, நம் அனைவரின் குருவான வாயுதேவரை சர்வக்ஞராகச் செய்த ரூபம். நாமும் தத்வஞானிகள் ஆகவேண்டுமெனில் ஹயக்ரீவரையே பூஜிக்கவேண்டும்.

**கே: ஹயக்ரீவரை வணங்க வேண்டிய முறை என்ன?**

ப: தந்த்ரசாரத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பதைப் போல், ஹயக்ரீவ மந்திரத்தை ஜபம் செய்து ஹயக்ரீவ சாலிக்ராமத்தை அல்லது மூர்த்தியை தினந்தோறும் பூஜிக்கவேண்டும்.

ஜயவாஜேவக்த்ர ப்ரபோ
ஜயஸிந்து கன்யாபதே
ஜயதேவ சூடாமணே
ஜய அனந்தசக்தே || ஜய அனந்தஸிந்தோ ||
ஜய அகாதபோத || ப்ரபோ ||
ஸ்ரீரமானாத || துப்யம் நமஸ்தே நமஸ்தே நமஸ்தே நம:
பாஹிமாம் பாஹி ||

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி ஹயக்ரீவரை எப்படி தியானிக்கவேண்டும்?**

ப: வந்தே துரங்க வதனம் சசிபிம்ப ஸம்ஸ்தம்
சந்த்ராவதாதம் அம்ருதாத்மகரை: சமந்தாத் |
அண்டாந்தரம் பஹிரபி ப்ரதி பாஸயந்தம்
சங்க்யாக்ஷ புஸ்தக சு போத யுதாஸ்ச பாஹூம் ||50||

நஸ்தோ முகாதபி நிரந்தரமுத்கிரந்தம்
வித்யா அசேஷத உதாப்ஜ பவேச முக்யை: |
சம் சேவ்யமானமதி பக்தி பராவனம்ரை:
லக்ஷ்ம்யாऽம்ருதேன ஸததம் பரிஷிச்சமானம் ||51||

சந்திரபிம்பத்தில் அமர்ந்திருப்பவரும், சந்திரனைப்போல் வெண்மையானவரும், அமிர்தத்தைப் பொழிபவைகளும், மோட்சத்தை அளிக்கக்கூடியதுமான ஸ்வரூப கிரணங்களால் பிரம்மாண்டத்தின் உள்ளேயும் வெளியேயும் அனைத்து இடங்களிலும் பிரகாசிக்கச் செய்பவரும், சங்கு, ஜபமாலை, புத்தகம், ஞான முத்திரைகளால் தாமரைத்தண்டு போன்ற 4 தோள்கள் உள்ளவரும், மூக்கிலிருந்தும், வாயிலிருந்தும் எப்போதும் அனைத்து வித்யைகளையும் உபதேசித்துக் கொண்டிருப்பவரும், நான்முகம், ருத்ரன் ஆகியவரால்

பூஜிக்கப்படுபவரும், ஸ்ரீலட்சுமிதேவியினால் எப்போதும் அமிர்த அபிஷேகம் செய்யப்படுபவரும், குதிரை முகத்தை உடையவருமான ஹயக்ரீவரூபியான ஸ்ரீஹரியை வணங்குகிறேன்.

***

## 14. மஹிதாஸ

**கேள்வி: ஸ்ரீஹரியின் அவதாரத்தின் பெயர் ஐதரேய'வா? அல்லது மஹிதாஸ'வா?**

பதில்: மஹிதாஸ என்பதே சரியான பெயர். 'ஐதரேய' என்பதற்கு ஐதராதேவியின் மகன் என்பதே பொருள். 'ஜாபாலசத்யகாம' என்று சொன்னால் ஜாபால என்னும் ரிஷியின் மகன் சத்யகாம என்று எப்படி பொருள் வருகிறதோ அப்படியே 'ஐதரேய-மஹிதாஸ' என்றால் ஐதராதேவியின் மகன் மஹிதாஸ என்று பொருள்.

**கே: மாண்டோகி மற்றும் ஐதரா ஆகியோருக்கு பிறந்தவன் மஹிதாஸ. இவன் தவம் செய்து ரிஷி ஆனவன். வாசுதேவ த்வாதசாக்ஷர மந்திரத்தின் பலனாக ஹரிமேத என்னும் பிராமணரின் மகளை திருமணம் செய்து கிருஹஸ்தாஸ்ரமம் பெற்றுக்கொண்டு பற்பல யாகங்களைச் செய்து மகன்களைப் பெற்று, உலகப் புகழ் பெற்றான். இவனிடமிருந்தே ஐதரேய உபநிஷத் பிறந்தது. என்ற கதையைக் கேட்கிறோம். ஆனால் நீங்கள் ஸ்ரீஹரியே ஐதரேய என்று எப்படிச் சொல்கிறீர்கள்?**

ப: ஐதரேய என்று ஒரு முனிவர் இருப்பது நிஜம். அதனால் ஸ்ரீஹரியின் ஐதரேய அவதாரம் இல்லை என்று சொல்வது தவறு. இந்த முனிவரின் பெயர் ஐதரேய. ஸ்ரீஹரியின் அவதாரத்தின் பெயர் மஹிதாஸ. ஐதரேய என்னும் முனிவர் இருந்ததைப் போல, மஹிதாஸ என்னும் முனிவரும் இருந்ததாக எங்கும் சொல்லப்படவில்லை.

**கே: ஸ்ரீஹரியின் மஹிதாஸ அவதாரம் நடந்தது எப்போது?**

ப: ஸ்வாயம்புவ மன்வந்தரத்தின் முதலாம் பாகத்தில்.

**கே: இவரின் பெற்றோர்?**

ப: பிரம்மனின் மகன் விஷாலராஜன் மற்றும் ஐதராதேவி இவர்களின் மகன் மஹிதாஸ.

**கே: ஐதரேய என்றால் ஐதராதேவியின் மகன் என்று பொருள். மஹிதாஸ என்றால்?**

ப: மஹத்ஸூராணாம் தாஸத்வத: ஸ: மஹிதாஸ இதி ப்ரஸித்த: என்கிற ரிக் சம்ஹிதையின் வாக்கியத்தின்படி பிரம்மாதி தேவர்கள் இவரின் தாசராக இருந்ததால் மஹிதாஸ என்று பெயர்.

**கே: பூமியிலிருந்து பெறப்பட்ட ஆசனத்தில் அமர்ந்தவர் ஆகையால் மஹிதாஸ என்றோ - அல்லது - தன் வளர்ப்புத் தாயின் கர்வத்தை அழித்ததால் மஹிதாஸ என்றோ அழைக்கிறார்களே?**

ப: ஆம். அனைவரும் இந்த பொருள்களிலேயே மஹிதாஸ என்று அழைக்கின்றனர். அவர் கதைகூட இப்படியே பிரபலம் ஆகியிருக்கின்றது. ஐதரேயோபநிஷத்தின் உரையாசிரியரான ஷட்குருசிஷ்ய என்பவரும் இப்படியே சொல்லியிருக்கிறார். ஆனால் இதற்கு தகுந்த ஆதாரங்கள் இல்லை.

**கே: ஏன் ஆதாரமில்லை? பத்மபுராணத்தில் இந்தக் கதை இருக்கிறதுதானே?**

ப: பத்மபுராணத்தில் இந்தக் கதை மிகவும் சுவாரசியமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு முனிவருக்கு இரு மனைவிகள் இருந்தனர். ஒருவர் ப்ரியா. இன்னொருவர் ஐதரா. இருவரிடமிருந்தும் முனிவருக்கு வாரிசுகள் உண்டாயின. ஐதரையின் மகனே ஐதரேய. இவன் குழந்தையாக இருந்தபோது ஒரு முறை மிகவும் அழுதுகொண்டிருந்தான். அப்போது அவன் தாய் - வாயை மூடு என்றாள். அப்போது வாயை மூடியவன் பிறகு வாயை திறக்கவேயில்லை. பல ஆண்டுகள் கழித்து, ப்ரியாவின் மகன் தன் வேதாப்பியாசத்தை முடித்து முனிவரின் விரும்பத்தக்கவன் ஆனான்.

ஒரு முறை ஒரு யாகத்திற்காக அவனை அவன் தந்தை அழைத்துக்கொண்டு போனபோது, ஐதராதேவி தன் மகனின் நிலையைக் கண்டு வருத்தமடைந்தாள். 'நீ ஒரு ஊமை. உனக்கு வாயே இல்லை. நீ பேசினால் நான் எவ்வளவு மகிழ்ச்சியடைவேன்' என்றாள். மகன் உடனடியாக பேசத் துவங்கினான். 'எனக்கு வேதாப்பியாசமே ஆகவில்லை என்று நீ வருத்தப்படாதே' என்று தாயை சமாதானப்படுத்தினான். தாய் தன் மகனை யாகம் நடக்கும் இடத்திற்கு அழைத்துப் போனபோது, தன் தந்தையின் தொடை மேல் அமரப் போனான். தந்தையோ அவனை தடுத்து, கீழே தள்ளினான். அப்போது பூமியே உடைந்து, அவனுக்கு ஆசனம் அளித்தது. பிரம்மாதி தேவர்கள் அனைவரும் அவனை வணங்கினர். அப்போது அவனிடமிருந்து வெளிவந்ததே 'ஐதரேய உபநிஷத்'. ஸ்ரீஹரியின் அவதாரமான மஹிதாசனின் கதை மிகவும் சுவாரசியமானது.

பத்மபுராணத்தின் இந்த கதை ஸ்ரீஹரியின் அவதாரத்தையே சொல்கிறது என்பதற்கு சரியான ஆதாரங்கள் இல்லை. ஆகையால் இந்த கதை ஸ்ரீஹரியின் அவதாரத்தை சொல்கிறதா? அல்லது ஐதரேய என்னும் ரிஷியின் கதையை சொல்கிறதா? என்பதை விவாதிக்க வேண்டியது அவசியமாகின்றது.

**கே: இந்த அருமையான கதையை ஏன் மறுக்கவேண்டும்? இதே கதை ஸ்ரீஹரியைப் பற்றி சொன்னதாக ஏன் இருக்கக்கூடாது?**

ப: சரியான கேள்வி. ஆனால் தனது ஐதரேய உபநிஷத் பாஷ்யத்தின் துவக்கத்தில் ஸ்ரீமதாசார்யர் மஹிதாஸனின் கதையை நம் மனம் கவரும் வகையில் வர்ணித்திருக்கிறார். ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கும் கதையை உண்மையென்று நம்பினால், பத்மபுராணத்தின் கதை அதற்கு எதிர்ப்பதமாக இருப்பதால் அதை ஆதாரம் என்று தீர்மானிக்க முடியாது என்பதே நம் கருத்து.

**கே: ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கும் கதைக்கும் பத்மபுராணத்திலிருக்கும் கதைக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது?**

ப: பிரம்மனின் மகனான விஷால என்னும் ராஜனுக்கு இதரா என்னும் மனைவி இருந்தாள். ஸ்ரீஹரியைப் போல் ஒரு மகனைப் பெறவேண்டுமென்று இதரா கடும்தவத்தை மேற்கொண்டாள். இவளின் தவத்தை மெச்சி, ஸ்ரீஹரி தானே இவளின் மகனாக அவதரித்தார். ஒரு முறை தேவதைகளின் யாக சாலையில் ஐதரேயன் நுழைந்தபோது, இவரின் தேஜஸ்ஸை எதிர்கொள்ள முடியாமல் தேவர்கள் சிலையானார்கள். பிரம்மதேவர் மட்டும் மயங்காமல் இருந்தார். அப்போது ஸ்ரீஹரி அனைத்து தேவர்களுக்கும் புரியும் வகையில், ஐதரேய உபநிஷத்தை ஸ்ரீலட்சுமிக்கு உபதேசித்தார். இதையே பின்னர் ரிக்-சாகாவை சேர்ந்தவர்கள் படித்தனர். அதுவே ஐதரேய உபநிஷத் என்று பெயர் பெற்றது. இந்த கதையே ஆதாரபூர்வமானது.

**கே: மஹிதாஸனின் கதையை விரிவாக விளக்குங்கள்?**

ப: பிரம்மனுக்கு விஷால என்னும் ஒரு மகன் இருந்தார். இவர் இதரா என்பவரை திருமணம் செய்துகொண்டார். இதரா ஒரு மிகப்பெரிய தபஸ்வினி. ஸ்ரீஹரியைக் குறித்து கடுந்தவம் புரிந்தார். இவரின் பக்தியை மெச்சிய ஸ்ரீஹரி தோன்றி 'உனக்கு என்ன வரம் வேண்டும்?' என்று கேட்டார். ஸ்ரீஹரியின் அழகைக் கண்டு மயங்கிய இதரா, 'உங்களைப் போலவே எனக்கு ஒரு மகன் வேண்டும்' என்று வரம் கேட்டார். 'என்னைப் போல் இருப்பவன், நானே ஆதலால், நானே உனக்கு மகனாகப் பிறக்கிறேன்' என்று ஸ்ரீஹரி வரமளித்தார். ஸ்ரீஹரியின் வரத்தைப் பெற்ற இதரா மிகவும் மகிழ்ந்தார். சிறிது காலம் கழித்து, விஷாலனுக்கு இதரா மூலமாக ஸ்ரீஹரி அவதரித்தார். இதரையின் மகனாததால் ஐதரேய என்று அழைக்கப்பட்டார். இவரின் நிஜமான பெயர் மஹிதாஸ.

ஒருமுறை தேவர்கள் அனைவரும் ஸ்ரீஹரியைக் குறித்து ஒரு யாகத்தை மேற்கொண்டனர். யக்ஞமண்டபத்திற்கு இந்த மஹிதாஸன் வந்தார். இவரின் தேஜஸ்ஸினைக் கண்ட தேவர்கள் அனைவரும் சிலையானார்கள். பிரம்மதேவர் மட்டும் ஸ்ரீஹரியின் தேஜஸ்ஸை அறிந்தவர் ஆகையால், மயங்கவில்லை. கண்குளிர அவரைக் கண்டு மகிழ்ந்து, வாய் நிறைய அவர் புகழ் பாடினார். பிரம்மனின் வேண்டுதலுக்கு ஸ்ரீஹரி மெச்சினார்.

லட்சுமிதேவியும் வேத உபதேசங்களைச் செய்யவேண்டுமென்று ஸ்ரீஹரியிடம் வேண்டினார். தேவர்கள் நிறைந்த அந்த சபையில், லட்சுமிதேவிக்கு ஸ்ரீஹரி, மொத்த ரிக் வேதத்தையும் உபதேசித்தார். அதனாலேயே, ரிக் வேதத்திற்கு ஐதரேயவேத என்னும் பெயர் வந்தது. 'ஆரண்யக சம்ஹிதை' மூன்று பாகங்களின் ரிக்வேதத்தை உபதேசித்து, தத்வங்களை நிர்மாணித்தார். பின்னர் இதையே பிரம்மனின் மூலமாக அனைவரும் அத்யயனம் செய்யத் துவங்கினர்.

இப்படி அனைத்து ரிக்வேதத்திற்கும் மூலகுருவாக இருக்கின்ற மஹிதாஸனை சாஷ்டாங்கமாக வணங்குவோம்.

**கே: ஐதரேயன், யாக்ஞவல்க்ய ரிஷியின் மகன் என்று சொல்கிறார்களே?**

ப: ஆம். ஷட்குருசிஷ்ய என்னும் உரையாசிரியரும் இதையே சொல்கிறார். ஆனால் இவர் சொல்லும் கதையின் போக்கிலும் சிறிது வேறுபாடு இருக்கிறது. ஆகையால், ஐதரேயனைப் பற்றி மொத்தம் மூன்று விதமான கதைகள் இருக்கின்றன. மூன்று கதைகளும் சுவாரசியமாக இருந்தாலும் ஸ்ரீமதாசார்யர் ஐதரேயோபநிஷத்தில் சொல்லியிருக்கும் கதையையே சரியான ஆதாரமாக எடுத்துக் கொள்ளவேண்டும். மற்ற கதைகள், ஸ்ரீஹரியின் அவதாரங்கள் என்று எண்ணாமல், முனிவர்களின் அவதாரங்கள் என்றே எண்ண வேண்டும்.

**கே: ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கும் கதையில் இதராதேவியை ரிஷி ஒதுக்கி வைத்ததாக இல்லை. சரிதானே?**

ப: ஆம். இதராதேவி பெரிய தபஸ்வினி. தன் தவத்தினால் ஸ்ரீஹரியையே நேராக கண்டு வரம் பெற்ற மகாதேவி. இவரை ரிஷி ஒதுக்கி வைப்பதற்கான சாத்தியமே இல்லை.

**கே: மஹிதாஸ ரூபத்தில் ஸ்ரீஹரி உபதேசித்த உபநிஷத்கள் எவை?**

ப: ரிக்வேத சம்ஹிதையில் 64 அத்தியாயங்கள் உள்ளன. இதில் 40 அத்தியாயங்கள் பிராமண பாகம். 15 அத்தியாயங்கள் ஆரண்யகம். இந்த 15 அத்தியாயங்களைக் கொண்ட ஆரண்யகத்தில், 6 முதல் 14ம் அத்தியாயம் வரையிலான 9 அத்தியாயங்கள் 'ஐதரேய உபநிஷத்' என்று அழைக்கப்படுகின்றது. இதில் 6 அத்தியாயங்கள் ஆத்மனைப் பற்றி, 3 அத்தியாயங்கள் சம்ஹிதையைப் பற்றி சொல்வதால், இரண்டையும் சேர்த்து 'மஹைதரேயோபநிஷத்' என்று பெயர் பெற்றது.

**கே: இந்த 9 அத்தியாயங்களை (மஹைதரேயோபநிஷத்தை) மட்டும் ஐதரேயன் உபதேசித்தார். அப்படிதானே?**

ப: அப்படியில்லை. முழுமையான ரிக்வேதத்திற்கு சம்பந்தப்பட்ட சம்ஹிதா, ஆரண்யக, பிராம்ஹண இப்படி அனைத்து பாகங்களையும்கூட லட்சுமிதேவிக்கு உபதேசித்தார் என்று அந்த உபநிஷத்தின் துவக்கத்தில் வருகிறது. அதனாலேயே ரிக்வேதத்திற்கு ஐதரேய சம்ஹிதா என்றே பெயர் வந்தது.

**கே: பாகவதத்தில் மஹிதாஸ என்னும் அவதாரத்தைப் பற்றி விளக்கவே இல்லை. ஆகையால் இதை ஸ்ரீஹரியின் அவதாரம் என்று எப்படி சொல்கிறீர்கள்?**

ப:

துப்யம் ச நாரத ப்ருஷம் பகவான் விவ்ருத்த
பாவேன ஸாதும் பரிதுஷ்ட உவாச யோகம் ।
ஞானம் ச பாகவதமாத்மஸுதத்வதீபம்
யத் வாஸுதேவசரண விதுரஞ்சஸைவ ॥

நாரத, உனக்கும் எனக்கும், மஹிதாஸ ரூபியான ஸ்ரீஹரி, கர்மயோகத்தை, ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை தெளிவாகப் புரியவைக்கும் ஞானயோகத்தை உபதேசித்தார். விஷ்ணுவின் பரமபக்தர்கள் மட்டுமே அவற்றை தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும். இப்படி பாகவதத்தின் இரண்டாம் ஸ்கந்தத்தில் மஹிதாஸரைப் பற்றிய குறிப்புகள் தெளிவாக உள்ளன.

**கே: இந்த ஸ்லோகம் ஸ்ரீஹரியின் ஹம்ஸ அவதாரத்தைப் பற்றி சொல்கின்றன. நீங்கள் எப்படி இதை 'மஹிதாஸ' அவதாரத்தைப் பற்றியது என்று சொல்கிறீர்கள்?**

ப: பாகவதத்தின் இந்த ஸ்லோகத்திற்கு, பிரம்மபுராணத்தில் மிக அருமையான உரை உள்ளது. இதிலிருந்து இந்த ஸ்லோகம் மஹிதாஸ அவதாரத்தைப் பற்றியதே என்று கண்டிப்பாகக் கூறலாம். பிரம்ம புராணத்தில் இப்படி வருகிறது.

ஐதரேயோ ஹரி: ப்ராஹ நாரதாய ஸ்வகாந்தனும் ।
யத் ப்ராபுர்வைஷ்ணவா நான்யா யத்ருதே ந சுகம் பரம் ॥ இதி ப்ராம்ஹே ॥

மஹிதாஸ ரூபத்தில் ஹரி, நாரதருக்கு தன் ஸ்வரூபத்தை உபதேசித்தார். அதை விஷ்ணு பக்தர்கள் மட்டுமே புரிந்துகொள்ள முடியும். இதனை அறிந்துகொள்ளாமல், மோட்சம் கிடைக்காது என்று பிரம்ம புராணம் சொல்கிறது.

**கே: மஹிதாஸனை எப்படி வணங்க வேண்டும்?**

ப: முழுமையான ரிக்வேதத்தை உபதேசித்ததால் ஸ்ரீஹரியின் இந்த ரூபமே நம் அனைவருக்கும் மிகவும் முக்கியமான குருஸ்வரூபமாக இருக்கிறது என்று நினைத்து வணங்கவேண்டும். மற்றும் நாராயண வர்மத்தில் சொல்லியிருப்பதைப் போல், பிற தேவர்களை பூஜை செய்வதினால் வந்த தோஷங்களின் நிவர்த்திக்காக

மஹிதாஸரின் பூஜையை செய்யவேண்டும். இத்தகைய மஹிதாஸரின் அருள் நம் அனைவருக்கும் நிரந்தரமாக இருந்து ஞானாம்ருதத்தைப் பொழியட்டும் என்று வணங்குவோம்.

**கே: மஹிதாஸ அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: இதராதேவி ஸ்ரீஹரியை முழுமையாக நம்பினார். அதற்காக ஸ்ரீஹரி அவரிடம் மகனாகப் பிறந்து ஐதரேய என்று பெயர் பெற்றார். பிரம்மாதி தேவர்கள் கூட, ஸ்ரீஹரியின் ரூபமான ஐதரேயனை மலையாக நம்பினர். அதற்காக அவர்களுக்கு முழுமையான வேத உபதேசங்களைச் செய்து அனைவருக்கும் அருளினார். மஹிதாஸரை நம்பாத மற்றவர்கள் அதோகதிக்குச் சென்றனர். அதனால் 'நம்பி கெட்டவரில்லவோ' என்பதே மஹிதாஸ அவதாரம் சொல்லும் செய்தியாகும்.

***

## 15. நர நாராயண
## (ஹரி கிருஷ்ண)

**கேள்வி: நர நாராயண என்னும் அவதாரம் எங்கு நடைபெற்றது?**

பதில்: யமதர்மராஜனுக்கு 13 பேர் மனைவிகள் இருந்தனர். அவர்களில் மூர்த்தி என்னும் மனைவியிடம், ஸ்ரீஹரி நர மற்றும் நாராயண என்னும் இரு ரூபங்களில் அவதரித்தார்.

**கே: ராம கிருஷ்ணாதி ரூபங்களில் ஸ்ரீஹரி அவதரித்தபோது, அனைத்து சஜ்ஜனர்களும் ஆனந்தக்கடலில் மூழ்கினர். இந்த அவதாரம் நடந்தபோது சஜ்ஜனர்கள் எப்படி மகிழ்ச்சியடைந்தனர்?**

ப: ராம கிருஷ்ணாதி ரூபங்களின் அவதாரங்களைப் போலவே, இந்த அவதாரங்கள் ஆனபோதும் சஜ்ஜனர்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீஹரியை விதவிதமாக புகழ்ந்து மகிழ்ந்தனர். தேவாதிதேவர்கள் நர நாராயணரின் அருட்கடாட்சத்திற்காக காத்திருந்தனர். கந்தர்வர்கள் பாடினர், நடனமாடினர். இப்படி நர நாராயணரின் அவதாரம் ஆனபோது, அனைவரும் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

**கே: நர நாராயணர் பிறந்தவுடன் என்ன செய்தனர்?**

ப: வேதவியாஸ ரூபத்தைப் போலவே இவர்களும் பதரிகாஸ்ரமத்திற்கு புறப்பட்டனர்.

**கே: எதற்காக?**

ப: வாழ்க்கையில் தவம் செய்வதே முக்கியமானது. அத்தகைய தவத்தினை எப்படி செய்வது என்று சொல்லிக் கொடுப்பதற்காக. ஆகையால், நர மற்றும் நாராயண, இந்த இரண்டும் ஸ்ரீஹரியின் ரிஷிரூபங்களே ஆகும்.

**கே: நர மற்றும் நாராயண. இவர்கள் இருவரும் ஸ்ரீஹரியின் சாட்சாத் அவதாரங்கள்தானே?**

ப: கண்டிப்பாக இல்லை. நாராயண என்பது மட்டுமே ஸ்ரீஹரியின் சாட்சாத் அவதாரம். நர என்பது பலராமனைப் போல, ஆவேச-அவதாரம் ஆகும்.

நரே விஷ்ணு: ஸமாவிஷ்ட: ஸ்வயம் நாராயணோ ஹரி: |
அர்ஜுனே ச நராவேஷ: க்ருஷ்ணோ நாராயண: ஸ்வயம் ||

நாராயண ரிஷி சாட்சாத் ஸ்ரீஹரியே ஆகும். ஆனால், சேஷாவதாரமான நரனிடம் ஸ்ரீஹரியின் ஆவேசம் மட்டும் இருந்தது. அப்படியே கிருஷ்ணன் சாட்சாத் ஸ்ரீஹரி. ஆனால் இந்திர அம்சனான அர்ஜுனனிடம் நரனின் ஆவேசம் மட்டும் இருந்தது.

**கே: யமதர்மராஜன் - மூர்த்தி இவர்களிடம் நர மற்றும் நாராயண இந்த இரண்டு அவதாரங்கள் மட்டுமே நடந்தனவா? அல்லது வேறு அவதாரங்களும் தோன்றினவா?**

ப:
நரோ நாராயணாஸ்சைவ ஹரி: கிருஷ்ணஸ்ததைவ ச |
சத்வாரோ தர்மதனயா ஹரிரேவ த்ரயோ மத: |
அனந்தோ நரனாமாऽத்ர தஸ்மின்ஸ்து நரனாமவான் |
விசேஷேண ஸ்வயம் விஷ்ணுர்னிவசத்யம்புஜேக்ஷண: |
தஸ்மாச்சதுர்தா தர்மஸ்ய ஜாதோ விஷ்ணுரிதீரித: |

நர, நாராயண, ஹரி, கிருஷ்ண என்னும் நான்கு ரூபங்களில் ஸ்ரீஹரி, மூர்த்திதேவியிடம் அவதரித்தார். இந்த நான்கினில் நாராயண, ஹரி, கிருஷ்ண ஆகியவை சாட்சாத் ஸ்ரீஹரியின் அவதாரங்கள் ஆகும். நர என்பவர், ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரம் ஆகும். ஷாட்குண்ய என்னும் கிரந்தம் இப்படிச் சொல்வதாக, ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார்.

**கே: இந்த நான்கு அவதாரங்களில் வரும் கிருஷ்ணன், தசாவதாரத்தில் வரும் கிருஷ்ணன்தானே?**

ப: கண்டிப்பாக இல்லை. வசுதேவரின் மகனாக பிறந்த கிருஷ்ண அவதாரமே வேறு. யமதர்மனின் மகனாக பிறந்த கிருஷ்ண அவதாரமே வேறு. ஆனால், யமனின் மகன்களான ஹரி மற்றும் கிருஷ்ணன் ஆகிய அவதாரங்களின் கதைகள், சாஸ்திர கிரந்தங்களில் அதிகமாக சொல்லப்படவில்லை. நர மற்றும் நாராயண ஆகியோரின் கதைகள்கூட சுருக்கமாக ஆங்காங்கே சொல்லப்பட்டிருக்கின்றன.

**கே: அப்படியென்றால், கிருஷ்ணன் என்னும் அவதாரங்கள் எவ்வளவு உள்ளன?**

ப: யாதவ கிருஷ்ண, வாசிஷ்ட கிருஷ்ண, யமதர்மனின் மகன் கிருஷ்ணன் என்று மூன்று ரூபங்களில் கிருஷ்ண அவதாரம் நடைபெற்றிருக்கிறது. இதுமட்டுமல்லாமல், கேசவாதி 24 நாமங்களில் இருக்கும் கிருஷ்ண என்னும் ரூபமே வேறு. விஷ்ணுசஹஸ்ர நாமத்தில் சொல்லப்பட்டிருக்கும் கிருஷ்ண என்னும் ரூபம் வேறு. இப்படியாக மொத்தம் 3 அவதாரங்கள், 2 ரூபங்கள் என 5 கிருஷ்ணன் என்று நினைக்க வேண்டும்.

**கே: நர என்னும் அவதாரம் ஸ்ரீஹரியின் அவதாரமே ஆகும் என்று 'ஹரேரம்ஷௌ' என்னும் பாகவதத்தின் வாக்கியத்திலிருந்து தெரிகிறது அல்லவா?**

ப: ஆம். அதுமட்டுமல்லாமல், வீரராகவன் முதலான பல உரையாசிரியர்கள், நரன் என்பது சாட்சாத் ஸ்ரீஹரியின் அவதாரமே என்று வர்ணிக்கிறார்கள். ஆனால், ஸ்ரீமதாசார்யர் மிகவும் தெளிவாக, நரன் என்பது ஸ்ரீஹரியின் சாட்சாத் அவதாரம் அல்ல; ஆவேச-அவதாரமே என்று கூறியிருக்கிறார். ஒரு நதியினை கடலின் அம்சம் என்று எப்படி சொல்கிறோமோ அப்படியே நரன் என்பதும் ஸ்ரீஹரியின் அம்சம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். நதிக்கும் கடலுக்கும் எப்படி வேறுபாடு இருக்கிறதோ அதேபோல், நர என்னும் சேஷதேவருக்கும் ஸ்ரீஹரிக்கும் வேறுபாடு உள்ளது என்பதாக தெரிந்துகொள்ளவேண்டும்.

**கே: அப்படியென்றால் நர என்பது சேஷரின் அவதாரமா?**

ப: ஆம். நரன் என்பது சாட்சாத் சேஷதேவரின் அவதாரம். இதில் ஸ்ரீஹரி நர என்னும் ருபத்தில் நிறைந்திருக்கிறார். பலராமனிடத்தில் சுக்லகேஷி என்னும் ரூபத்தில் நிறைந்திருப்பதைப் போல.

**கே: நர நாராயண அவதாரத்தின் கதையினை விவரிக்கவும்**.

ப: டம்போத்பவ என்று ஒரு அரசன் இருந்தான். மொத்த பூலோகமும் அவனின் கீழ் இருந்தது. அவன் ஒரு நாள் தன் நாட்டு மக்கள் அனைவரையும் அழைத்து - நம்மைப் போல ஆயுதம் தரித்தவர்கள், போர் புரிபவர்கள் இந்த உலகில் வேறு யார் இருக்கிறார்கள் - என்று கேட்டான்.

ராஜனிடம் எல்லா நற்குணங்களும் இருந்தாலும், கர்வம் மிக அதிகமாக இருந்தது. தனக்கு சமமானவர் வேறு யாருமே இல்லை என்றே நினைத்திருந்தான். ஒரு முறை அல்ல, பல முறை தன் மக்கள் எதிரே இப்படி கர்வத்துடன் பேசிவந்தான். எரிச்சலடைந்த அந்த நாட்டு முனிவர்கள் ஒரு நாள் - உலத்தை வென்ற அரசர்கள் நீ மட்டும் அல்ல, இன்னும் பலர் இருக்கின்றனர் என்று ராஜனிடம் சொல்லியே விட்டனர்.

ரிஷிகளின் பேச்சைக் கேட்ட டம்போத்பவன் மிகக் கோபமடைந்தான். 'யார் இருக்கிறார்கள்? கூட்டி வாருங்கள் அவனை' என்று ஆவேசம் கொண்டான். ரிஷிகள் நர நாராயணர்களின் பெயரைச் சொல்லி, இவர்களின் முன் நீ ஒரு புல்லுக்கட்டுக்குக்கூட சமானமில்லை என்றனர். அதைக் கேட்டதும், ராஜன், நர நாராயணர்களின் மேல் போர் புரிவதற்காக தன் சேனையுடன் புறப்பட்டுவிட்டான்.

நர நாராயணர்கள் கந்தமாதன பர்வதத்தில் தவம் புரிந்து வந்தனர். அவர்களின் தவத்திற்கு இடையூறு விளைவிக்குமாறு, ராஜன் போரை துவக்கிவிட்டான். நாங்கள் தபஸ்விகள். எங்கள் மேல் ஏன் போர் தொடுக்கிறாய்? பல துஷ்ட க்க்ஷத்ரியர்கள் பூலோகத்தில் இருக்கிறார்கள். அவர்களிடம் போய் போர் புரிவதுதானே என்று நர நாராயணர்கள் கேட்டனர். அதைக் கேட்காத டம்போத்பவ,

திரும்பத்திரும்ப அவர்களையே போருக்கு அழைத்தான். அப்போது, நாராயணன் நரனுக்கு சைகை செய்து, ராஜனை அழிக்குமாறு கூறினார்.

தவத்திலிருந்த நரன் ஒரு புல்லினைப் பிய்த்து ராஜன் மேல் எறிந்தார். அதிலிருந்து பற்பல பயங்கரமான ரூபங்களைக் கொண்ட துர்க்கை தோன்றி, ராஜனின் மொத்த சேனையையும் அழித்துவிட்டாள். டம்போத்பவ ராஜன் மட்டுமே மிச்சம் இருந்தான். அப்போது அவனது கர்வம் முழுக்க அழிந்தது. நரனின் காலில் விழுந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். 'இனி இப்படி வேறு யாரையும் கேலி பேசினால், உனது அழிவிலிருந்து நீ தப்பிக்க முடியாது' என்று நரன் தெரிவித்தார்.

நர நாராயணரின் இந்தக் கதையை, கிருஷ்ண அர்ஜுனனுக்கு, உத்யோக பர்வத்தில் பரசுராமர் தெரிவிக்கிறார்.

**கே: நர நாராயணர் பத்ரிகாஸ்ரமத்திற்குச் சென்று என்ன செய்தனர்?**

ப: இவர்கள் இருவரும் ரிஷிகள் என்று பாகவத பதினோறாவது ஸ்கந்தம் தெரிவிக்கிறது.

தர்மஸ்ய தக்ஷதுஹிதர்யஜனி ஸ்வமூர்த்யா
நாராயணோ நர இதி ஸ்வத: ப்ரபாவ: |
நைஷ்கர்ம்ய லக்ஷணமுவாச சசார யோக
மத்யாபி சாஸ்த ரிஷிர்யனிஷேவிதாங்க்ரி: ||

எதையும் வேண்டாமல் தவம் செய்துவரும் நர நாராயணகள், ரிஷிகளால் வணங்கப்பட்டு, இன்றும் கூட ஆழ்ந்த தவத்தில் இருக்கின்றனர்.

**கே: ஸ்வர்க்க பதவியை வேண்டியே ஸ்ரீஹரி நாராயண ரூபத்தில் தவம் செய்து வருகிறார் என்ற நம்பிக்கை இருக்கிறதே?**

ப: நாராயணரின் தவத்தைக் கண்டு அஞ்சிய தேவேந்திரன், தன் ஸ்வர்க்க பதவியை நாராயணன் பறிக்கத்தான் இந்த தவத்தைச் செய்கிறார் என்று தவறாக எண்ணி, அவரின் தவத்தைக் கலைக்க அப்சரஸ்களை அனுப்புகிறார் என்னும் கதையும்கூட பிரபலமாகியிருக்கிறது.

**கே: அப்சரஸ்களின் நடனத்தைப் பார்த்து நாராயணர் மனம் கலையவில்லையா? பிறகு என்ன ஆயிற்று?**

ப: சிலர் காமத்திற்கு பலியாகின்றனர். காமத்தை வென்றவர்கள் கோபத்திற்கு பலியாகின்றனர். காமத்தை வெல்வது எவ்வளவு முக்கியமோ, கோபத்தை வெல்வதும் அதைவிட முக்கியம் என்பதை நாராயண ரூபியான ஸ்ரீஹரி இந்த உலகத்திற்கு எடுத்துக்காட்டினார். அப்சரஸ்கள் வந்தபோது அவர்களை வரவேற்றுப்

பேசினாலும், அவர்களிடம் மயங்கவும் இல்லை, அவர்களின் செயலுக்கு கோபம் கொள்ளவும் இல்லை.

**கே: அப்சரஸ்களுடன் பேசியதால் நாராயணரின் தவத்திற்கு இடையூறு வரவில்லையா?**

ப: ஸ்வர்க்க லோகத்தின் அப்சரஸ்களைக் கண்ட நாராயணர், தனது தொடையிலிருந்து ஆயிரமாயிரம் அற்புத அழகான வடிவினைக் கொண்ட பெண்களை உருவாக்கினார். அவர்கள் அனைவரும் தேவலோகத்துப் பெண்களைவிட பலமடங்கு அழகானவர்களாக இருந்தனர். இவர்களின் அழகினைக் கண்ட அப்சரஸ்கள், வெட்கமடைந்தனர். இப்படியாக நாராயணர் அப்சரஸ்களை தோற்கடித்து, அவர்களுக்கு புத்திமதி கூறி, திருப்பி அனுப்பினார்.

**கே: ஊர்வசி பிறந்தது இந்த சமயத்தில்தானே?**

ப: ஆம். நாராயணரின் ஊருவிலிருந்து (தொடையிலிருந்து) பிறந்ததால் இவளுக்கு ஊர்வசி என்று பெயர். தொடையிலிருந்து பிறந்த ஆயிரம் பெண்களிலிருந்து ஒருவரை மட்டும் ஸ்வர்க்க லோகத்திற்கு அனுப்பினார். தன்னிடமிருந்து பிறந்தவளின் அழகைக் காட்டுவதற்காக இவள் ஒருத்தியை மட்டும் தேவலோகத்திற்கு நாராயணர் அனுப்பிவைத்தார்.

**கே: இந்த நாராயணரின் அவதாரமே பத்ரி நாராயண அவதாரம் என்கிறார்களே?**

ப: ஆம். அப்படிச் சொல்லலாம். ஆனால் இன்றுகூட நாராயண ரூபியான ஸ்ரீஹரி தவத்தில் இருக்கிறார். அவர் இருக்கும் இடம், இன்றைய பத்ரிகாஸ்ரமம் அல்ல, அதற்கும் மேலே பெரிய பத்ரிகாஸ்ரமம் உள்ளது. அங்கு இவர் தவத்தில் இருக்கிறார் என்று மத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: வேதவியாஸ ரூபம் இருக்கும் இடத்தில்தான் நாராயண ரூபமும் இருக்கிறாரா?**

ப: நர பர்வத, நாராயண பர்வத என்று இன்றும்கூட இருவேறு மலைகளை காட்டுகின்றனர். நர பர்வதத்தில் இருக்கும் ஸ்ரீஹரி தவம் செய்துகொண்டிருக்கிறார். நாராயண பர்வதத்தில், ஸ்ரீஹரி நாராயண ரூபத்தில் இருக்கிறார். இந்த இரு மலைகளுக்கு சிறிது தூரத்தில் வேறு மலையான வியாஸபர்வதம் இருக்கிறது. அங்கு வியாஸரூபத்தில் ஸ்ரீஹரி இருக்கிறார். ஆக, நர, நாராயண, வேதவியாஸ ரூபங்கள் மூன்றும் இருக்கும் இடங்கள் வெவ்வேறு ஆகும்.

**கே: தவம் செய்துகொண்டிருக்கும் நாராயணரை இந்த கலியுகத்தில் யாரேனும் சந்தித்திருக்கிறார்களா?**

ப: மனிதர்கள் செல்லமுடியாத வேதவியாஸர் இருக்கும் இடத்திற்கு, ஜகத்குரு ஸ்ரீமன் மத்வாசாரியர் சென்று, அங்கு வேதவியாஸ தேவரை தரிசித்து, அவரால் அழைத்துச் செல்லப்பட்டு, நாராயண பர்வதத்தில் தவத்தில் இருக்கும் நாராயணரூபினான ஸ்ரீஹரியை தரிசனம் செய்தார் என்று மத்வவிஜயத்தில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அந்த நாராயண ரூபியான ஸ்ரீஹரியுடன் பேசவும் செய்தார்.

**கே: நம் பாரதத்தின் மிக உயரமான இடம் என்றால் அது பத்ரி க்ஷேத்திரம். அங்கு வீற்றிருப்பவர் நாராயணன். அதனால் நம் மொத்த பாரதத்தின் ரட்சகன் மற்றும் பூஜிக்கப்படவேண்டிய தெய்வம் நாராயணன்தானே?**

ப: ஆம். இந்த விஷயத்தில் கொஞ்சமும் சந்தேகமில்லை. இதை பாகவதமே மிகவும் தெளிவாக சொல்லியிருக்கிறது.

பாரதே஽பி வர்ஷே பகவான் நரநாராயணாக்ய ஆகல்பாந்த
முபசேததர்ம ஞானவைராக்ய ஐஸ்வர்யோ பஷமூபரமாத்மோபலம்போ஽
அனுக்ரஹா மத்மவதாரமனுகம்பயா தபூ஽வைக்தகதிஸ்சரதி ||

பாரத தேசத்தில் ஸ்ரீஹரி, நர மற்றும் நாராயண என்னும் இரு ரூபங்களில் இருக்கிறார். தர்ம, ஞான, வைராக்ய, ஐஸ்வர்ய, ஹரியிடம் பக்தி, இந்திரிய நிக்ரஹம், பரமாத்மாவை காண்பது ஆகிய தபஸ்விகளின் அனைத்து குணங்களையும், அவை இப்படிதான் இருக்கவேண்டும் என்று காட்டியவாறு, தன் பக்தர்களை தொடர்ந்து அருளுவதற்காக கல்ப முடிவு வரைக்கும் தவத்தினை செய்துவருகிறார்.

**கே: நர நாராயணரின் தவத்தினை கலைப்பதற்கு தேவேந்திரன் என்னென்ன தடைகள் செய்தான்?**

ப: இந்திரோபி நாக்யசுகமேஷ ஜிக்ருக்ஷதீதி
காமம் ந்யமங்க்த ஸகணம் ஸ பதர்யுபாக்யம்
கத்வா஽ப்ஸரோகணவஸம்த ஸுமந்தவாத்யை:
ஸ்த்ரீப்ரேக்ஷணேஷு பிரவித்யததன்மஹிஞா: ||

முக்யபிராண தேவர் ஒருவரைத் தவிர மற்ற அனைத்து தேவர்களுக்கும் அசுர ஆவேசம் இருக்கிறது என்று பாகவதத்தின் இந்த ஸ்லோகத்திற்கு பொருள் சொல்லும்போது, ஸ்ரீமதாசார்யார் சொல்கிறார். அதனால், அந்த சந்தர்ப்பத்தில் தேவேந்திரனுக்கு அசுர ஆவேசம் ஆயிற்று, ஆகவே தவத்திற்கு இடையூறு செய்திருக்கிறான் என்று கூறுகிறார்.

**கே: நர நாராயண அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: சில சாதகர்கள் தவம் செய்யவிரும்பி தோற்றிருப்பார்கள். சிலர் தவம் செய்யும் முயற்சியிலேயே தோற்றிருப்பார்கள். சிலர் சில காலம் தவம் செய்து, பின்னர் தொடர முடியாமல் தோற்றிருப்பார்கள். சிலர் பல காலம் கடுந்தவம் புரிந்து, பின் பெண்களின் அழகில் மயங்கி தோற்றிருப்பார்கள். சிலர் பெண்களின் செயல்களில் கோபப்பட்டு தோற்றிருப்பார்கள். தவத்தினை செய்வது காமத்தை வெல்வதற்காக மட்டுமல்ல. காமத்தைவிட கோபத்தை வெல்வதற்காக. இவை இரண்டையும் வென்று, தவத்தில் வெல்லும் சாதகர்கள் மிகமிகக் குறைவு. காமத்தை வென்று கோபத்தை வெல்லமுடியாதவர்கள், பசுவின் குளம்பில் தேங்கும் சேற்றில் விழுந்து நாசமடைவதைப்போல், நாசமடைவார்கள். இந்த நீதியை தெரிவிப்பதற்காகவே நாராயணன் யமதர்மனின் மகனான அவதரித்தார்.

**கே: 'மாமுக்ரதன்வாs கிலப்ரமாதாத் நாராயண: பாத்' என்னும் நாராயணவர்ம வாக்கியத்தின் பொருள் என்ன?**

ப: நாராயணன் எல்லாவித அபாயங்களிலிருந்து என்னை காப்பாற்றட்டும். 'நரஸ்சஹாஸாத் பாது' எனக்கு ஏற்படும் பரிகாசங்களிலிருந்து நரன் என்னை காப்பாற்றட்டும்.

ஸ்ரீஹரியை மறப்பது, தவறான ஞானம், படிக்காமல் இருப்பது, கெட்ட செயல்களைச் செய்வது இவற்றையே நமக்கு ஏற்படக்கூடிய அபாயங்கள் என்று சொல்கிறோம். இத்தகைய அபாயங்களில் சிக்கிக் கொள்ளக்கூடாதென்றால், நாராயணனையே சரணடையவேண்டும் என்று நாராயண வர்ம எச்சரிக்கிறது. மற்றவர்களின் பரிகாசத்திற்கு ஆளாவதிலிருந்து, நாம் மற்றவரை பரிகாசம் செய்யக்கூடாதென்னும் குணத்தைப் பெறவேண்டும் என்றால், நர என்னும் ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரத்தை சரணடையவேண்டும். அப்படிச் செய்தால், சஜ்ஜனர்களுக்கு எப்போதும் அவமதிப்பு ஏற்படாதவாறு நர ரூபி ஸ்ரீஹரி அருளுவான்.

***

## 16. வாசுதேவ

**கேள்வி: 24 ரூபங்களில் இருக்கும் வாசுதேவ என்பவர் யார்? இப்போது நாம் பார்க்கவிருக்கும் வாசுதேவ யார்?**

பதில்: 24 ரூபங்களில் இருக்கும் வாசுதேவன் வேறு. விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கும் வாசுதேவன் வேறு. இப்போது பார்க்கவிருக்கும் வாசுதேவ அவதாரம் வேறு. ஸ்ரீஹரியின் அவதாரங்களில் பேதம் (வேறுபாடு) கிடையாது. அந்த அவதாரங்கள் தோன்றிய நோக்கத்தில் மட்டும் வேறுபாடு உண்டு. அவர்களின் சிறப்புகளுக்கும் ஒற்றுமை உண்டு என்பது பொதுவான கருத்து.

**கே: வாசுதேவ அவதாரம் நடைபெற்ற காலம்?**

ப: ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில்.

**கே: அவதாரம் என்றால் தாய், தந்தையரை தீர்மானித்து, பூலோகத்தில் அவதரித்து, பல ஆண்டுகள் அந்த ரூபத்திலேயே இருக்கவேண்டும். ஆனால் வாசுதேவ ரூபம், த்ருவன் ஒருவனுக்கு மட்டும் காட்சி கொடுத்த ரூபம். இதை அவதாரம் என்று எப்படி சொல்கிறீர்கள்?**

ப: அப்படியொன்றும் விதியில்லை. நரசிம்ம, ஹம்ஸ ஆகிய அவதாரங்களில் தாய் தந்தையரே இருக்கவில்லை. பல ஆண்டுகள் இங்கேயே இருந்து நற்செயல்களைச் செய்ததாகவும் இல்லை.

**கே: வாசுதேவ அவதாரத்தின் நோக்கம் என்ன?**

ப: சின்னஞ்சிறுவனான த்ருவனுக்கு அருளுவது. சாதனையின் படியில் வாசுதேவ மந்திரத்தை ஜபம் செய்யும் அனைவருக்கும், அவர்களது ஆத்மவிசாரம் புலப்படுமாறு அருள்வதே இந்த அவதாரத்தின் முக்கிய நோக்கமாகும்.

**கே: த்ருவனுக்கு அருள்வதற்காக வந்த வாசுதேவ அவதாரத்திற்கும், ஸ்ரீபாதராஜருக்கும் என்ன சம்மந்தம்?**

ப: எந்த த்ருவன், வாசுதேவ என்னும் அவதாரத்திற்கு காரணமாக இருந்தானோ, அவனே நடைபெறும் கலியுகத்தில் ஸ்ரீபாதராஜராகி அவதரித்தான்.

**கே: இதற்கு என்ன ஆதாரம்?**

ப: ஐதீகம்.

**கே: ஐதீகம் என்றால்?**

ப: வேதங்களின் ஒரு பகுதியே (பிரிவு) ஐதீகம் என்று ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார். ஐதீகம் என்றால் முன்னோர்களின் சம்பிரதாயத்தில் வந்திருப்பது. அபரோக்ஷ ஞானிகள் என்று புகழ்பெற்ற தாசர்கள் தம் பாடல்களில் 'ஸ்ரீபாதராஜரு த்ருவனின் அவதாரம்' என்று பாடியிருக்கின்றனர்.

**கே: தம் த்ருவ அவதாரத்தைப் பற்றி ஸ்ரீபாதராஜர் சொல்லியிருக்கிறாரா?**

ப: தெளிவாகக் கூறவில்லை. ஆனால், ஸ்ரீபாதராஜர் இயற்றியிருக்கும், 'அத்யாத்ம மாலா' என்னும் பாடலில், தாம் த்ருவ அவதாரத்தில் எந்த கிரமத்தில் தியானம் செய்தார் என்பதை ஒரு ஊகமாக சொல்லியிருக்கிறார்.

**கே: த்ருவன் ஏன் தவம் செய்யப் புறப்பட்டான்?**

ப: தந்தை உத்தானபாதனுக்கு சுநீதி வேண்டாதவள் ஆனாள். சுநீதியின் மகன் த்ருவனும் வேண்டாதவன் ஆனான். சுருசியே வேண்டியவள். ஆகவே த்ருவன் ஸ்ரீஹரியைப் பார்க்க நடந்தான்.

**கே: இதனால் தெரியும் செய்தி என்ன?**

ப: நமக்கும் சு-நீதி வேண்டாததாக இருக்கிறது. சு-ருசியே பிடிக்கிறது. நல்ல கலாச்சாரம், பண்பாடு, நடவடிக்கை, பழக்கங்கள் என்னும் சு-நீதிகளை புறக்கணிக்கும்போது, த்ருவன் என்னும் ஹரிபக்தன், வீட்டிலிருந்து புறப்பட்டுவிடுகிறான்.

**கே: காட்டிற்குப் புறப்பட்ட சிறுவனை, சுநீதி ஏன் தடுக்கவில்லை?**

ப: தன் மகனை காட்டிற்கு அனுப்பிய சுநீதியின், அந்த தார்மிக தாயின் மனது இங்கிருக்கும் ஒவ்வொருக்கும் ஒரு பாடமாக இருக்கிறது. நமது வீட்டில் சிறுவர்கள், ஏகாதசி உபவாசம் செய்கிறேன், சந்தியாவந்தனம் செய்கிறேன் என்று சொன்னால், நீ இன்னும் சிறியவன், இதையெல்லாம் இப்போது செய்யவேண்டாம், பெரியவனாக ஆனபிறகு செய்தால் போதும் என்று மக்களின் ஆன்மீக / தார்மிக ஆசைகளுக்கு / உற்சாகத்திற்கு தடை போடும் தாய்கள், சுநீதியைப் போன்ற வீரமிக்க பெண்களின் சரித்திரத்தை ஒரு முறை நினைத்துப் பார்க்கவேண்டும்.

**கே: த்ருவன் தவம் செய்யும்போது, தேவர்கள் அவனின் சிந்தனையை கலைப்பதற்காக பல இடையூறுகளை செய்கின்றனர். பாம்பு, யானை, சிங்கம் ஆகிய விலங்குகளை அவன் மேல் தாக்க விடுகிறார்கள். நல்ல விஷயங்களுக்கு ஏன் தேவர்கள் தடை போடுகிறார்கள்?**

ப: நல்ல விஷயங்களுக்கு தடை போடுவதென்பது தேவர்களின் நோக்கமல்ல. த்ருவனின் சிரத்தையை அனைவருக்கும் தெரிவிக்கவேண்டும். அவனின் தவவலிமையை உலகத்தினருக்கு தெரியப்படுத்த வேண்டும். அதற்காகவே அவனுக்கு பல சோதனைகளைத் தருகின்றனர். இதை பிரம்மாண்ட புராணம் தெளிவாகச் சொல்கிறது.

யத்ர தேவை: க்ருதே விக்னே கண்டிதோ ந புமான் பவேத் |
தத்ர தத்யஷஸே விக்னம் குர்மு: நது விக்னாதனே ||

நாம் செய்யும் சத்காரியங்களுக்கு தேவர்கள் தடை செய்தால், அது நமது நல்லதுக்காகவே; அந்த செயல்களை கெடுப்பதற்காக அல்ல என்னும் பேருண்மையை இதிலிருந்து அறியலாம்.

**கே: தவத்தை முடித்து த்ருவன் திரும்பியபோது அவனது தந்தையான உத்தானபாதன் அவனை ஒரு பெண் யானையின் மேல் ஏற்றி விமரிசையுடன் கூட்டிவந்தான் என்று தெரியவருகிறது. ஆண் யானையின் மேல் ஏன் ஊர்வலம் நடத்தவில்லை? உத்தானபாதன் செய்தது தவறில்லையா?**

ப: ஆம். பாகவதத்தின் உரையாசிரியர் வீரராகவன் இந்த சந்தர்ப்பத்தில், 'கரிணீம்' என்று பாகவதத்தில் சொல்லியிருப்பதை, 'கரிணம்' என்று கொண்டு தவறாக உரை எழுதியிருக்கிறார். ஆனால், 'கலபஸ்சைவ கன்யானாம் கரிணீ பாலமங்களா' என்று ராஜநீதி சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதைப் போல, பெண்ணைப் பெற்றவர்களுக்கு ஆண் யானை நல்லது என்றும் ஆண் சிறுவனுக்கு பெண் யானை நல்லது என்றும் சொல்லப்படுகிறது. த்ருவனுக்கும் நல்லதே நடக்கட்டும் என்ற எண்ணத்தில் பெண் யானையின் மேல் ஏற்றி ஊர்வலம் நடத்தினான்.

**கே: ஸ்ரீஹரியின் அருளுக்குப் பாத்திரமான த்ருவன், த்ருவ லோகத்திற்கு அதிபதி ஆனான். இந்த த்ருவ லோகத்தை ஞானிகளும் புகழ்ந்திருக்கின்றனர். சிலர் த்ருவ லோகத்தை தூரத்திலிருந்து பார்ப்பதாகவும், வேறு சிலர் த்ருவ லோகத்தின் உள்ளேயே சென்று பார்த்ததாகவும் சொல்கிறார்கள். இந்த வேறுபாட்டிற்கு என்ன காரணம்?**

ப: விடை சுலபம். ஒவ்வொரு ஞானிகளும் த்ருவன் சென்ற பாதையில் சென்றே, மோட்சத்தை அடைகிறார்கள். தேவர்கள் அல்லாதவர்கள் மோட்சப் பாதையில் செல்லும்போது, த்ருவ லோகத்தை தூரத்தில் நின்றே பார்த்து, ஆச்சரியமடைகிறார்கள். தேவர்கள் த்ருவ லோகத்தின் உள்ளே சென்று, பிறகு தம் மோட்சப் பாதையில் முன்னேறுகிறார்கள்.

**கே: வாசுதேவனிடமிருந்து வரத்தைப் பெற்றபிறகு த்ருவன் மிகவும் துக்கமடைகிறான். அழியக்கூடிய த்ருவ பதவியைக் கேட்ட தன் ஆசையை திட்டுகிறான். அவனுக்கு விஷ்ணு லோகமும் கண்டிப்பாக கிடைக்கும் என்று**

**தெரியவருகிறது. ஸ்ரீஹரியின் அருளால் கிடைத்த த்ருவ லோகத்தின் மேல் ஏன் த்ருவன் வருத்தப்பட்டான்?**

ப: ஸ்ரீஹரியுடன் தனக்கு இருக்கும் சம்பந்தத்தை ஒரு பக்தன் வியாபாரம் ஆக்கக்கூடாது. அவனது அருளை விட்டு வேறு எதையும் கேட்கக்கூடாது என்பது ஒரு நல்ல பக்தனுக்கு அழகு. இந்த விஷயத்துக்காக த்ருவன் வருத்தப்பட்டானே தவிர, தனக்கு விஷ்ணு லோகம் கிடைக்கவில்லை என்பதற்காக வருத்தப்படவில்லை.

**கே: த்ருவனின் வெறும் ஆறு மாத கால தவத்திற்கு, ஸ்ரீஹரியின் வாசுதேவ அவதாரம் எப்படி சாத்தியம்?**

ப: இந்த கேள்விக்கு விஷ்ணு புராணத்தில் சுவாரசியமான பதில் உள்ளது. முந்தைய பிறவியில் த்ருவன் ஒரு பிராமணராக இருந்தான். பற்பல ஆண்டுகள் தவம் செய்தான். வெறும் ஆறு மாத கால தவம் மிச்சம் இருந்தபோது, அவனது மரணம் நிகழ்ந்தது. ராஜகுமாரனை நினைத்தவாறே இறந்ததால், இப்பிறவியில் த்ருவனாக பிறந்து, அந்த ஆறு மாத கால தவத்தினை செய்தான். ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெற்றான். ஆகையால் 'பஹூனாம் ஜன்மநாமந்தே' என்னும் வாக்கு உண்மையாயிற்று.

**கே: குழப்பங்கள் அனைத்தும் தீர்ந்தன. இப்போது வாசுதேவனைப் பற்றி சிறிது விளக்குங்கள்.**

ப: மிகவும் கடினமான தவத்தை மேற்கொண்ட சின்னஞ்சிறு சிறுவனின் பக்திக்கு மெச்சி, கருட வாகனத்தில் வாசுதேவன் தாவிப் பறந்து வந்தார். சங்கு, சக்ரம், கதா, பத்மம் ஆகியவற்றை ஏந்தி, த்ருவனின் முன் வந்து தரிசனம் தந்த ரூபமே, வாசுதேவ அவதாரம்.

**கே: ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெற்ற த்ருவனுக்கு திக்பிரமை (சுய உணர்வு இழத்தல்) பிடிக்கவில்லையா?**

ப: ஆம். ஸ்ரீஹரியின் தரிசனத்தால், த்ருவனுக்கு திக்பிரமையுடன் மகிழ்ச்சியும் உண்டானது. பேச்சே வரவில்லை. கண்களின் நீர் நிரம்பியது. தொண்டை வரண்டது. நாக்கு சிக்கிக்கொண்டது. ஸ்ரீஹரியை சாஷ்டாங்கமாக வணங்கி, கட்டித் தழுவினான். எப்படி போற்றிப் பாடவேண்டும் என்பதையே மறந்து சிலையாக ஆனான்.

**கே: பிறகு என்ன ஆயிற்று?**

ப: வாக்கிற்கு அபிமானியான லட்சுமிதேவியின் ரூபமான சங்கு மூலம், த்ருவனின் தலையை ஸ்ரீஹரி தொட்டார். உடனடியாக சிறுவனின் வாயிலிருந்து ஸ்லோகங்கள் வெளிவந்தன.

யோந்த: பிரவிஷ்ய மம வாசமிமாம் ப்ரசுத்தாம்
சஞ்சீவயத்யகில சக்தி தர:ஸ்வதாம்னா |
அன்யாம்ஸ்ச ஹஸ்தசரண ஷ்ரவணத்வகாதீன்
ப்ராணான் நமோ பகவதே புருஷாய துப்யம் ||

பேச்சு வராத எனக்கு பேச்சை வரவைத்தவனே. அனைத்து இந்திரியங்களும் அசைவற்றுப் போன எனக்கு சுயஉணர்வை தந்தவனே, என்னுள்ளே அந்தர்யாமியாக இருக்கும் அனைத்து நற்குணங்களும் நிரம்பிய வாசுதேவனே ! உனக்கு என் வணக்கங்கள்.

**கே: ஞானியான த்ருவன் இப்படி தன்னை வணங்கியதும், வாசுதேவன் அவனுக்கு என்ன வரத்தை அளித்தார்?**

ப: 'மகனே த்ருவா. உன் பக்தியைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். இன்றுவரை யாருக்குமே கிடைக்காத ஒரு மிகச்சிறந்த இடத்தை உனக்கு அருள்கிறேன். சப்தரிஷிகள் அத்ரி, கஷ்யப முதலான ரிஷிகள் எந்த லோகத்தை நிரந்தர பிரதட்சணம் செய்து வருகிறார்களோ அத்தகைய திவ்யமான இடத்தை உனக்கு அருள்கிறேன். செக்கிலிருந்து எண்ணெய் எடுக்க எருதுகள் எப்படி சுற்றுகின்றனவோ, அதேபோல் உன் லோகத்தையும் கிரகங்கள், நட்சத்திரங்கள் ஆகியவை சுற்றும். நானும் 'சிம்சுமார' என்னும் ரூபத்தில் உன் த்ருவ லோகத்தை தாங்கிப் பிடிப்பேன். 36,000 ஆண்டுகள் நீ அந்த உலகத்தில் தர்மத்துடன் ஆட்சி செய்வாயாக. அதன்பிறகு சிரஞ்சீவியாக அதே த்ருவ லோகத்தில் வாழ்வாயாக. இனி நீ எப்போதும் சம்சார வாழ்க்கைக்கு திரும்பமாட்டாய்.

**கே: ஹா. வாசுதேவன் எவ்வளவு கருணையுள்ளவன். இவனது அருளைப் பெறுவதற்கு நாம் எவ்வாறு அவனை வணங்க வேண்டும்?**

ப: 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' என்னும் வாசுதேவ மந்திரத்தை சாஸ்திரபூர்வமாக தினமும் ஜெபிக்கவேண்டும். சங்கு சக்ர கதா பத்ம ஆகியவற்றை ஏந்தி, கருட வாகனத்தில் எழுந்தருளியிருக்கும், த்ருவனுக்கு அருளிய வாசுதேவ ரூபத்தை தினமும், எந்நேரமும் நினைத்திருந்தால் அனைத்து பிரச்னைகளும் தீர்ந்துவிடும்.

**கே: இது என்ன வாசுதேவ மந்திரம்?**

ப: தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசார்யர், வாசுதேவ த்வாதசாக்ஷர மந்திரத்தைப் பற்றி விளக்கியிருக்கிறார். ஒவ்வொரு சாதகரும் இந்த மந்திரத்தை கண்டிப்பாக சொல்ல வேண்டும். ஆகவே இதனை உபதேசம் செய்துகொள்ள வேண்டும்.

**கே: சற்று விவரமாக விளக்கவும்.**

ப: அஷ்ட மஹாமந்திரங்களில் வாசுதேவ மஹா மந்திரமும் ஒன்று.

1. ஓம்காரம்
2. வியாஹ்ருதி
3. நாராயண அஷ்டாக்ஷர மந்திரம்
4. வாசுதேவ மஹா மந்திரம்
5. காயத்ரி மந்திரம்
6. மாத்ருகா மந்திரம்
7. புருஷ சூக்தம்
8. விஷ்ணு ஷடக்ஷர மந்திரம்

இந்த மந்திரங்களை ஒவ்வொரு சாதகரும் ஒவ்வொரு நாளும் ஜபிக்க வேண்டும். அதிலும், வாசுதேவ த்வாதசாக்ஷர மந்திர உபதேசத்தைப் பெறாதவன், தேவர பூஜை செய்யவும், ஔபாசனை, வைஸ்வதேவ ஹோமங்களைச் செய்யவும், வேறு எந்த சத்காரியங்களைச் செய்யவும் தகுதி அற்றவனாகிறான்.

இதை கவனத்தில் வைத்துக்கொண்டு, வாசுதேவ த்வாதசாக்ஷர மந்திரத்தை அனைவரும் ஜபிக்க வேண்டும். ஜபிக்காமல் விடவே கூடாது. இதைப்போல், வாசுதேவ சஹஸ்ர நாமத்தையும் படிக்கவேண்டும். இவற்றினால் வாசுதேவன் மகிழ்ந்து, நமக்கு அருளி, நம்மை காப்பாற்றுவார்.

***

# 17. கபில

**கேள்வி: சாங்க்ய மதத்தை தோற்றுவித்தவர் கபில. சாங்க்ய மதம் என்றால் என்ன?**

பதில்: எண்ணிக்கையின் மூலம் வளர்ந்த மதம் என்று பொருள். 24 தத்வங்களைப் பற்றி முழுமையான தகவல்களைக் கொடுத்து, 25வது தத்வமான ஹரிதத்வத்தைப் பற்றி கொண்டாடிய மதமே சாங்க்ய மதம்.

**கே: நம்மைப் பொறுத்தவரை, இயற்கையே (ப்ரக்ருதி) இந்த உலகத்திற்கு காரணம். அதுவே அனைத்தை விடவும் சிறந்தது. இந்த இயற்கை-வாதத்தை வளர்த்தவர் கபிலரூபியான ஸ்ரீஹரிதானே?**

ப: நீங்கள் கேட்பது நிரீஷ்வர சாங்க்ய மதம். இதற்கு காரணமானவர் கபிலரூபியான ஸ்ரீஹரி அல்ல.

**கே: பௌத்த மதத்திற்கு புத்தன் மூலபுருஷன் ஆனதைபோல், நிரீஷ்வர சாங்க்ய மதத்திற்கு கபில ரூபியான ஸ்ரீஹரி மூலபுருஷனா?**

ப: இல்லை. நிரீஷ்வர சாங்க்ய மதத்திற்கு மூலபுருஷர் ஈஷ்வரகிருஷ்ண. இவரை சிலர் கபில என்றும் அழைக்கின்றனர். இவர் வேறு, ஸ்ரீஹரியின் ஸ்வரூபமான கபிலனே வேறு.

**கே: ஆஸுரீ என்னும் சிஷ்யருக்கு உபதேசித்த கபிலனே சாங்க்ய மதத்தின் மூலபுருஷர் என்று அனைவரும் சொல்கின்றனரே?**

ப: நிரீஷ்வர சாங்க்ய மதத்தை தோற்றுவித்தவரும், பாகவதத்தின் சாங்க்ய யோகத்தை உபதேசித்தவரும் வெவ்வேறாக இருந்தாலும், ஆச்சரியம் என்னவெனில் இருவருக்கும் ஒரே பெயர் - கபில. இதைப்போலவே இருவரின் சிஷ்யருக்கும் ஆஸுரீ என்றே பெயர். இந்த ஒற்றுமைகளை கவனிக்காமல், ஸ்ரீஹரியின் ஸ்வரூபமான கபிலனே, நிரீஷ்வர சாங்க்ய மதத்தை தோற்றுவித்த கபிலன் என்று தவறாக புரிந்துகொண்டிருக்கின்றனர்.

**கே: நிரீஷ்வர சாங்க்ய மதத்திற்கும், பாகவதத்தில் கபிலன் உபதேசித்த சாங்க்ய யோகத்திற்கும் என்ன வேறுபாடு?**

ப: இயற்கையே (ப்ரக்ருதி) இந்த உலகத்திற்கு காரணம். இயற்கையின் பரிணாம வளர்ச்சியே இந்த உலகம். இப்படி இயற்கையை உயர்த்திச் சொல்லி, ஸ்ரீஹரியை (புருஷ) தாழ்த்தும் மதம் - நிரீஷ்வர சாங்க்ய மதம். கபில ரூபத்தில் ஸ்ரீஹரி

உபதேசித்த சாங்க்ய சாஸ்திரத்திற்கு - உண்மையான அறிவுக்கு ஆதரவு அளிக்கும் மதம் - என்று பொருள்.

**கே: அப்படியென்றால் இன்றைய விஞ்ஞான சாஸ்திரம் மற்றும் நிரீஷ்வர சாங்க்ய மதம் இரண்டும் ஒன்றேயல்லவா? இந்த விஞ்ஞான சாஸ்திரம், நிரீஷ்வர சாங்க்ய மதம் இவ்விரண்டிற்கும், கபிலரூபியான ஸ்ரீஹரியே மூலபுருஷன் என்று ஏன் சொல்லக்கூடாது?**

ப: கபிலன் உபதேசித்த சாங்க்ய சாஸ்திரம், நிரீஷ்வர சாங்க்ய மதம் மற்றும் இன்றைய விஞ்ஞான சாஸ்திரம் - இம்மூன்றும் வெவ்வேறு ஆகும். மேலாகப் பார்க்கையில் இவை முன்றும் ஒன்று போலத் தெரிந்தாலும், ஆழ்ந்து பார்த்தால் பற்பல வேறுபாடுகள் தெரியும். மேலும் நிரீஷ்வர சாங்க்ய மதத்திற்கும், விஞ்ஞான சாஸ்திரத்திற்கும், கபிலரூபியான ஸ்ரீஹரியே மூலபுருஷன் என்பதற்கு போதிய தகுந்த ஆதாரங்கள் இல்லை.

**கே: நாம் சொல்லும் பரிணாம கோட்பாடு (theory of evolution) மற்றும் உயிரற்றவைகளிலிருந்து உயிருள்ளவை பிறந்திருக்கின்றன என்னும் கோட்பாடு இவைகளும் சாங்க்ய மதம்தானே?**

ப: சாங்க்ய மதத்தில் பரிணாம கோட்பாட்டை ஒப்புக்கொள்வதில்லை. உயிரற்றவைகளிலிருந்து உயிருள்ளவை பிறந்திருக்கின்றன என்னும் விஷயத்தையும் ஒப்புவதில்லை.

**கே: ஆனாலும், விஞ்ஞான சாஸ்திரத்தின் கோட்பாடுகள், சாங்க்ய மதம் மற்றும் சார்வாக மதத்தின் கோட்பாடுகளைப் போலவே உள்ளதல்லவா?**

ப: ஆம். நிரீஷ்வர சாங்க்ய மதத்திற்கும், சார்வாக மதத்திற்கும், நவீன விஞ்ஞான கோட்பாடுகள் அப்படியே பொருந்தி வருகின்றன என்று சொல்லலாம். எதுவும், வேறு எதற்கும் துவக்கம் (மூலம்) என்று சொல்லமுடியாது. கபிலன் தேவஹூதிக்கு உபதேசித்த சாங்க்ய சாஸ்திரமானது இவை அனைத்தையும்விட வேறானது.

**கே: கபிலன் உபதேசித்த சாங்க்ய சாஸ்திரத்தில் உள்ள அபூர்வமான விஷயங்கள் என்ன?**

ப: யம, நியம, ஆசன, பிராணாயாம, ப்ரத்யாஹார ஆகிய அஷ்டாங்க யோகா'வைப் பற்றி உபதேசித்திருப்பது மிகவும் அபூர்வமானது. தத்வங்களைப் பற்றி 'இதமித்தம்' என்னும் முடிவு சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணுவின் முக்கியத்துவத்தை எடுத்துச் சொல்லி, தியானத்தின் மூலம் சம்சார சுழற்சியிலிருந்து விடுபடுவதற்கான சுலபமான வழிகள் இவை.

**கே: சாங்க்ய யோகத்தின் தத்வங்களில் கண்டிப்பாக நாம் தெரிந்துகொள்ள வேண்டியவை என்ன?**

ப:
‘சேத: கல்வஸ்ய பந்தாய முக்தயோ சாத்மனோ மதம் |
குணேஷ்டு சக்தம் பந்தாய தேஷ்வசக்தம் ஹி யுக்தயோ’ ||
3-26-15

சம்சார பந்தத்திற்கு காரணமாக இருக்கும் மனதே மோட்சத்திற்கும் காரணம். மனது சம்சாரத்தில் ஈடுபட்டால், அதன் கட்டுப்பாட்டுக்கு வந்துவிடுகிறது. ஸ்ரீஹரியிடம் ஈடுபட்டால், மோட்சத்திற்கு காரணம் ஆகிவிடுகிறது. மேலும்,

‘திதிக்ஷ்வ: காருணிகா: சுஹ்ருத: சர்வதேஹினாம் |
அஜாதஷத்ரவ: ஷாந்தா: சாதவ: சாதுபூஷணா:’ ||
3-26-21

மோட்சத்திற்கான பாதையில் செல்ல விருப்பமுள்ளவர்கள், மற்றவர்களின் அபராதங்களை பொறுத்துக் கொள்பவர்கள், கருணை உள்ளவர்கள், பிறருக்கு உதவும் உள்ளம் உள்ளவர்கள், யாரையும் எதிரியாக நினைக்காதவர்கள், ஹரிபக்தர்கள், நற்காரியங்களை மட்டுமே செய்பவர்கள் - இவர்கள் சஜ்ஜனர்கள் எனப்படுகின்றனர். இத்தகைய தார்மிக விஷயங்கள் கபிலகீதையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

**கே: கபில அவதாரத்தின் நோக்கம்?**

ப: சஜ்ஜனர்களான பக்தர்களுக்கு உபதேசம் செய்வதே இந்த அவதாரத்தின் நோக்கம். ஞான காரியத்திற்காக நடந்த அவதாரம் இது.

**கே: விரக்தியுடன் கர்தம ரிஷிகள் தவம் செய்திருந்தபோது, திருமணம் செய்துகொள் என்று வரமளித்த பிரம்மதேவரின் செயல் தவறுதானே?**

ப: கபில நாமக ஸ்ரீஹரியின் அவதாரத்திற்கு காரணமாக இருக்குமாறு, கர்தமருக்கு பிரம்மதேவன் அருளினார். 'கர்தமவீர்யமாபன்னோ ஜக்ஞே அக்னிரிவ தாருணி' - கபிலரூபியான ஸ்ரீஹரி, கர்தம ரிஷியின் வீர்யத்தில் நுழைந்து, தேவஹூதியிடம் பிறந்தார் என்று பாகவதம் சொல்கிறது.

**கே: ஜட-தேகம் இல்லாத ஸ்ரீஹரிக்கு வீரியத்தில் நுழைவது சாத்தியமா?**

ப: அழியக்கூடிய வீரியத்தில் தன் லீலையினால் நுழைந்து, அதை தாயின் உடலில் நுழைந்து, தன்னுடையதே ஆன ஞானானந்தமய ரூபத்தினால் அவதரிக்கிறான் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

நாவதாரேஷு ஹரேர்தஹ: ஷுக்லாதி ஸம்பவ: |
ததாபி ஷுக்லஸம்ஸ்த: ஸன் மாத்ருதேஹோ ப்ரவிஷ்யதி ||
விலாப்ய ஷுக்லம் தத்ரைவ கேவலஞானரூபக: |
உதீதி பகவான் விஷ்ணு: காலே லோகம் விமோஹயன் ||

**கே: புத்தாவதாரத்தைப் போலவே இந்த கபில அவதாரமும் மனதை வசீகரிக்கும் அவதாரமல்லவா?**

ப: இல்லை. ஞானத்தை வளர்ப்பதற்காகவே நடந்த அவதாரம் இது. தாய் தேவஹூதிக்கு உபதேசம் செய்யும் சாக்கில், அனைத்து பக்தர்களையும் மோட்சத்திற்குக் கொண்டுபோகும் அற்புதமான அவதாரம் இது.

**கே: இந்த வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து தப்பிக்க பக்தி செய்யவேண்டும். அந்த பக்தியில் பல விதங்கள் உள்ளன என்று கபிலர் உபதேசித்ததை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: புகழ் வேண்டும் என்பதற்காக கடமைகளைச் செய்தால் அது ராஜஸபக்தி. எந்த பிரதிபலனையும் எதிர்பாராமல் பக்தி செய்தால் அது சாத்வீகபக்தி. 'யஜேத் யஷவ்யமிதி ய: ப்ருதக் பாவ: ஸ ஸாத்விக:' என்பதைப்போல் ஒரு கடமையைப் போல் செய்யப்படும் பக்தியே சாத்வீக பக்தி என்று கபிலர் உபதேசிக்கிறார்.

**கே: கபிலரின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: கர்தம ப்ரஜாபதி என்பவர், சரஸ்வதி நதிதீரத்தில் பத்தாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். இவரின் வரத்திற்கு மெச்சிய ஸ்ரீஹரி, இவரை கிருஹஸ்தராக வாழ்வதற்கு அருளினார். அந்த வரத்தின் பலனாக, ஸ்வாயம்புவமனு இவரைத் தேடி வந்து, தன் பெண்ணை திருமணம் செய்து கொடுத்தார். சக்ரவர்த்தியின் மகளான தேவஹூதி மிகவும் அழகானவள். ஆனாலும் முனிவரான கர்மதரை தனது கணவராக வரித்தாள். கர்தம மற்றும் தேவஹூதி இருவரும் இனிய தம்பதிகளாக வாழ்ந்தனர். தேவஹூதி, கர்தமருக்கு பற்பல ஆண்டுகள் தன் சேவையை மகிழ்ச்சியுடன் செய்துவந்தாள். ஒரு இளவரசியாக இருந்தாலும், முனிவரின் மனைவியாக அவரது சேவையை செய்துவந்தாள். கர்தமரும் அவளது சேவையில் மகிழ்ச்சியடைந்தார். இவர்கள் நூறு ஆண்டுகள் வாழ்க்கையை நடத்தியதில், தேவஹூதிக்கு ஒன்பது பெண் குழந்தைகள் பிறந்தனர்.

வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து விடுபட நினைத்த தேவஹூதி அதற்காக ஒரு ஆண் குழந்தையை வேண்டினாள். அதற்கு கர்தமர், ஸ்ரீஹரியே கபிலனாக உன்னிடம் அவதரிப்பார் என்று கூறினார். தேவஹூதியும் மிகவும் பக்தியுடன் ஸ்ரீஹரியை வணங்கி வந்தபோது, அவளின் பக்திக்கு இணங்கி ஸ்ரீஹரி, தேவஹூதி-கர்தமர் தம்பதிகளிடத்தில் அவதரித்தார்.

கபிலனின் அவதாரத்திற்குப் பிறகு, கர்தமர் தன் ஒன்பது பெண்களையும் - மரீசி, அத்ரி, அங்கிரஸ, புலஸ்த்ய, புலஹ, க்ரது, வஸிஷ்ட, ப்ருகு, தக்ஷன் ஆகியோருக்கு மணம் முடித்தார். பின்னர், கபிலனிடத்தில் வந்து, தாம் சன்யாச ஆசிரமத்தை ஏற்கப்போவதாக அறிவித்தார். பின் தவத்திற்காக காட்டிற்குச் சென்றபிறகு, தேவஹூதி தன் மகனான கபிலனிடமிருந்து சாங்க்ய யோகத்தின் உபதேசத்தைப் பெற்று வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றிக்கொண்டாள்.

**கே: கபிலரூபியான ஸ்ரீஹரி எங்கெங்கு வியாபித்திருக்கிறார்? அவரை எப்படி வணங்குவது?**

1. வலது கையில்
2. யக்ஞ சாலையில்
3. கண்களின் கருமணியில்
4. இதயத்தில்
5. தொப்புளில்
6. கங்கை - கடல் சங்கமத்தில்
7. பயணத்தில்
8. துளசிதளத்தில்
9. குதிரையின் பிடரியில்
10. படுக்கையறையில்
11. நைவேத்தியம் செய்யும் வேளையில்
12. வேலைகள் / கடமைகள் செய்து முடிக்கும் நேரத்தில்
13. அழகான பொருட்களில்
14. கல்வி கற்றுக்கொடுப்பவர்களில்
15. பழங்களில்
16. பாதகம் இல்லாத இடங்களில்
17. வளர்ந்த தர்ப்பைகளில்
18. நெருப்பில்
19. ஓடும் நீரில்
20. பாயும் நதிகளில்
21. ஸ்லோகங்களில்
22. குரங்கில்
23. ஆசார சீலர்களாக விளங்குபவர்களில்
24. நாழிகையின் துவக்கத்தில்
25. மேற்கு திசையில்
26. ஒளிரும் மின்னலில்
27. தங்கத்தில்

இந்த எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கும் கபிலனை, அந்தந்த நேரத்திற்குத் தகுந்தவாறு நினைக்கவேண்டும். இதனால் நமது பயங்கள் நீங்கி, சுபயோகம் வரும் என்று விஜயதாசர் தனது கபில சுளாதியில் தெரிவிக்கிறார். இத்தகைய

கபிலனின் அருளைப் பெறுவதற்காக ஞானயோகத்தில் மூழ்கி அவனை த்யானிப்போமாக.

**கே: 'பாயாத் குணேஷ: கபில: கர்மபந்தாத்' - குணங்கள் மற்றும் ஐஸ்வர்யங்களால் நிறைந்த கபிலன் கர்ம பந்தனங்களால் நம்மை ரட்சிக்கட்டும் என்பதின் பொருள் என்ன?**

ப: தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசார்யர், 'ப்ரோத்யத் திவாகர சமானதனும்' என்னும் த்யான ஸ்லோகத்தின் மூலம் கபில மற்றும் தத்தாத்ரேய ஆகிய இரு ரூபங்களையும் வணங்குகிறார். நாராயண வர்மத்திலும் கபில மற்றும் தத்தாத்ரேயர் இருவரும் சேர்ந்தே வணங்கப்படுகின்றனர். இதன் மறைபொருளை பார்க்கவேண்டும். கார்த்தவீர்யார்ஜுனன் முதலான சக்ரவர்த்திகள் தத்தரின் யோகோபதேசத்தினால் நற்கதி அடைந்திருக்கிறார்கள். தாயான தேவஹூதி, மகன் உபதேசித்த யோக சாஸ்திரத்தினால் நற்கதி அடைந்தாள். ஞான காரியத்திற்காக அவதரித்த இந்த இரண்டு ரூபங்களும் யோக சாஸ்திரத்திற்கு முக்கிய காரணர்களாக இருப்பது, கவனிக்கத்தக்க அம்சம் ஆகும். ஆகையால் நம் வாழ்க்கையிலும் யோகத்தையே முக்கிய குறிக்கோளாக்கொண்டு, யோக மார்க்கத்தில் சென்று நற்கதி அடையவேண்டும். சத்தியத்தின் பாதையை காட்டுபவர் ஒருவரே ஆவார். இவனின் அறிமுகத்தைப் பெற்று, நம் பிறவியின் பலனைப் பெற, அந்த தத்தாத்ரேயனே நமக்கு அருளட்டும்.

**கே: கபில அவதாரத்தின் செய்தி என்ன?**

ப: காலை நேரத்தில் கபிலனை நினைக்கவேண்டும். அப்போது பக்தி வைராக்கியங்கள் ஓரிடத்தில் சேர்கின்றன. பக்தி மற்றும் வைராக்கியம் இரண்டும் ஓர் இடத்தில் சேரும்போது, அங்கு நான் வருவேன் என்னும் செய்தியை கபிலன் தன் அவதாரத்தின் மூலம் தெரிவிக்கிறார். கர்தமன் பக்தியின் குறி. தேவஹூதி வைராக்கியத்தின் குறி. கர்தம - தேவஹூதி திருமணத்தின் மூலம் பக்தி - வைராக்கியத்தின் சங்கமம் ஆனது. மன்வந்தராதிபதியின் மகளான தேவஹூதி மடியாக, பின்னல் போட்டு, எலும்பும் தோலுமாக இருந்த கர்தமரிஷியை மணக்க சம்மதித்தாள். மகளின் விருப்பத்திற்கேற்ப கன்யாதானம் செய்யத் தயாரானான் ஸ்வாயம்புவமனு. இன்றைய பெண்களுக்கு மற்றும் பெண்ணைப் பெற்றவர்களுக்கு, தேவஹூதி மற்றும் ஸ்வாயம்புவமனுவே சிறந்த உதாரணங்கள் ஆவர்.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி கபிலனை எப்படி வணங்கவேண்டும்?**

ப:

ப்ரோத்யத் திவாகர சமானதனும் சஹஸ்ரசூர்யோரு தீதிதிபிராப்த சமஸ்தலோகம் ।
ஞானாபயாங்கிதகரம் கபிலம் ச தத்தம் த்யாயேதஜாதிசமிதிம் ப்ரதி போதயந்தம் ॥

உதயசூரியனின் சிகப்பு வண்ணத்தை ஒத்த சரீரத்தைக் கொண்டவர், அளவில்லாத சூரியர்களைக் காட்டிலும் மிகுந்த ஒளியுள்ள கிரணங்களினால் எல்லா உலகங்களையும் வியாபித்திருப்பவர், ஞான மற்றும் அபய முத்திரைகளை தரித்திருப்பவர், நான்முகன், ருத்ரன் ஆகிய தேவர்கள் கூட்டத்திற்கு தத்வஞானத்தை போதிப்பவர், பக்தர்களுக்கு அருளுபவர். இப்படியான கபிலரூபி ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

***

## 18. தத்தாத்ரேய

**கேள்வி: யோக மார்க்கத்தில் முன்னேறுவதற்கு எந்த யோக ஆச்சாரியரின் பாதையை பின்பற்றுவது?**

பதில்: உங்களுக்காகவே ஸ்ரீஹரி 'தத்த' என்னும் அவதாரத்தை எடுத்திருக்கிறார். இவரே யோக சாஸ்திரத்தைத் துவக்கியவர். அனைத்து யோகிகளுக்கும் வழிகாட்டியாகவும் குருவாகவும் இருந்து 'யோகி-ஜனப்ரிய' என்னும் பெயர் பெற்றவர்.

**கே: எனக்கு தியானம் செய்வது மிகவும் பிடிக்கும். ஒரு முறை ஒரு தத்துவவாதியிடம் பயிற்சி பெறப் போயிருந்தபோது, அவர் தத்தாத்ரேய ரூபத்தை அறிமுகப்படுத்தி, தியானம் செய்வதற்கு வழி காட்டினார். இது சரியா தப்பா?**

ப: இது தவறில்லை. ஆனால், அவர் உங்களுக்கு முதல் வகுப்பில் என்னென்ன சொல்லிக் கொடுத்தார்?

**கே: 'அனைவரும் சமம் என்று உணரவேண்டும். த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத இவற்றைத் தாண்டி நிற்கவேண்டும்'. மேலும் தன்னை தத்தாத்ரேயரின் ஸ்வரூபம் என்று சொல்லிக் கொண்டார். அவர் சொல்லியதில் என்ன தவறு இருக்கிறது?**

ப: ஹாஹா. வெறும் பத்து ஆண்டுகள் தியானம் செய்து சில சித்திகளைப் பெற்றதும், தான் தத்தாத்ரேயரே ஆகுவதென்றால், பழங்கால முனிவர்கள் ஏன் தம்மை மிகச் சிறிவர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள்?

**கே: மற்றவரை திட்டுவதெனால் உங்களுக்கு பெரும் மகிழ்ச்சி. அனைத்து பிரச்னைகளையும் தாண்டி நாம் தியானம் மூலமாக அமைதியை பெறுபவர்கள். நமக்கு தியானம் சொல்லிக் கொடுத்த குரு, தத்தாத்ரேய ரூபம் எனில் அது நமக்கு மகிழ்ச்சிதானே?**

ப: மகிழ்ச்சி. உங்கள் நம்பிக்கையைக் குலைப்பது எனது நோக்கமல்ல. ஆனால், 'எனக்கு தெரிந்ததே உண்மை', 'எனக்கு தோன்றியதே தத்வம்' என்று சொல்பவரிடம் போய் தொலைந்து விடாதீர்கள்.

**கே: அப்படியென்றால் தியான யோகிகள் அனைவரும் ஏமாற்றுக்காரர்களா? அவர்களது குரு பரம்பரை போலியா?**

ப: உண்மையின் வழி வேறு. உண்மையை நாடவேண்டுமானால், அதன் பாதையையே தேடிப் பிடிக்கவேண்டும்.

**கே: பல புகழ்பெற்ற குருஜிகள் மற்றும் மந்திர சித்தி பெற்றவர்கள் தம்மை தத்தாத்ரேயரின் ஸ்வரூபம் என்று சொல்லிக் கொள்கின்றனர். 'ஆம்' என்று சொல்வதற்கு நமக்கு மனம் ஒப்புவதில்லை. 'இல்லை' என்று சொல்வதற்கு சாத்தியம் இல்லை. இந்த குழப்பத்திற்கு ஒரு தீர்வைச் சொல்லுங்கள்.**

ப: அத்தகைய குருஜிகள் தம்மை கடவுள் என்று சொல்வதற்கு சாஸ்திரங்களை ஆதாரமாகக் காட்டுகிறார்களா இல்லையா? இல்லை என்றால் அவர் போலி என்றாகிறது. ஆம் என்றால் அதே சாஸ்திரங்களில் சொல்லியபடி அவர் கடவுள் இல்லை என்றாகிறது.

**கே: எனக்கு தியானம் செய்யவேண்டும் என்ற பைத்தியம் பிடித்திருந்தது. தற்போது ஒரு யோகியிடம் இருக்கிறேன். இவர் எனக்கு பத்து ஆண்டுகளில் குண்டலினி சக்தியை எழுப்புகிறேன் என்றிருக்கிறார். இவருக்கு பணம், புகழ் இவற்றின் மேல் கொஞ்சமும் ஆசை இல்லை. யாருமில்லாத இடத்தில் எனக்கு உபதேசித்த இவரை நான் தத்தாத்ரேயரின் ஸ்வரூபம் என்று வணங்குகிறேன். இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?**

ப: உங்கள் கேள்விக்கு விளக்கமான பதில் கொடுக்க விரும்பவில்லை. ஆனால் சித்தி பெற்றதால், அதுவே சரியான வழி என்று சொல்வதற்கில்லை. மேலும் ஸ்ரீஹரி கலியுகத்தில் கண்டிப்பாக அவதாரம் செய்வதில்லை. ஆகையாலேயே ஸ்ரீஹரிக்கு 'த்ரியுக' என்று பெயர்.

**கே: அப்படியென்றால், தத்தாத்ரேயர் வழிவந்த யோகிகள் அனைவரும் தவறான வழியில் போகிறவர்களா?**

ப: நான் அப்படிச் சொல்லவில்லை. தியான யோகத்தில் சித்தி அடைந்தவர்கள் அனைவரும் உண்மையான வழியில் நடக்கிறவர்கள் அல்ல. எவ்வளவோ பேர் ஹடயோகத்தில் சித்தி பெற்று, தாம் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து 10 அல்லது 50 அடி மேலே போகிறார்கள். இவர்களை நீங்கள் என்னவென்று சொல்கிறீர்கள்? இதுவே என் வாதம்.

**கே: ஆம். நீங்கள் சொல்வது அனைத்தும் உண்மை. சமீப காலமாக தத்தாத்ரேயரை வணங்குபவர்கள் பல இடங்களில் தியான முகாம், யோகா முகாம் ஆகியவற்றை அமைத்து, மக்களை தவறான வழியில் அழைத்துப் போகிறார்கள். இவர்களை நாம் எதிர்க்க வேண்டும் அல்லவா?**

ப: இல்லை. ஒருவர் தவறு செய்ததால், அவர் பின் இருக்கும் ஒட்டுமொத்த தர்மத்தையே குற்றம் சொல்வது தவறு. அவர் சொல்வதில் இருக்கும் தவறுகளை சுட்டிக்காட்டி, உண்மையான தர்மம் மற்றும் வழியைக் காட்டி, அதில் உறுதியாக இருக்கவேண்டும்.

**கே: தத்தாத்ரேய என்றால் என்ன?**

ப: பக்தர்களுக்காக தன்னையே கொடுத்தவர் ஆகையால் 'தத்த' என்று புகழ்பெற்றவர். அத்ரி ரிஷிகளின் வேண்டுதலின்படி அவரது மகனாக அவதரித்ததால் 'ஆத்ரேய' என்ற பெயர். இவ்விரண்டு பெயர்களையும் சேர்த்து உலகத்தில் மற்றும் சாஸ்திரங்களில் பக்தர்கள் 'தத்தாத்ரேய' என்று அழைக்கின்றனர்.

**கே: தத்தாத்ரேய அவதாரத்தின் பின்புலம்?**

ப: 'தேன நஷ்டேஷு வேதேஷு ப்ரக்ரியாஸு மகேஷு ச' என்று ஹரிவம்சத்தில் சொல்லியவாறு, அந்த காலத்தில் வேதங்கள் அனைத்தும் நாசம் ஆகும் நிலைக்கு வந்தன. உண்மைக்கு வழியில்லாமல், பொய்யானது வெற்றிநடை போட்டுக்கொண்டிருந்தது. இத்தகைய சூழ்நிலையில் ஸ்ரீஹரி, தத்தாத்ரேயராக அவதரித்தார்.

**கே: அவதாரம் நடைபெற்ற காலம்?**

ப: ஸ்வாயம்புவ மன்வந்தரத்தின் துவக்கக் காலம். சுமார் 200 கோடி ஆண்டுகளுக்கு முன். பாகவதத்தில் சொல்லியபடி இது ஸ்ரீஹரியின் ஆறாவது அவதாரம்.

**கே: அத்ரி-அனுசுயாவிடம் தத்தாத்ரேயர் ஏன் அவதரித்தார்? எப்படி அவதரித்தார்?**

ப: படைத்தல் - காத்தல் - அழித்தல் இம்மூன்றுக்கும் காரணமான ஸ்ரீஹரியைக் குறித்து அத்ரி முனிவர் தவம் செய்தார். இவரது மனைவியான அனுசூயையும் விஷ்ணுவுடன், பிரம்ம மற்றும் ருத்ரதேவரையும் பூஜித்து வந்தார். இவர்கள் இருவரின் தவத்திற்கு மெச்சி, மூன்று தேவர்களும் பிரத்யட்சமாயினர்.

**கே: தத்தாத்ரேயரின் கதையை விளக்குங்கள்.**

ப: கர்தம ரிஷிக்கு தேவஹூதியிடம் மொத்தம் ஒன்பது பெண் குழந்தைகள் பிறந்தனர். அதில் அனுசுயையும் ஒருவர். அத்ரி முனிவர் இவரை மணம் செய்துகொண்டார்.

உத்தம வாரிசுக்காக அத்ரி முனிவர் அனுசுயாவுடன் ஸ்ரீஹரியைக் குறித்து தவம் மேற்கொண்டார். ஸ்ரீவிஷ்ணுவினை படைத்தல் - காத்தல் - அழித்தல் ஆகியவற்றிற்கு காரணமானவர் என்று தன் இதய கமலத்தில் வணங்கினார். இவரின் தவத்தின் பலனாக ஸ்ரீஹரி தோன்றினார். ஸ்ரீஹரியுடன், பிரம்மா மற்றும் ருத்ரரும் வந்தனர். த்ரிமூர்த்திகளையும் கண்ட தம்பதிகள் விழுந்து வணங்கினர். ரிஷப வாகன, ஹம்ஸ வாகன மற்றும் கருட வாகனர்களான த்ரிமூர்த்திகளும்

சூலம், கமண்டலம், சக்கரம் முதலான சின்னங்களுடன் வந்து அத்ரி அனுசுயா தம்பதிகளுக்கு அருளினர். வாரிசு உண்டாகட்டும் என்ற வரத்தை அளித்து, தாங்களே வந்து அவதரித்தனர்.

அத்ரி அனுசுயா தம்பதிகளிடம் பிறந்த ஸ்ரீவிஷ்ணு 'தத்த' என்ற பெயருடன், சதுர்முக பிரம்மன் 'சோம' என்னும் ஆவேச ரூபத்துடன், ருத்ரர் 'துர்வாச' என்னும் ரூபத்துடன் அவதரித்தனர். பிரம்மனுக்கு பூலோகத்தில் ஸ்வரூப அவதாரம் இல்லாத காரணத்தால், ஆவேச அவதாரம் செய்தார்.

இந்த தத்தனே உலகத்தில் தத்தாத்ரேயன் என்று புகழ்பெற்றிருக்கிறார். ராம கிருஷ்ண அவதாரங்களைப் போலவே இதுவும் ஸ்ரீஹரியின் அவதாரமே ஆகும். இவரே யோகசாஸ்திரத்தை துவக்கி வைத்தவர். இன்றும்கூட பலரும் தியானம் செய்யும்போது இவரையே தமது குருவாக நினைத்து வணங்குகின்றனர்.

இதே தத்தாத்ரேயன் கார்த்தவீர்யார்ஜுனனுக்கு யோக சாஸ்திரங்களை உபதேசித்து, அவரை தத்வஞானியாக மாற்றினார்.

**கே: த்ரிமூர்த்திகளின் சங்கமமே தத்தாத்ரேய. அகையாலேயே மூன்று முகங்கள். ஆறு தோள்கள். வலது பக்கத்தின் மூன்று தோள்களில் திரிசூலம், ஜபமாலை, தாமரை ஆகியவற்றை ஏந்தி, இடது மூன்று தோள்களில் சக்ர, சங்கு, கமண்டலத்தை ஏந்தியிருப்பவர். இதுவே தத்தாத்ரேயனின் உருவம் அல்லவா?**

ப; இதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை. எந்த சாஸ்திரங்களிலும் தத்தாத்ரேயரை இப்படி வர்ணிக்கவில்லை. தத்தாத்ரேயரின் ஸ்வரூபத்தை இந்த புத்தகத்தின் அட்டைப் படத்தில் பார்க்கலாம்.

**கே: விஷ்ணுவை மட்டும் வணங்கியபோது மூன்று தேவர்களும் வந்தனர். இதனால் மூவரும் ஒன்றே என்று தெரிகிறதல்லவா?**

ப: பாகவதத்தின் நான்காம் ஸ்கந்தத்தைப் படித்தால் அப்படிதான் தோன்றும். ஆனால், பிரம்ம ருத்ரர்களின் உள்ளிருக்கும் விஷ்ணு ரூபம், மற்றும் தனியான விஷ்ணு ரூபம் இம்மூன்றையும் முனிவர் வணங்கியதாலேயே, இந்த மூன்று ரூபங்களிலும் வேறுபாடு இல்லை என்பது தெளிவு.

**கே: அனுசுயாவிடம் பிரம்ம, விஷ்ணு, மகேஸ்வரர்கள் வந்து, நீ நிர்வாணமாக வந்து எமக்கு உணவளிக்க வேண்டும் என்கின்றனர். அப்போது அனுசுயா கமண்டலத்தில் இருக்கும் நீரை மூவர்மேலும் தெளிக்கிறார். மூவரும் குழந்தையாக மாறியதும் உணவளிக்கிறார். இப்படியான ஒரு கதை உலகத்தில் மிகவும் பிரபலமாக இருக்கிறது. இதுதானே தத்தாத்ரேய அவதாரம்?**

ப: இது முற்றிலும் கற்பனையான, கீழ்த்தரமான கதை.

**கே: தத்தவழியில் வந்தவர்கள் பலர் மாந்திரீகங்களில் ஈடுபட்டிருக்கின்றனர். இதற்கு என்ன காரணம்?**

ப: இதற்கு சுவாரசியமான கதை ஒன்று இருக்கிறது. தத்தாத்ரேயனாக அவதாரம் செய்து, தத்வவாதத்தை எல்லா இடங்களிலும் பிரசாரம் செய்தபோது, லட்சக்கணக்கான மக்கள் இவரைப் பின்தொடரத் துவங்கினர். இவரின் சிஷ்யர்கள் ஆயினர். அப்போது ஸ்ரீஹரிக்கு யாருடைய தொடர்பும் வேண்டாம் என்று ஆயிற்று. சுராபானத்தை உருவாக்கினார். மனநிலை சரியில்லாதவர் போல் வீதிகளில் திரிந்தார். பெண்களையும் நாடினர். அதற்குள் மக்கள் அவரைவிட்டு தூர விலகத் துவங்கினர். சில அஞ்ஞானிகள் மட்டும், இதுவே தர்மம் என்று தவறாக நினைத்து, சுராபானத்தைப் பருகத் துவங்கினர். அங்கிருந்தே மாந்திரீகமும் துவங்கியது. ஆனால் மாந்திரீகத்தை ஸ்ரீஹரியே துவக்கினார் என்பதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை.

**கே: கார்த்தவீர்யார்ஜுன, பிரகலாத, யது, அலர்க முதலான சக்ரவர்த்திகள் தத்தாத்ரேயரின் சிஷ்யர்களாயினர் என்று கேள்விப்படுகிறோம். சுராபானம் முதலானவற்றை பயன்படுத்திய இவரின் சிஷ்யர்களாக இவர்கள் எப்படி ஆயினர்?**

ப: தத்தாத்ரேயர் சாட்சாத் ஸ்ரீஹரியின் அவதாரம் என்ற அறிவு இவர்களுக்கு இருந்தது. சுமார் பத்தாயிரம் ஆண்டுகள் தத்தாத்ரேயரைக் குறித்து தவம் செய்து, கார்த்தவீர்யார்ஜுனன், அவரிடமிருந்து யோக சாஸ்திரத்தை உபதேசம் பெற்று பின், பெரிய யோகியானார்.

**கே: 'அலர்க' என்னும் சொல்லிற்கு 'பைத்தியக்கார நாய்' என்ற பொருள்தானே? இந்த ராஜனுக்கு இந்தப் பெயர் ஏன் வந்தது? இவன் ஏன் தத்தாத்ரேயரின் சிஷ்யர் ஆனான்?**

ப: சம்சாரத்தில் சிக்கிய அனைவரும் பைத்தியக்கார நாயைப் போலவே அலைகின்றனர். இதைத் தெரிவிப்பதற்காகவே அலர்கனின் தாய் இந்தப் பெயரினை வைத்தாள். இவனும் தத்தாத்ரேயரிடம் உபதேசம் பெற்று பெரிய யோகியானான்.

**கே: தத்தாத்ரேயரைப் பற்றியும், தத்தாத்ரேயரின் யோகத்தைப் பற்றியும் ஸ்ரீமதாசார்யார் சொன்னதாக ஏதேனும் தகவல் உள்ளதா?**

ப: பாகவத தாத்பர்யத்தில் தத்தாத்ரேய அவதாரத்தைப் பற்றி தெளிவாக விளக்கியிருக்கிறார். கீதா தாத்பர்ய, பாகவத தாத்பர்ய ஆகியவற்றில் தத்தாத்ரேய யோகத்தைப் பற்றியும் அவரது வசனங்களைப் பற்றியும் விளக்கியிருக்கிறார். தாத்பர்ய நிர்ணயத்திலும் இதைப்பற்றிய தகவல்கள் உள்ளன. தந்த்ரசார சங்கரஹத்தில் தத்தாத்ரேய மந்திரத்தை உபதேசம் செய்திருக்கிறார்.

**கே: தத்தாத்ரேய அவதாரத்தைப் பற்றி நமக்கு தெரியாத பல அபூர்வமான விஷயங்களை சொன்னீர்கள். இன்னும் மேலதிக தகவல்களைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று இருக்கிறது. என்ன செய்யவேண்டும்?**

ப: பாகவதம், ஹரிவம்சம், மார்க்கண்டேய புராணம் இவைகளை படியுங்கள். தத்தாத்ரேய அவதாரத்தைப் பற்றி இருக்கும் குழப்பங்கள் வேறு எந்த அவதாரங்களிலும் இல்லை. உண்மைக்கு ஒரே முகம். இரு முகங்கள் கிடையாது. மூன்று முகங்கள் என்பதோ கிடையவே கிடையாது. இவற்றை அறியாதவர்கள் ஒரே கழுத்தில் பிரம்ம, விஷ்ணு, மகேஸ்வரர் என்று மூவரையும் சேர்த்துவிட்டார்கள். இத்துடன் நிற்காமல் இன்னும் ஏதோதோ தவறான விஷயங்களை சொல்லிவிட்டார்கள். ஆதாரமில்லாத விஷயங்களே எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கும்போது, ஆதாரம் உள்ள விஷயங்கள் விலைபோவது மிகக்கடினம். இதை புரிந்துகொள்வதற்கு ஸ்ரீஹரியின் தத்தாத்ரேய அவதாரத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். ஆதியோடு அந்தமாக இதைப் பற்றி விவாதிக்க வேண்டும். வழிகாட்டியாக வரும் 100 பேரில் 99 பேர் தவறான வழியையே காட்டுவார்கள். சரியான, ஆதாரமுள்ள வழியைக் காட்டுபவன் ஒருவனே ஆகியிருக்கிறான். இவனின் அறிமுகத்தைப் பெற்று, இப்பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்ள, அந்த தத்தாத்ரேயனே நமக்கு அருளட்டும்.

மோட்சத்திற்கு செல்வதற்கு தியான யோகமே வழி. அந்த தத்தாத்ரேயரே இந்த வழியில் நம்மை கைபிடித்து அழைத்துப் போகட்டும் என்று பக்தியுடன் அவரை ஒருமுறை வணங்குவோம்.

**கே: தத்தாத்ரேய அவதாரம் நமக்குச் சொல்லும் செய்தி என்ன?**

ப: நாம் அத்ரியாக, அனுசுயையின் கை பிடித்தால், ஸ்ரீஹரி நமது மகன் ஆவார். காம, க்ரோத, லோப இவைகளை 'த்ரி' எனலாம். இந்த மூன்றையும் விட்டவனே 'அத்ரி'. வெறும் அத்ரி ஆனால் போதாது, பொறாமையையும் விடவேண்டும். அப்போது அத்ரியான நாம், அனுசூயையின் கையைப் பிடித்தது போல் ஆகும். காம, க்ரோத, லோப மூன்றையும் விட்டு, பொறாமையில்லாமல் இருந்தால் மட்டும் ஸ்ரீஹரி காட்சி கொடுப்பதில்லை. அனைத்து ஆசையையும் விட்டு, ஸ்ரீஹரியைக் குறித்தே தவம் செய்யவேண்டும். அப்போது ஸ்ரீஹரி பக்தி என்னும் கயிறுக்குக் கட்டுப்பட்டு, தன்னையே கொடுத்துவிடுவார். இப்படியாக, அத்ரி அனுசுயாவிடம் பிறந்த தத்த அவதாரம் நமக்குச் சொன்னதாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

**கே: தத்தனை எப்படி தியானம் செய்யவேண்டும்?**

ப:

ப்ரோத்யத் திவாகர சமானதனும் சஹஸ்ரசூர்யோரு தீதிதிபிராப்த சமஸ்தலோகம் ।
ஞானாபயாங்கிதகரம் கபிலம் ச தத்தம் த்யாயேதஜாதிசமிதிம் ப்ரதி போதயந்தம் ॥

உதயசூரியனின் சிகப்பு வண்ணத்தை ஒத்த சரீரத்தைக் கொண்டவர், அளவில்லாத சூரியர்களைக் காட்டிலும் மிகுந்த ஒளியுள்ள கிரணங்களினால் எல்லா உலகங்களையும் வியாபித்திருப்பவர், ஞான மற்றும் அபய முத்திரைகளை தரித்திருப்பவர், நான்முகன், ருத்ரன் ஆகிய தேவர்கள் கூட்டத்திற்கு தத்வஞானத்தை போதிப்பவர், பக்தர்களுக்கு அருளுபவர். இப்படியான கபிலரூபி ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

***

## 19. தாபஸ (Thaapasa)

**கே: கஜேந்திரனுக்கு வரம் அளித்து கஜேந்திரவரதன் என்ற அழைக்கப்பட்ட ஸ்ரீஹரியின் அவதாரத்திற்கு என்ன பெயர்?**

ப: ஹரி என்று பெயர். தாபஸ மன்வந்தரத்தில் அவதரித்ததால் 'தாபஸ-ஹரி' என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பெயர். ஆனால் பொதுவாக கஜேந்திரவரதனை நாராயண என்றே அழைக்கின்றனர்.

**கே: தாபஸ-ஹரி அவதாரம் அந்த க்ஷணத்தில் நடந்ததா? அல்லது ராம கிருஷ்ணாதி அவதாரங்களைப் போல, தாய் தந்தையரை நியமித்து அவர்களிடத்தில் நடந்த அவதாரமா?**

ப: பொதுவாக அனைவரும் சொல்வது - கஜேந்திரனின் அபயக்குரலுக்கு ஸ்ரீஹரி உடனடியாக வந்தார் என்பதே. ஆனால், ஹரிமேதா மற்றும் ஹரிணி தம்பதியருக்குப் பிறந்த ஹரி, கஜேந்திர வரதனாக வந்து, கஜேந்திரனை முதலையிடமிருந்து காப்பாற்றினார் என்று பாகவதம் சொல்கிறது.

**கே: சில இடங்களில் இவரை தாமஸ என்று அழைக்கின்றரே?**

ப: தாமஸ என்று அழைப்பது தவறு. தாபஸ என்பதே சரி.

**கே: கஜேந்திர மோட்சம் நடைபெற்றது எப்போது?**

ப: தாபஸ மன்வந்தரத்தில். மூன்று மன்வந்தரங்களுக்கு முன். சுமார் 100 கோடி ஆண்டுகளுக்கு முன்.

**கே: இந்த அவதாரம் இதே ஸ்வேதவராஹ கல்பத்தில் நடைபெற்றதா அல்லது வேறு கல்பத்திலா?**

ப: இப்போது நடைபெற்றுக் கொண்டிருக்கும் சதுர்முகப் பிரம்மனின் நாளுக்கு (பகல்) ஸ்வேதவராஹ கல்பம் என்று பெயர். இதில் இருக்கும் 14 மன்வந்தரங்களில் 7வது மன்வந்தரம் தற்போது நடைபெறுகிறது. 4வது மன்வந்தரத்தில் கஜேந்திர மோட்ச அவதாரம் நடைபெற்றது.

**கே: பிரம்மனின் ஒரு நாள் என்றால் என்ன? பிரம்மனின் ஆயுள் எவ்வளவு ஆண்டுகள்? ஒரு மன்வந்தரம் எவ்வளவு ஆண்டுகள்?**

ப: ஒரு மன்வந்தரம் என்றால் 30,85,75,000 ஆண்டுகள். ஒரு மன்வந்தரத்தில் 71 மகா யுகங்கள் இருக்கின்றன. இப்படி 14 மன்வந்தரங்கள் செல்லவேண்டும். இதுவே பிரம்மனின் ஒரு பகல். மொத்தம் 432,00,00,006 ஆண்டுகள். இதுவே தின-கல்பம். இந்த தினகல்பத்தில் ஸ்ரீஹரியின் தசாவதாரங்கள் மற்றும் இதர அவதாரங்களும் நடைபெறுகின்றன. மொத்தம் பிரம்மனின் ஆயுள் மனிதனின் ஆண்டுக்கணக்கில் 31,104 கோடி ஆண்டுகள்.

**கே: 432கோடி ஆண்டுகள் என்னும் பிரம்மனின் பகலில், எவ்வளவு ஆண்டுகள் கழிந்தபிறகு கஜேந்திர மோட்ச அவதாரம் ஆனது என்று அறியவேண்டும்?**

ப: ஆம். இது 7வது மன்வந்தரம். சுமார் 200 கோடி ஆண்டுகள் தற்போது ஆகியிருக்கின்றன. இதில் சுமார் 100 கோடி ஆண்டுகளுக்கு முன் கஜேந்திர மோட்ச அவதாரம் நடைபெற்றிருக்கிறது (என்று பொதுவாக சொல்லலாம்).

**கே: ராம கிருஷ்ண அவதாரங்கள் நம் பாரதத்தில் இந்தப் பகுதிகளில் நடைபெற்றிருக்கிறது என்று குறிப்பாக சொல்லமுடியும். இதைப்போல் கஜேந்திரமோட்சம் நடந்த இடம் எதுவென்று சொல்ல முடியுமா?**

ப: இதைப் பற்றி தகவல்களும் உள்ளன. ஆனால் நீங்கள் நினைப்பதுபோல் பாரத தேசத்திலோ, ஜம்புத்வீபத்திலோ நடைபெற்ற அவதாரம் அல்ல இது. பாற்கடலைச் சுற்றி இருக்கும் புஷ்கர தீரத்தில், நமக்குத் தெரிவது ஜம்புத்வீபம் மட்டுமே. மற்ற த்வீபங்கள் நம் கண்ணிற்குத் தெரிவதில்லை.

**கே: அந்த த்வீபங்களில் மனிதர்கள், பசு, விலங்குகள், பறவைகள் என யாரும் இருப்பதில்லையா?**

ப: மனிதர்கள் இருப்பதில்லை. ஆனால் மற்றவைகள் இருக்கின்றன. சில த்வீபங்கள் தேவர்களுக்கு சம்பந்தப்பட்டுள்ளன. இந்த புஷ்கர த்வீபம், வருண தேவனுடயதாகும். 10,000 யோஜன உயரமிருக்கும் த்ரிகோண பர்வதத்தில் இவன் வசிக்கிறான். இந்த த்வீபத்தில் ருதுமந்த என்னும் தோட்டம் இருக்கிறது. பல பெண் யானைகளுடன் கஜேந்திரன் ஒரு முறை அங்கே வந்தான்.

**கே: த்ரிகூட பர்வதம் 10,000 யோஜனை உயரம் இருப்பது எப்படி சாத்தியம்? 10,000 யோஜனை என்றால் நம் கணக்குப்படி சுமார் 1,60,000 கிலோ மீட்டர்கள். மலைகள் இவ்வளவு உயரம் இருப்பது சாத்தியமா?**

ப: பூலோகத்தில் இதுபோன்றதை கண்டதில்லை. நிஜம். புஷ்கர த்வீபத்தில் இவ்வளவு உயரமான மலை இருப்பதற்கு ஆதாரம் இருக்கிறது. அல்லது சாஸ்திரங்களில் ஒரு முழம் அளவை ஒரு யோஜனை என்று சொல்லும் வழக்கமும் இருக்கிறது. த்ரௌபதி சுயம்வர சமயத்தில், பீமன் 10 யோஜனை உயரமுள்ள மரத்தைக் கொண்டு போர் புரிந்தான் என்பதற்கு, 10 முழ உயரம்

என்று உரை எழுதியிருக்கிறார்கள். அப்படியே இங்கேயும் இருக்கும் என்று சொல்லலாம்.

**கே: த்ரிகூட என்று மலைக்கு பெயர் வருவதற்கு என்ன காரணம்?**

ப: அந்த மலையில் மூன்று சிகரங்கள் உள்ளன. இரும்பு, வெள்ளி மற்றும் தங்க சிகரங்கள்.

**கே: த்ரிகூட பர்வதத்தில் கஜேந்திரனை முதலை கடிக்கும் நிலைமை எப்படி வந்தது?**

ப: பல பெண் யானைகளுடன் சுற்றித்திரிந்த கஜேந்திரன், நீர் குடிப்பதற்காக அந்த ஏரிக்கு வந்து, ஏரியின் நீரை விளையாட்டாக கலக்கினான். அங்கு இருந்த முதலை இதனால் ஆத்திரமடைந்து கஜேந்திரனின் காலைக் கவ்வியது.

**கே: முதலையைவிட யானைக்கு சக்தி அதிகம் என்பதால், தன் காலை உடனே விடுவித்திருக்கலாமே? அங்கிருந்த பெண் யானைகள் ஏன் கஜேந்திரனுக்கு உதவவில்லை?**

ப: நீரில் இருக்கும்போது முதலைக்கு அதிக பலம். நீருக்கு வெளியே யானைக்கு அதிக பலம். ஆகையால் முதலையிடமிருந்து யானையால் தப்ப முடியவில்லை. பெண் யானைகளும் கஜேந்திரனை தப்புவிக்க முயன்று தோற்றன. ஆனாலும், விடாமல் தொடர்ந்து போராடியது கஜேந்திரனின் வீரத்தைக் காட்டுகிறது.

**கே: கஜேந்திரனுக்கும் முதலைக்கும் எவ்வளவு நாட்கள் போர் நடந்தது?**

ப: மனித வாழ்க்கைக் கணக்கின்படி சுமார் 1000 ஆண்டுகள் இருவருக்கும் போர் நடந்தது. இவர்களின் போரினைக் கண்டு தேவர்களும் ஆச்சரியமடைந்தனர். இறுதியில் கஜேந்திரனின் சக்தி மிகக் குறைந்து, முதலையின் சக்தி அதிகமடைந்தது.

**கே: கஜேந்திரனுக்கு ஸ்ரீஹரியின் நினைவு வரக் காரணம் என்ன?**

ப: ஸ்ரீஹரியின் விருப்பப்படியே நான் முதலை வாயில் சிக்கியிருக்கிறேன். பிரம்மாதி தேவர்களையும்கூட அடக்கியாளும் ஸ்ரீஹரியை நானும் சரணடைய வேண்டும் என்று போன பிறவியில் செய்த நற்காரியங்களினால் கஜேந்திரனுக்கு ஹரிஸ்மரணை வந்தது. கஜேந்திரனுக்கு வந்த ஹரிஸ்மரணையினால், கஜேந்திர மோட்சம் என்பது இவ்வளவு புகழ் அடைந்திருக்கிறது.

**கே: பாகவதத்தில் கஜேந்திரன் செய்த ஸ்தோத்திரம் மிகப் பெரியதாக இருக்கிறது. மிகவும் கருத்துச் செறிவுடனும், சாஸ்திரங்களின் சுருக்கம்**

**என்பதாகவும் இருக்கிறது. ஒரு விலங்கானது இவ்வளவு அற்புதமாக ஸ்தோத்திரம் சொல்வதற்கு சாத்தியமா என்ன?**

ப: முந்தைய பிறவியில் ஒரு சிறந்த விஷ்ணு பக்தரிடமிருந்து இந்த கஜேந்திரன் ஸ்ரீஹரியைப் பற்றி அறிந்திருந்தான். செய்த நற்காரியங்களால் அவரது நினைவுகூட அவனுக்கு இருந்தது. அதனாலேயே, முதலையின் வாயில் அகப்பட்ட கஜேந்திரன் - 'ஓம் நமோ பகவதே தஸ்மை யத ஏதத் சிதாத்மகம் | புருஷாயாதி பீஜாய பரேஷாயபி தீமஹி' - என்று ஸ்தோத்திரம் செய்யத் துவங்கினான்.

**கே: 25க்கும் மேற்பட்ட ஸ்லோகங்களினால் கஜேந்திரன் ஸ்ரீஹரியை வணங்கினான். இதில் நாம் முக்கியமாக நினைவில் வைக்கவேண்டிய ஸ்லோகம் என்ன?**

ப:
ஸோந்தஸ்ஸரஸ்யு ருபலேன கைஹீத ஆர்தோ
த்ருஷ்ட்வா கருத்மவதி ஹரின் க உபாத்தசக்ரம் ||
உத்க்ஷிப்ய ஸாம்புஜகரம் கிரமாஹ க்ருச்ச்ரான்
நாராயணா அகிலகுரோ பகவன் நமஸ்தே ||

ஏரியில் முதலையிடம் அகப்பட்டிருந்த கஜேந்திரன், கருட வாகனான, சக்ர தாரியான, ஸ்ரீஹரியைக் கண்டு, மிகுந்த பக்தியுடன் தாமரைப்பூவினை அர்ச்சித்து - 'சர்வேஸ்வரனான ஸ்ரீஹரி நாராயணனே, உனக்கு அனேக வந்தனங்கள்' - என்றான்.

**கே: இந்த கஜேந்திர மோட்சத்தின் ரூபத்தை எப்படி நினைக்க வேண்டும்? சற்று விவரமாக விளக்கவும்.**

ப: கருடனின் மேல் அமர்ந்து, கஷ்டத்தில் சிக்கியிருக்கும் பக்தனின் நிலையை மட்டுமே கருத்தில் கொண்டு,

'மணிமய கிரீடகுண்டல ஹார கௌஸ்துப மினுகுதிஹ வைஜயந்திய பூஷணாங்கத ஹணெய கஸ்தூரி திலகத நாமதிந்த எஸகுதிஹ வரஷங்க சக்ரதிந்த ஜணஜணத நூபுரத தந்தபங்க்திய க்ருபேக்ஷணத ஸிரிமொகத பீதாம்பராலங்க்ருத'

என்று புரந்தரதாசர் வர்ணிப்பதைப் போல் நினைக்கவேண்டும்.

பொருள்: மணிகள் பொருந்திய கிரீட குண்டலங்கள், மாலை, கௌஸ்துபங்கள் மினுமினுக்கும் வைஜயந்திமாலையுடன் அலங்கரித்து, நெற்றியில் கஸ்தூரி திலகம் தரித்து, சங்கு, சக்ரத்துடன், ஜணஜண என்று ஒலிக்கும் கைவளைகளுடன் கருணை நிறைந்த முகத்துடன், பீதாம்பரம் அணிந்துகொண்டவர்.

**கே: தாபஸ-ஹரி கஜேந்திரனை எப்படி அருளினார்?**

ப: கருடனின் மேல் அமர்ந்து பறந்துவந்த ஸ்ரீஹரிக்கு, கருடனின் வேகம் குறைவாகப்பட்டது. தானே இறங்கி ஓடிவந்து, கஜேந்திரனுக்குக் கை கொடுத்து மேலே தூக்கினார். நீரிலிருந்து முதலை வெளியே வந்தபிறகு, யானையின் சக்தி அதிகமாயிற்று. முதலையின் சக்தி குறைந்தது. கஜேந்திரன் மூலமாகவே முதலை தோற்கும்படி செய்தார். பிறகு சக்கரத்தைப் பிரயோகித்து, முதலையின் வாயை கத்தரித்தார்.

**கே: தாபஸ-ஹரியின் அவதாரத்தின் கதையை தெரிவிப்பீரா?**

ப: ஹஹு என்னும் ஒரு கந்தர்வன் இருந்தான். தேவல-முனிவரின் சாபத்தினால் அவன் முதலையாக பிறந்திருந்தான். மந்திரத்யும்னன் என்று இன்னொரு ராஜன் இருந்தான். ஸ்ரீஹரியின் பூஜையில் ஈடுபட்டு, வந்திருந்த முனிவரை சரியாக உபசரிக்காததால், 'அதிதி-ஸத்கார' என்னும் பாவத்திற்கு ஆளாகி, அகஸ்த்ய முனிவரின் சாபத்தினால், யானையின் ஜென்மத்தைப் பெற்றிருந்தான். ஸ்ரீஹரியை நினைத்திருந்த பலனால், முந்தைய பிறவியின் நினைவு இவனுக்கு இருந்தது. ஏரிக்கு வந்த இந்த யானையின் காலை, ஹுஹு என்னும் கந்தர்வனான முதலை கவ்வியது. இருவருக்கும் கடுமையான போர் நடந்தது.

ஆயிரமாண்டுகள் நடந்த அந்த போரில், யானை முழுவதுமாக தோற்றது. வேறு யாரும் கஜேந்திரனின் உதவிக்கு வரவில்லை. முதலையின் மூலமாக எனக்கு இந்தத் துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பது நாராயணனே ஆவார். அவரையே நான் சரணடைகிறேன் என்று கஜேந்திரனுக்கு அறிவுக்கண் திறந்தது. கஜேந்திரனின் வாயிலிருந்து ஸ்தோத்திரங்கள் புறப்பட்டன.

கஜேந்திரனின் அபயக்குரலைக் கேட்ட ஸ்ரீஹரி, கருட வாகனமேறி ஓடி வந்தார். ஸ்ரீஹரியைக் கண்ட கஜேந்திரனுக்கு பக்திப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடியது. அந்த ஏரியில் இருந்த தாமரையையே பிய்த்து அதை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து - 'நாராயணா அகிலகுரோ பகவன் நமஸ்தே' - என்று சமர்ப்பித்தான். பக்தியுடன் ஒரு புஷ்பத்தை சமர்ப்பித்தாலே போதும், என்னையே நான் தருவேன் என்று இந்த கஜேந்திர மோட்ச சம்பவத்தின் மூலம் ஸ்ரீஹரி செய்துகாட்டினார். கருடன் மேல் ஏறி வந்த ஸ்ரீஹரி தனது சக்ரத்தின் மூலம் முதலையின் வாயை கத்தரித்தார். முதலைக்கும் பாப விமோசனம் அளித்தார். இந்த கஜேந்திர வரதனின் கருணையைக் கண்ட தேவர்கள் பூமாரி பொழிந்தனர். நமோ நமோ என்று அவரை வணங்கினர்.

**கே: லட்சுமியுடன் இருக்கும் நாராயணன், கருடன் மேல் அமர்ந்து, ஆகாயத்திலிருந்தே சக்கரத்தை முதலை மேல் ஏவினார் என்று வரைபடங்களிலிருந்து தெரியவருகிறதே. இதற்கு என்ன பொருள்?**

ப: ஆம். ஆனால் இந்த மாதிரியான கதை அனைத்து இடங்களிலும் இல்லை. ஸ்ரீஹரி முதலில் கருடன் மேலிருந்து இறங்கி, ஏரியிலிருந்து யானையை மேலே இழுத்து, பின்னரே முதலை மேல் சக்கரத்தைப் ஏவினார்.

**கே: அனைத்து இடங்களுக்கும் ஸ்ரீஹரி கருட வாகனத்தில் வருவதற்கு என்ன காரணம்?**

ப: கருடன் என்றால் வேதம் என்று பொருள். வேதாபிமானியான கருடனின் மேல் அமர்ந்து வருவதனால், தான் எப்போதும் வேதப்ரதிபாத்யன் (வேதங்களால் விளக்கப்படுபவன்) என்று தெரிவிக்கிறார் என்பதே இதன் பொருள்.

**கே: கஜேந்திரனைக் காப்பாற்றும் பொருட்டு, முதலைக்கு மோசம் செய்தாரா ஸ்ரீஹரி?**

ப: கஜேந்திரனுக்கு மட்டும் அவர் அருளவில்லை. முதலைக்கும்கூட அருளினார். ஆனால், தன் கைகளால் கஜேந்திரனுக்கு அருளி, சக்கரத்தால் முதலைக்கு அருளினார் என்பதை மட்டும் மறக்கக்கூடாது.

**கே: சக்கரத்தை ஏவியதற்கான காரணம்?**

ப: ஸ்ரீஹரி சக்கரத்தை ஏவுவது வெறும் கொல்வதற்காக மட்டும் அல்ல. பிறருக்கு அருளுவதற்கும் ஆகும். ஸ்ரீகிருஷ்ணன், ஜாம்பவந்தன் மேல் சக்கரத்தை ஏவி, அவனை குறை ஒன்றுமில்லாத அழகிய வாலிபனாக மாற்றினார் என்னும் கதையை நாம் கேட்டிருக்கிறோம். அதைப் போலவே, இங்கும் முதலை மேல் சக்கரத்தை ஏவி, முதலைக்கும் அருளினார். முதலையாக இருந்த அந்த கந்தர்வன், மகிழ்ச்சியில் ஸ்ரீஹரியின் புகழை ஆடிப்பாடியவாறு அங்கிருந்து கிளம்பினார்.

**கே: முந்தைய பிறவியில் கஜேந்திரன் மற்றும் முதலை இரண்டும் என்னவாக இருந்தன?**

ப: கஜேந்திரன் தனது முந்தைய பிறவியில், பாண்ட்ய தேசத்தின் மந்திரத்யும்னன் ராஜனாக இருந்தான். அகஸ்த்ய முனிவரின் சாபத்தினால் யானைப் பிறவியை பெற்றிருந்தான். ஹஹு என்னும் கந்தர்வன், தேவல என்னும் ரிஷியின் சாபத்தினால் முதலைப் பிறவியை பெற்றிருந்தான்.

**கே: ராஜனின் பெயர் இந்திரத்யுமனன் என்றே அனைவரும் சொல்கிறார்கள். மற்றும் கந்தர்வனின் பெயர் ஹோஹு என்கிறார்கள். ஆனால் நீங்கள் மந்திரத்யுமனன் என்றும் ஹஹு என்றும் சொல்கிறீர்கள். இது எப்படி?**

ப: இந்திரத்யும்னன் என்ற பெயர் வழக்கத்தில் இருந்தாலும், பழைய உரைகளில் மந்திரத்யும்னன் என்றே பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றும் கந்தர்வர்களின்

பெயர்களை ஹாஹு, ஹோஹு என்கிறார்கள். ஆனால் அவர்களின் நிஜமான பெயர் ஹஹ மற்றும் ஹஹு என்பதே ஆகும்.

**கே: 'ஹாஹா ஹூஹூ ஸ்சைவ மாத்யா:' என்று அமரகோசத்தில் இருக்கிறதே?**

ப: அமரகோசத்திற்கும் முந்தைய பாடங்களில் ஹஹ ஹஹு என்றே அந்த கந்தர்வர்களின் பெயர்கள் இருக்கின்றன. சங்கீதத்திலிருந்து இவர்கள் தங்கள் பெயர்களைப் பெற்றிருக்கிறார்கள். ஹஹ மற்றும் ஹஹு என்பது அவ்யயங்களே தவிர ஷப்தங்கள் அல்ல.

அவ்யய = முன்னிடைச்சொல் / வினைஉரிச்சொல் (Preposition/adverb)
ஷப்த = பெயர்ச்சொல் (Noun).

ஸ்ரீஹரியைத் தவிர வேறு யாருக்காவது அவ்யயங்களுடன் கூடிய பெயர் இருக்கிறது என்றால், அது கந்தர்வர்களுக்கு மட்டுமே ஆகும்.

**கே: யானைப் பிறவியில் முந்தைய பிறவியின் நினைவுகள் எப்படி சாத்தியமாயிற்று?**

ப: அகஸ்தியர், மந்த்ரத்யும்ன ராஜனுக்கு யானையாகக் கடவாய் என்று சாபம் கொடுத்திருந்தாலும், ஸ்ரீஹரியை வணங்கியதன் பலனாக யானைப் பிறவியிலும் முந்தைய பிறவியின் நினைவுகள் அவனுக்கு இருந்தன.

**கே: சாபத்தைப் பெறுபவர்கள், பாவம் செய்தவர்கள்தானே?**

ப: அப்படியில்லை. அவர்களே புண்ணியம் செய்தவர்கள். சாபம் பெற்றவர்களை ஸ்ரீஹரி வேறுவிதமாக அருளுகிறார். பற்பல கதைகள் இதற்கு சாட்சிகளாக உள்ளன. சாபம் கொடுத்தவர்கள் தங்கள் தவவலிமையை இழக்கிறார்கள். ஆனால் சாபம் பெற்றவர்கள் தங்கள் நற்காரியங்களால் ஞானத்தைப் பெற்று அவன் அருளைப் பெறுகிறார்கள். இதுவே சாபத்தின் விதி. ஆனால் இது அயோக்கியர்களுக்கு பொருந்துவதில்லை.

**கே: கஜேந்திர மோட்சத்திற்கு நாம் எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறோம்?**

ப:
யோ மாம் ஸ்துவந்த்யனேனாங்க ப்ரதிபுத்ய நிஷாத்யயோ |
தேஷாம் ப்ராணாத்யயோஹம் வை ததாமி விமலாம் கதிம் ||

விடியற்காலையில் எழுந்து யார் கஜேந்திர மோட்ச ஸ்தோத்திரத்தின் மூலம் என்னை வணங்குகிறார்களோ, அவர்களுக்கு மரணத்திற்குப் பிறகு சத்கதியைக்

கொடுப்பேன் என்று கஜேந்திர வரதனான நாராயணன் தானே கூறுகிறார். அதனால் ஒவ்வொருவருக்கும் கஜேந்திர மோட்சமே கதி.

**கே: அப்படியிருக்கும்போது ஏன் இது நம்மிடம் பழக்கத்தில் இல்லை?**

ப: பழக்கத்தில் இருக்கிறது. இன்னும் அதிகபேரிடம் போய்ச் சேரவேண்டும். கும்பகோணத்தில் காவேரி ஸ்நானத்திற்குப் போகும்போது ஸ்ரீராகவேந்திரர், கஜேந்திர மோட்சத்தைச் சொல்லிக்கொண்டே போகிறார் என்று ராகவேந்திர விஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், தினமும் காலையில் கஜேந்திர மோட்சத்தை பாராயணம் செய்தே ஆகவேண்டும்.

**கே: கஜேந்திர மோட்சத்தைப் பற்றி காலையில் நினைத்தால் போதும்தானே?**

ப: இல்லை. இதே கஜேந்திரமோட்ச சந்தர்ப்பத்தில், சாட்சாத் தாபஸரூபியான ஸ்ரீஹரி, காலை வேளையில் யானையை நினைக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார். ஸ்ரீஹரியின் ஆயுதங்கள், அனைத்து தேவர்கள், அனைத்து ரிஷிகள், நதி தேவதைகள் - இந்த அனைவரையும் நினைக்க வேண்டும். இதை 'லட்சுமீர்யஸ்ய பரிக்ரஹ' என்னும் மங்களாஷ்டக ஸ்லோகங்களில் ராஜராஜேஸ்வர தீர்த்தர் சொல்லியிருக்கிறார். ஆகையால் அனைவரும் 'லட்சுமீர்யஸ்ய' என்னும் மங்களாஷ்டக ஸ்லோகங்களை, கஜேந்திர மோட்ச ஸ்தோத்திரங்களுடன் பாராயணம் செய்தலே வேண்டும். மேலும் 'நாராயண நமோ நாகேந்த்ரஷயனாய' என்று ஸ்ரீபுரந்தரதாசர், பதினொன்று சரணங்களில் பாடியுள்ளதையும் சொல்லவேண்டும். பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்தில் கஜேந்திர மோட்சம் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு நான்கு அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கும் கஜேந்திர மோட்சத்தின் சாரத்தை தாசர் இந்தப் பாடலில் கொண்டு வந்திருக்கிறார்.

ஸ்ரீமதாசார்யார் த்வாதச ஸ்தோத்திரத்தில் 'அந்த்யகாலே விசேஷத:' என்று இறுதிக்காலத்தில் ஸ்ரீஹரியை நினைக்கவே வேண்டும் என்று கூறுகிறார். இறுதிக்காலத்தில் ஸ்ரீஹரியின் நினைவு வரவேண்டுமென்றால் கஜேந்திர மோட்சத்தை தினந்தோறும் படிக்கவேண்டும் என்று ஸ்ரீதாசர் 'சுஞான பதவித்து தேஹாவஸானதொளகே ஸ்ரீவாஸுதேவ ஆஞாபிஸி' என்று பாடியிருக்கிறார். ஆகையால் தினந்தோறும் தாசரின் இந்தப் பாடலைப் படித்து நாம் அனைவரும் தன்யர் ஆவோமாக.

**கே: கஜேந்திரவரத அவதாரத்தின் மூலம் நாம் அறியும் செய்தி என்ன?**

ப: கஜேந்திரனின் கதை நம் கதையே ஆகும். கஜேந்திரனின் இடம் த்ரிகூட பர்வதம். சாத்விக, ராமஸ மற்றும் தாமஸ என்று மூன்று குணங்களும் நிரம்பிய நம் உடலும் த்ரிகூடமே ஆகும். த்ரிகூடத்தில் யானை எந்தவித பிரச்னையும் இல்லாமல் மகிழ்ச்சியுடன் திரிந்ததைப் போல், நாமும் கூட இங்கிருக்கும் இன்பங்களில் நம்மை இழந்திருக்கிறோம். முதலை யானையைக் கடித்து

இழுத்ததைப் போல், நம்மையும் வாழ்க்கை / சம்சாரம் என்னும் கடலில், நோய், நொடி, மரணம் ஆகிய பயங்கர விலங்குகள் உள்ளே இழுக்கின்றன. இவற்றிலிருந்து தப்பிக்க, ஸ்ரீஹரியே கதி என்று நம்ப வேண்டும். அனைத்தையும் மறந்து, பக்தியை கைகொண்டு, அனைத்தையும் நாராயணனுக்கு அர்ப்பணம் செய்து 'நாராயண அகிலகுரோ பகவன் நமஸ்தே' என்று வணங்கவேண்டும். அப்போது நம் கஷ்டங்கள் நீங்கும். வாழ்க்கையும் நலமாகும்.

***

## 20. யக்ஞ

**கேள்வி: யக்ஞ அவதாரம் நடந்தது எப்போது?**

பதில்: ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில். சுமார் 185 கோடி ஆண்டுகளுக்கு முன்.

**கே: தற்போது இருப்பது வைவஸ்வத மன்வந்தரம். ஸ்வாயம்புவ மன்வந்தரம் இருந்தது எப்போது?**

ப: முதலில் துவங்கியதே ஸ்வாயம்புவ மன்வந்தரம்.

**கே: மொத்தம் எவ்வளவு மன்வந்தரங்கள்? அவற்றின் பெயர்கள் என்ன?**

மொத்தம் 14 மன்வந்தரங்கள்.

1. ஸ்வாயம்புவ
2. ஸ்வாரோசிஷ
3. உத்தம
4. தாபஸ
5. ரைவத
6. சாக்ஷுஷ
7. வைவஸ்வத
8. ஸாவர்ணி
9. பௌத்ய
10. ரௌச்ய
11. ப்ரம்மஸாவர்ணி
12. ருத்ரஸாவர்ணி
13. மேருஸாவர்ணி
14. தக்ஷஸாவர்ணி

**கே: இந்த 14 மன்வந்தரங்களிலும் தேவர்களின் பதவிகள் ஒரே மாதிரி இருக்கின்றனவா?**

ப: இல்லை. ஒவ்வொரு மன்வந்தரங்களுக்கும் பதவிகள் மாறுபடுகின்றன. முதலாம் மன்வந்தரமான ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் 'யக்ஞ' என்னும் ஸ்ரீஹரியே இந்திர பதவியில் இருந்தார். இரண்டாம் மன்வந்தரத்தில், 'ரோசன' என்னும் பெயரில் வாயுதேவர், இந்திர பதவியில் இருந்தார். இதைப் போல் வெவ்வேறு மன்வந்தரங்களில், சப்தரிஷிகளும் மாறுபடுகின்றனர். தேவதா கணமும் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றனர்.

**கே: ஸ்வாயம்புவ மன்வந்தரத்திற்கு எதற்கு அந்தப் பெயர்?**

ப: ஸ்வாயம்பு என்றால் சதுர்முக பிரம்மா. இவரின் மகனுக்கு 'ஸ்வாயம்புவ' என்று பெயர். இவன் முதலாம் மன்வந்தரத்திற்கு அதிபதி ஆனதால், 'ஸ்வாயம்புவ மன்வந்தர' என்று அந்த மன்வந்தரம் பெயர் பெற்றது.

**கே: யக்ஞரூபியான ஸ்ரீஹரி எங்கு அவதரித்தார்?**

ப: ருசி பிரஜாபதி மற்றும் ஆகுதி என்னும் தம்பதியரிடம் அவதரித்தார்.

**கே: ஆகுதி என்றால் யார்?**

ப: சதுர்முக பிரம்மனின் மகனான ஸ்வாயம்புவ மனுவிற்கு ஆகுதி, ப்ரஸூதி, தேவஹூதி என்று மூன்று பெண் வாரிசுகள் மற்றும் உத்தானபாத, ப்ரியப்ரத என்று இரு ஆண் மகன்கள். மூத்தவளான ஆகுதியை ருசி ப்ரஜாபதிக்கு கொடுத்து திருமணம் செய்வித்தனர்.

**கே: ப்ரஸூதி, தேவஹூதியர்களிடமும் ஸ்ரீஹரி அவதரித்தாரா?**

ப: தேவஹூதியை கர்தம ரிஷி திருமணம் செய்துகொண்டார். இவர்களிடத்தில் கபிலரூபியான ஸ்ரீஹரி, ஸ்வாயம்புவ மன்வந்தரத்திலேயே அவதாரம் செய்தார். ப்ரஸூதியை தக்ஷ பிரஜாபதி மணம் செய்துகொண்டார். இவர்களுக்கு 16 பெண்கள் பிறந்தனர். கடைசிப் பெண்ணான மூர்த்தி என்பவளுக்கு, ஸ்ரீஹரி, நர, நாராயண, ஹரி, கிருஷ்ண என்று நான்கு ரூபங்களில் அவதரித்தார்.

**கே: அப்படியென்றால், யக்ஞரூபியான ஸ்ரீஹரி, ஸ்வாயம்புவமனுவிற்கு பெண்வழிப் பேரன் ஆகிறார். அல்லவா?**

ப: ஆம். ஸ்வாயம்புவமனுவின் பெண்ணான ஆகுதியின் மகனாததால், அவருக்கு பேரன் ஆகிறார். அது மட்டுமல்லாமல், ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் தானே இந்திர பதவியில் இருந்து, அந்த மன்வந்தரத்தை அருளினார்.

**கே: யக்ஞ ரூபியான ஸ்ரீஹரி, ஸ்வாயம்புவ மனுவிற்கு எப்படி அருளினார்?**

ப: தவத்தில் இருந்த ஸ்வாயம்புவ மனுவை, பற்பல அரக்கர்கள் சூழ்ந்து தாக்க முற்பட்டபோது, யக்ஞ ரூபியான ஸ்ரீஹரி வந்து அவர்களை விரட்டினார். தன் தாத்தாவான ஸ்வாயம்புவ மனுவை யக்ஞ ரூபியான ஸ்ரீஹரி காப்பாற்றினார்.

**கே: ஸ்வாயம்புவ மனு, ஏன் தவம் மேற்கொண்டிருந்தார்?**

ப: காமம் முதலான போகங்களை விடுவதற்காக ஸ்வாயம்புவ மனு மற்றும் ஷதரூபாதேவியர், தனது அரசாட்சியை உத்தானபாத மற்றும் ப்ரியவிரதருக்குக்

கொடுத்துவிட்டு, வானப்ரஸ்த ஆசிரமத்தை ஏற்றனர். ஸ்ரீஹரியின் அருளினை வேண்டி, காட்டிற்குச் சென்று தவம் செய்ய முற்பட்டனர்.

**கே: ஸ்வாயம்புவ மனு எங்கு மற்றும் எப்படி தவம் மேற்கொண்டார்?**

ப: ‘சுனந்தா’ என்னும் நதிக்கரையில், ஒரே காலில் நின்றவாறு நூறு ஆண்டுகள் கடுந்தவத்தை மேற்கொண்டார். அப்போது ஈசாவாஸ்ய உபநிஷத்தை பாராயணம் செய்தவாறு ஸ்ரீஹரியை வணங்கினார்.

**கே: யக்ஞ அவதாரத்தின் கதையை விளக்கவும்.**

சதுர்முக பிரம்மனுக்கு 14 பேர் மகனாகப் பிறந்தனர். அவர்களில் மூத்தவரே ஸ்வாயம்புவமனு. இவருக்கு ப்ரியப்ரத, உத்தானபாத என்று இரு மகன்கள் பிறந்தனர். ஆகுதி, தேவஹூதி, ப்ரஸூதி என்று மூன்று பெண்கள் பிறந்தனர்.

ஆகுதியை ருசி பிரஜாபதிக்கு, தேவஹூதியை கர்தம பிரஜாபதிக்கு, ப்ரஸூதியை தக்ஷ பிரஜாபதிக்கும் கொடுத்து மணம் செய்வித்தார். ஆகுதிக்குப் பிறந்தவரே யக்ஞரூபியான ஸ்ரீஹரி. தன் பேரன், சாட்சாத் ஸ்ரீஹரியே என்பதை அறிந்து, ஸ்ரீஹரியின் கருணையை நினைத்து, ஸ்வாயம்புவ மனு அவரைக் குறித்தே தவம் செய்தார். தன் அரசாட்சியைத் துறந்து, விரக்தியடைந்து, தன் மனைவியான ஷதரூபாதேவியுடன், தவம் மேற்கொள்ள காட்டிற்குப் போனார். வானபிரஸ்த ஆசிரமத்தை மேற்கொண்டு, நூறு ஆண்டுகள், யக்ஞ ரூபியான ஸ்ரீஹரியை நினைத்து தவம் செய்தார். தனக்கு மற்றும் தன்னைப் போன்ற சாதகர்களுக்கு மோட்சத்தை அளிக்கவேண்டும் என்று வேண்டி, ஈசாவாஸ்ய உபநிஷத்தை பாராயணம் செய்து வணங்கினார்.

அப்போது, ருத்ரதேவரிடம் சாகாவரம் பெற்ற அரக்கர்கள் இவரைக் கொல்வதற்கு ஓடி வந்தனர். அப்போது, யக்ஞரூபியான ஸ்ரீஹரி அவதாரமெடுத்து, அந்த அரக்கர்கள் அனைவரையும் கொன்று, தன் பக்தனான ஸ்வாயம்புவ மனுவிற்கு அருளினார். மோட்சத்தை வேண்டும் தன் பக்தர்களை ஸ்ரீஹரி ஓடோடி வந்து அருளுவார் என்று இந்த சம்பவத்தின் மூலம் நமக்குத் தெரியப்படுத்துகிறார். இத்தகைய யக்ஞ ரூபியான ஸ்ரீஹரியை நாம் அனைவரும் வணங்குவோமாக.

**கே: ஸ்வாயம்புவமனு, ஈசாவாஸ்ய உபநிஷத்தை பாராயணம் செய்தார் என்று எங்கு சொல்லப்பட்டிருக்கிறது?**

ப: பிரம்மாண்ட புராணத்தில்.

ஸ்வாயம்புவ: ஸ்வதௌஹித்ரம் விஷ்ணும் யக்ஞாபிதம் மன: ।<br>
ஈஷாவாஸ்யாதிபிர் மந்த்ரை: துஷ்டாவாவஹிதாத்மனா ॥

தன் பேரனான யக்ஞ ரூபியான ஸ்ரீஹரியை, ஸ்வாயம்புவமனு, ஈசாவாஸ்ய உபநிஷத் முதலான ஸ்தோத்திரங்களினால் வணங்கினான்.

**கே: யக்ஞரூபியான ஸ்ரீஹரி, ஸ்வாயம்புவ மனுவிற்கு எப்படி அருளினார்?**

ப: தன்னைப் போன்ற சாதகர்களுக்கு மோட்சம் கிடைக்கவேண்டுமென்று, ஸ்வாயம்புவ மனு, யக்ஞரூபியான ஸ்ரீஹரியை, ஈசாவாஸ்ய உபநிஷத் முதலான ஸ்லோகங்களினால் வேண்டினார். அப்போது அவரை கொல்வதற்காக பற்பல அரக்கர்கள் ஓடி வந்தனர். அப்போது யக்ஞரூபியான ஸ்ரீஹரி தோன்றி அனைத்து அரக்கர்களையும் கொன்றார். தன் தாத்தாவான ஸ்வாயம்புவமனுவை காப்பாற்றினார்.

**கே: தன்னை அரக்கர்கள் கொல்ல வருகிறார்கள் என்று ஸ்வாயம்புவ மனுவிற்கு தெரிந்ததா இல்லையா?**

ப: யக்ஞரூபியான ஸ்ரீஹரியை வேண்டியவாறு, தியானத்தில் இருந்த ஸ்வாயம்புவ மனுவிற்கு, அரக்கர்கள் வந்ததுகூட தெரியவில்லை. ஒருமனத்துடன் யக்ஞரூபியான ஸ்ரீஹரியையே வேண்டிக்கொண்டிருந்தார். இவரின் நலத்தை பார்த்துக் கொண்டிருந்த, யக்ஞரூபியான ஸ்ரீஹரி, ஓடோடி வந்து அரக்கர்களைக் கொன்றார்.

**கே: சதுர்முக பிரம்மனின் மகன் மற்றும் பதினான்கு மனுவிற்கு மூத்தவரான ஸ்வாயம்புவ மனுவை கொல்லும் சக்தி அரக்கர்களுக்கு எப்படி வந்தது?**

ப: ருத்ரதேவரின் வரத்தினால் இத்தகைய சக்தியை அந்த அரக்கர்கள் பெற்றிருந்தனர். சாகாவரம் பெற்றிருந்தனர். அதனால், சாட்சாத் ஸ்ரீஹரியே யக்ஞ ரூபியாக வந்து அவர்களைக் கொன்றார்.

**கே: ஸ்வாயம்புவ மனு கூறிய ஈசாவாஸ்ய உபநிஷத் அதற்கு முன் இருக்கவில்லையா?**

ப: த்யங்-அதர்வண என்ற ரிஷி மற்றும் அகஸ்த்ய ரிஷி இருவரும் இந்த மந்திரத்தை ஏற்கனவே துண்டுதுண்டாக சொல்லியிருந்தனர். ஸ்வாயம்புவமனு இதனை ஒரு தொகுப்பாகக் கொண்டுவந்தார். மேலும் ஒரே மந்திரத்தை பல ரிஷிகளும் சொல்லலாம் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: ஈசாவாஸ்ய உபநிஷத்தில் எவ்வளவு மந்திரங்கள் உள்ளன? யாரை அந்த உபநிஷத் வணங்குகிறது?**

ப: மொத்தம் 18 மந்திரங்கள் உள்ளன. யக்ஞ நாமகனான ஸ்ரீஹரியையே இந்த உபநிஷத் கொண்டாடுகின்றது. அதுமட்டுமல்லாமல், வாழ்க்கையில் கண்டிப்பாக

அடையவேண்டியதான, விஷ்ணுவின் சரணாரவிந்தங்களை, மிகவும் அழகாக வர்ணிக்கிறது.

**கே: ஈசாவாஸ்ய உபநிஷத்தில் மிகவும் முக்கியமான ஸ்லோகம் என்ன?**

ப:
ஈசாவாஸ்யம் இதம் சர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத் ।
தேன த்யக்தேன புஞ்சிதா: மா க்ருத: கஸ்யஸ்வித் தனம் ॥

இந்த உலகத்தில் உள்ள அனைத்து பொருட்களும் கடவுளால் படைக்கப்பட்டு, அவற்றில் ஸ்ரீஹரி நீக்கமற நிறைந்திருக்கிறான். அனைத்திற்கும் ஸ்ரீஹரியே உரிமையானவர். நமக்கென ஸ்ரீஹரியால் கொடுக்கப்பட்ட பொருட்களைக் கொண்டுதான் நாம் பற்றற்று இருக்கவேண்டும். பிறர் பொருட்களை விரும்பக்கூடாது. நம்மிடம் இருக்கும் பொருட்களையும் மற்றவர்களுக்குக் கொடுக்கவேண்டும்.

**கே: யக்ஞரூபியான ஸ்ரீஹரியை பூஜிக்கும் வழக்கம் நம்மிடம் இருக்கிறதா?**

ப: இரேபடித்தாய என்னும் வம்சத்தில் வந்த ஒரு கிருஹஸ்தருக்கு, ஸ்ரீமதாசார்யர் யக்ஞநாராயணரின் உருவச்சிலையை கொடுத்திருக்கிறார். அதன்மூலம் யக்ஞரூபியான ஸ்ரீஹரியை பூஜிக்க வேண்டுமென்று தெரியப்படுத்துகிறார். இத்தகைய யக்ஞரூபியான ஸ்ரீஹரியைப் பற்றி அறிந்து, பூஜை செய்து, தன்யர் ஆவோமாக.

**கே: 'யக்ஞஸ்ச லோகாதுத தத்க்ருதான்ன:' என்னும் நாராயணவர்ம ஸ்லோகத்தின் பொருள் என்ன?**

ப: யக்ஞ நாமகனான ஸ்ரீஹரி கெட்ட மனிதர்களிடமிருந்தும், கெட்ட காரியங்களிலிருந்தும் என்னைக் காப்பாற்றட்டும் என்று நாராயண வர்மத்தில் யக்ஞரூபியான ஸ்ரீஹரியைக் குறித்து வேண்டியிருக்கிறார். ஒவ்வொரு நொடியும் நமக்கு வரும் கெட்ட சிந்தனைகளை, கெட்ட மனிதர்களின் நட்பை, விலக்கவேண்டும் என்றால் யக்ஞனையே சரணடையவேண்டும். அதாவது, நம் அனைவரின் கடமைகளும் யக்ஞம் ஆகவேண்டும். ஒவ்வொரு நாளும் செய்யும் கர்ம-தர்மங்கள் அனைத்தும் யக்ஞம் ஆகவேண்டும். நம் மொத்த வாழ்க்கையே யக்ஞம் ஆக வேண்டும். அப்போது யக்ஞரூபியான ஸ்ரீஹரி, மிகவும் மகிழ்ந்து நமக்கு அருளுவார்.

**கே: யக்ஞ அவதாரத்தின் மூலம் நமக்குத் தெரியவரும் செய்தி என்ன?**

ப: 'ந மே பக்த: ப்ரணஷ்யதி'- ஹரிபக்தனுக்கு என்றும் அழிவில்லை. ஒருமனத்துடன் யக்ஞரூபியான ஸ்ரீஹரியைக் குறித்து தவம் செய்துகொண்டிருந்த ஸ்வாயம்புவமனுவைக் கொல்வதற்கு பல அரக்கர்கள் வந்தனர். அப்போது

அவதாரம் செயத யக்ஞரூபி, அந்த அரக்கர்களைக் கொன்று ஸ்வாயம்புவமனுவை காப்பாற்றினார். 'ந மே பக்த: ப்ரணஷ்யதி' என்னும் கீதையின் ஸ்லோகத்திற்கு இதைவிடவும் வேறொரு சரியான உதாரணம் தேவையில்லை. ஸ்வாயம்புவமனுவை காப்பாற்றியது மட்டுமல்லாமல், அந்த மொத்த மன்வந்தரத்திற்கும் தானே இந்திரனாக இருந்து அனைவரையும் காப்பாற்றினார். நாமும்கூட ஸ்வாயம்புவ மனுவைப் போல, உலகத்தை மறந்து, ஸ்ரீஹரியின் தியானத்தில் மூழ்கவேண்டும். அப்படிச்செய்தால் நமக்கு என்றென்றும் அழிவில்லை.

***

## 21. ரிஷப

**கே: ரிஷப என்னும் அவதாரத்தைப் பற்றி எங்கும் சொல்லப்படவில்லை. சுளாதிகளிலும் இல்லை. ஆகவே இதைப் பற்றிய சிந்தனை அநாவசியம்தானே?**

ப: பாகவத, பிரமாண்ட புராணங்களில் இந்த அவதாரத்தைப் பற்றிய அபூர்வமான விஷயங்கள் உள்ளன. விஜயதாசர் இயற்றியுள்ள ரிஷபாவதார சுளாதியும் கிடைக்கிறது. தெரிந்து கொள்வதற்கும், பூஜை செய்வதற்கும் வித்தியாசம் உள்ளது. ஸ்ரீஹரியின் ரூபம், அவதாரம், செயல்களைப் பற்றி அதிகம் தெரிந்துகொள்வதற்கு தடை ஒன்றுமில்லை. பிரதிமை (உருவச்சிலை) பூஜை, ஜபம், ஹோமம் ஆகியவற்றைச் செய்வதற்கு குருகளின் அனுமதி தேவை.

**கே: ரிஷப அவதாரத்தில் என்ன இருக்கிறது?**

ப: ரிஷப அவதாரம் அற்புதமானது. மிகவும் அற்புதமானது. இதை வர்ணிப்பதற்கு சொற்கள் போதாது.

**கே: அது என்ன அவ்வளவு அற்புதம்?**

ப: நம் நாட்டிற்கு பாரதம் என்ற பெயர் வந்ததே இந்த ரிஷபனின் மகனான பரதன் மூலமாகதான். மேலும் ரிஷபன் தன்னுடைய சாதனைக்கு தேர்ந்தெடுத்த இடம், தெற்கு கர்நாடகத்தின் குடிசாத்ரி.

**கே: நம் நாட்டின் பெயர் இந்தியா அல்லவா?**

ப: சிந்து தேசத்தினர் ஹிந்துவாகினர். பிரிட்டிஷ் அரசு, ஹிந்துதேசத்தை இந்தியா என்று தவறாகப் பெயரிட்டுவிட்டனர். பின்னர் வந்த நவீன தலைமுறையினர் இதையே நம் நாட்டின் பெயராகக் கொண்டுவிட்டனர்.

**கே: துக்ஷகனின் மகனான பரத சக்ரவத்தினாலேயே நம் நாட்டிற்கு பாரதம் என்று பெயர் வந்ததுதானே?**

ப: நம் நாட்டிற்கு பாரதம் என்று பெயர் வந்தது, ரிஷப நாமகனான ஸ்ரீஹரியின் மகனான பரதனிடமிருந்தே தவிர, துக்ஷகனின் மகன் மூலமாக அல்ல.

**கே: அதற்குமுன் இந்த நாட்டிற்கு என்ன பெயர் இருந்தது?**

ப: அஞ்சனாப.

**கே: ரிஷபன் தென் கர்நாடகத்திற்கு வந்தான் என்றீர்கள். ஆனால், கர்நாடக மாநிலம், தெலுகு மாநிலம், தமிழ் மாநிலம் ஆகியவை சமீபத்தில் தோன்றியவைதானே?**

ப: அப்படி ஒன்றுமில்லை. லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரும்கூட இந்தப் பெயர்கள் பயன்பாட்டில் இருந்தன. பாகவதத்தில் கர்நாடக மாநிலத்தின் பெயர் இப்படியாக இருக்கிறது. 'ஏகதா து காங்கட கர்நாடாத் தக்ஷிண கர்நாடகான் தேஷான் யத்ருச்சயோபகத: குடசாசலோபவனே அஸ்யக்ருதாஷ்மகபள உன்மத இவ'.

'ரிஷபதேவனு பீமரதீனதி தீரவெனிஸித காங்கடகர்நாடகதிந்த தக்ஷிண கர்நாடகக்கே தெரளி அல்லி குடசாத்ரியல்லி யௌனபங்கவாக பாரதெந்து பாயியொளகெ கல்லு ஹாகிகொண்டு ஹுச்சனந்தே இத்த'.

பொருள்: ரிஷபதேவன், பீமரதி நதிக்கரையில், தக்ஷிண கர்நாடகத்திற்குச் சென்று அங்கு குடசாத்ரி என்னும் இடத்தில் வாயில் கல்லை போட்டுக்கொண்டு பைத்தியம்போல் இருந்தான்'.

**கே: அப்படியா? எவ்வளவு அற்புதம்? நம் பாரதம். நம் கர்நாடகம். நம் தென் கர்நாடகம். நம் குடிசாத்ரி - இதுவே நம் பெருமை.**

ப: ஆம். இதில் சந்தேகமே இல்லை. இந்தப் பெருமைக்குக் காரணமான ஸ்ரீஹரியை மறக்கக்கூடாது அவ்வளவே.

**கே: ரிஷபதேவன் தேவனே அல்ல, இவர் ஒரு தீர்த்தங்கரர் அல்லவா?**

ப: ரிஷபன் ஸ்ரீஹரியின் அவதாரமே என்பதற்கு பல ஆதாரங்கள் உள்ளன. ஆனால் இவரை தீர்த்தங்கரர் என்று ஜைனர்கள் சொல்லி வருகின்றனர்.

**கே: தீர்த்தங்கரர் என்றால் என்ன? தேவன் என்றால் என்ன?**

ப: இந்த கேள்விக்கு ஜைனர்களே பதில் சொல்லியிருக்கின்றனர். ஞான நிலையை அடைந்து இன்னும் மேலே முன்னேறுகிறவர்களே தீர்த்தங்கரர் ஆவர். இந்த ரிஷபன் முதலானவர் தீர்த்தங்கரர்களின் வரிசையில் வந்தவர் என்பது ஜைனர்களின் வாதம். ஸ்வந்தந்த்ரனும், ஆதி அந்தம் இல்லாமல் அனைத்து காலங்களிலும் பரிபூர்ணனாகி இருப்பவனே தேவன்.

**கே: ஆனால் இன்றும் ஜைனர்கள் இந்து தெய்வங்களையெல்லாம் பூஜிக்கின்றனர். தீபாவளி முதலான பண்டிகைகளையும் கொண்டாடுகின்றனர். இது ஏன்?**

ப: சர்வோத்தமனான ஸ்ரீஹரியை ஜைனர்கள் ஒப்புக்கொள்வதில்லை. இந்திரன் முதலான தேவர்கள், ஸ்வர்க்கம் முதலான உலகங்கள், கர்ம, சுகர்ம, குகர்ம ஆகியவை ஜைன சாகியத்யங்களில் பரவலாக காணப்படுகின்றன. மறுஜென்மத்திற்கு காரணமான கர்மத்தினை போகத்தின் மூலம் அல்லது கடினமான தவத்தின் மூலம் தாண்டுவதே, மோட்சத்திற்கு செல்லும் வழி என்பது ஜைனர்களின் சித்தாந்தம். ஆனால் இன்றைய ஜைனர்களிடம் ஹிந்துக்களின் பழக்கவழக்கங்கள் காணப்படுவது மிகவும் ஆச்சரியமான விஷயம். இறுதியாக, தெரிந்துகொள்ள வேண்டியது இதுவே - 24 தீர்த்தங்கரர்களை ஜைனர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். அதில் முதலாவது ரிஷபன். இவரே ஜைன மதத்தை நிறுவியவர்.

**கே: ரிஷப என்று சொல்லவேண்டுமா அல்லது வ்ருஷப'வா?**

ப: ரிஷப என்றே சொல்லவேண்டும். 'ரிஷ ஞானே' என்பதிலிருந்து வந்த இந்த சொல்லுக்கு பரிபூர்ணம் என்று பொருள். வ்ருஷப என்றாலும் அது தப்பில்லை. வ்ருஷ என்றால் தர்மம் என்று பொருள். ப என்றால் வளர்ப்பவன் என்று பொருள். தர்மத்தில் மூழ்கியிருப்பவர்களை மேல் எழுப்புபவன் ஆகையால் வ்ருஷப என்றும் சொல்லலாம்.

**கே: ரிஷப அவதாரத்தின் கதையை விளக்கவும்.**

ப: ப்ரியவ்ரத ராஜனின் பேரனான நாபிராஜன் புத்ரகாமேஷ்டி யாகத்தைச் செய்தான். ஸ்ரீஹரியே அவன் மகனாக ரிஷப ரூபத்தில் மேருதேவியிடம் அவதரித்தார். ஞானியான ரிஷபன் உலகத்தை ஆளத் துவங்கினான். ஒரு முறை தேவேந்திரன் ரிஷபனுடனான போட்டியில், மழை பெய்விக்கவில்லை. அப்போது ரிஷபன் தானே மழையை பெய்வித்தார். மக்களின் அபிமானத்தைப் பெற்றார். இந்திரன் தன் மகளான ஜெயந்தியை திருமணம் செய்துகொடுத்தான். இவள் மூலமாக ரிஷபன், பரதன் முதலான 100 வாரிசுகளைப் பெற்றார்.

கண்ணிற்கு இட்டுக்கொள்ளும் மையைப் போல் கருப்பாக அவனது தேகம் இருந்த காரணத்தால், ரிஷபனுக்கு 'அஞ்சனாப' என்று பெயர் வந்தது. அவர் ஆளும் தேசத்திற்கும் 'அஞ்சனாப' என்ற பெயரே நிலைத்தது. அவனின் மகன் பரதன் ஆண்டபிறகு இந்த தேசத்திற்கு 'பாரத' என்ற பெயர் வந்தது. பரதனின் 99 பேர் தம்பியரில், குஷாவர்த முதலான ஒன்பது பேர் முக்கியமானவர்கள். கவி, ஹரி முதலானவர்கள் சிறந்த பக்திமான்களாக விளங்கினர். இவர்கள் கொடுத்த விலைமதிப்பற்ற உபதேசங்கள் பாகவத பதினோறாவது ஸ்கந்தத்தில் ஜாயந்தீய உபாக்யானத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. மீதி 80 பேர்கள், விஸ்வாமித்திரரைப் போல ஸ்ரோத்ரிய (வேதங்களில் சொன்னவற்றை மட்டுமே பின்பற்றும்) பிராமணராக இருப்பது மிகவும் அற்புதமான விஷயம்.

ஆனந்தமயமான ரிஷபன், கிருஹஸ்தாஸ்ரமத்தை அனுசரித்து 100 அஸ்வமேத யாகங்களை செய்தார். ஒருமுறை ரிஷபன், பல ரிஷிகள், மக்கள் மற்றும் தனது

மகன்கள் அனைவருக்கும் இந்த உடலானது நிரந்தரமில்லை என்று உபதேசித்து, பரதனுக்கு முடிசூட்டிவிட்டு, அரசைத் துறந்து அங்கிருந்து கிளம்பிவிட்டார்.

மிகவும் அழகனான ரிஷபன், அயோக்கியர்களின் மோகனத்திற்காக கழிவுகளால் அலங்காரம் செய்வதை வழக்கமாக்கிக் கொண்டார். ஆனாலும் அந்தக் கழிவுகள், சுமார் 10 யோஜனை தூரம் வரை நல்ல சந்தனம் போல் மணம் கொடுத்தன. மனோவேகம், கூடு விட்டு கூடு பாய்தல் ஆகிய யோகசித்திகள் ரிஷபனுக்கு வந்தன. ஆனால் அவற்றை அவர் தனது லாபத்திற்காக பயன்படுத்திக் கொள்ளவில்லை. பின், தென் கர்நாடகத்தில் குடசாத்ரிக்கு வந்து, பைத்தியத்தைப் போல நடமாடினார். யோகிகள் மௌன விரதத்தை முறிக்கக்கூடாது என்பதைக் காட்டுவதற்காக வாயில் கற்களை அடைத்துக்கொண்டு திரிந்தார். காட்டுத்தீயினில் நுழைந்தார். அவரின் ஆவேசத்தினால் காட்டுத்தீ இன்னும் தகதகவென்று பற்றி எரிந்து காட்டினை அழித்தது.

சாமான்ய மக்கள், ரிஷபன் காட்டுத்தீயினில் எரிந்து போனார் என்று சொல்லத் துவங்கினர். ஆனால், பிறகு காட்டுத்தீயிலிருந்து வெளியில் வந்து தான் சாட்சாத் வாசுதேவரூபியான பரமாத்மனே என்று சஜ்ஜனர்களுக்குத் தெரிவித்தார். அங்கிருந்த அர்ஹந்தன் என்னும் அரசன், இவரை தவறாகப் புரிந்துகொண்டு, தன்னையே சாட்சாத் தேவன் என்று அறிவித்துக்கொண்டான். வைதிக தர்மத்தை விட்டொழித்து, மதங்களுக்கு எதிரானவர்களின் கொள்கைகளை பரப்பத் துவங்கினான்.

இப்படி ரிஷப ரூபியான ஸ்ரீஹரியின் அவதாரத்தின் கதை மிகவும் சுவாரசியமானது. கேட்பவர்களுக்கும், சொல்பவர்களுக்கும் அதிக பக்தியை உண்டுபண்ணுவதாக இருக்கிறது.

**கே: ரிஷபாவதாரத்தின் சிறப்பு என்ன?**

ப: தன்னுடைய பல அவதாரங்களில் ஸ்ரீஹரி துஷ்ட க்ஷத்திரியர்களை கொன்றொழித்தது தெரிந்ததே. ஆனால் இந்த அவதாரத்தில், தானே ஒரு க்க்ஷத்ரியனாக இருந்தாலும், எந்த துஷ்டர்களையும் கொல்லவில்லை. முதலில் கிருஹஸ்தராக இருந்து, பின்னர் ஒரு பைத்தியத்தைப் போல மாறி, அரக்கர்களுக்கு மயக்கத்தைக் கொடுக்கக்கூடிய அற்புதமான சரித்திரத்தைக் கொண்டவர் இவர்.

**கே: ரிஷபன் யாரின் மகன்? இவருக்கு எவ்வளவு மக்கள்? இவனின் மனைவி யார்?**

ப: இவர் ப்ரியவ்ரத ராஜனின் பேரனான நாபிராஜனின் மகன். தாயின் பெயர் மேரு. இந்திரனின் மகளான ஜெயந்தி, இவரது மனைவி. இவருக்கு 100 பேர் மக்கள். இவர்களில் 81 பேர் தவம் செய்து ஸ்ரோத்ரிய பிராமணரானவர்கள். ஒன்பது பேர் ஹரிபக்தர்கள். மிச்ச பேர் இவருக்கு உதவி செய்பவர்களாக இருந்தனர்.

**கே: ரிஷபதேவ யாருக்கு ஞானப் பிரசாரம் செய்தார்?**

ப: முதலில் தனது வாரிசுகளுக்கு ஞானோபதேசத்தை செய்தார்.

குருர்ன ஸ ஸ்வைத் ஸ்வஜனோ ந ஸ ஸ்யாத்
பிதா ந ஸ ஸ்யாத் ஜனனி ந ஸா ஸ்யாத் |
தைவம் ந தத் ஸ்யான்ன பதிஷ்ச ஸ
ஸ்யாத் ந மோசயோத் ய: சமுபேதம்ருத்யும் ||

இறப்பிற்கான பரிகாரத்தை உபதேசிக்காத குரு, குருவே அல்ல, உறவினர் உறவினர் அல்ல, தந்தை தந்தையல்ல, தாய் தாயல்ல, தெய்வம் தெய்வம் அல்ல, கணவன் கணவனல்ல. இப்படியாக இவர் செய்த உபதேசம் மிகவும் அற்புதமானது.

**கே: ரிஷபதேவன் அரசாட்சியை தியாகம் செய்து, எப்படி பைத்தியத்தைப் போல் திரியத் துவங்கினார்?**

ப: தன் மக்களுக்கு உபதேசித்து, பரதனை அரசனாக நியமித்து, தனது அரசாட்சியை தியாகம் செய்து புறப்பட்டார் ரிஷபதேவன். ஆஹவனிய முதலான அக்னிகளை தன்னில் உண்டுபண்ணி, திகம்பரனாக தலை கூந்தலை விரித்துப்போட்டு, கண்-காது குறைபாடு உள்ளவர்களைப் போல், பைத்தியக்காரர்களைப் போல் வேடமணிந்து, மக்கள் அவரிடம் பேச்சு குடுத்தாலும் மௌனவிரதத்தை அனுசரித்து சுற்றிவந்தார்.

**கே: அருமை. இந்த சமயத்தில் ரிஷபதேவனின் உடல் எப்படியிருந்தது? அவரை பாகவதம் எப்படி வர்ணிக்கிறது?**

ப: ‘அதிசுகுமாரகர சரணோர:ஸ்தலவிபுளபாஹ்வம்ஸகள வதனாத்யவயவ வின்யாஸ: ப்ரக்ருதிஸுந்தர: ஸ்வபாவஹாஸமுகோனவனளின தளாயமான ஷிஷிரதரபார்வருணாய தனயனஸ்த்ருஷ ஸுபக கபோலகர்ணிகம் நாஸோ விகோடஸ்மித வதனமஹோத்ஸவேன புரவனிதானாம் மனஸி குஸுமஷர முபததான: பராகவலம்ப மானகுடிலகபிஷ கேஷ பூரிபாரோவதூதமலின நிஜ சரீரேண க்ருஹகைஹேத இவாத்ருஷ்யத’ ||

ரிஷபதேவன் அழகானவர். அவரது கைகால்கள், மார்பு, நீண்ட தோள்கள், கழுத்து, முகம் அனைத்தும் மிக அழகு. இயற்கையிலேயே சிரித்தவாறு இருக்கும் கண்கள். அப்போதே மலர்ந்த தாமரை மலரைப் போன்ற, சூட்டைத் தணித்து குளிர்ச்சியைத் தரக்கூடிய அழகான கண்கள். அவைகளால் கன்னம், காது, தொண்டை, மூக்கு ஆகியவைகளுக்கு அழகு. அவைகளும்கூட அழகானவைகளே. புன்னகையுடன் கூடிய முகத்தைப் பார்க்கும் கண்கள் மிகவும் மகிழ்ச்சியடைகின்றன. பெண்களின் மனதிற்கு மலர்மாலைகளான அம்புகளைத் தொடுப்பவனாக இருக்கிறார்.

இத்தகைய மகாஞானியான ரிஷபதேவனின் அருள் என்றென்றும் இருந்து மோகத்தில் விழாதவாறு, தத்வஞானத்தை அளித்து என்னைக் காப்பாற்றட்டும்.

**கே: ரிஷபனை என்னவென்று வணங்கவேண்டும்?**

ப: 'நிர்ஜிதாத்ம ரிஷபோ த்வந்த்வாத் பயாத் அவது'. பயம், நஷ்டம், ஜயம், லாபம், ப்ரீதி, மோகம், சுகம், துக்கம், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோட்சம் இப்படி அனைத்து த்வந்த்வ கர்மங்களிலும் நாம் சிக்கி உழல்கின்றோம். எப்போதும் சந்தேகத்திலேயே இருக்கின்றோம். யார் எப்போதும் அனைத்திலும் சந்தேகம் கொள்கிறானோ அவன் நாசமடைவான் - 'சம்ஷயாத்மா வினஸ்யதி'. என்று பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் சொல்லியிருக்கிறார். பயங்கரமான இந்த சந்தேகம் என்னும் முள்ளை எடுத்தெரிவதற்கு ரிஷபரூபியான ஸ்ரீஹரியை வணங்கவேண்டும்.

**கே: ரிஷபதேவர் சொல்லும் செய்தி என்ன?**

ப: முதலில் இந்த நாட்டிற்கு 'அஞ்சனாப' என்ற பெயரே இருந்தது. பின்னர், ரிஷபனின் மகனான பரத சக்ரவர்த்தியினால் 'பாரத' என்று பெயர் வந்தது. ஆகவே ஒவ்வொரு பாரத மக்களும், ரிஷபனை நினைக்கவேண்டும். யாரினால் இந்த நாட்டிற்கு பாரதம் என்று பெயர் வந்ததோ, அவரையே மறந்தது நம் அனைவரின் துரதிருஷ்டம்.

ரிஷபரூபியான ஸ்ரீஹரி முதலில் கிருஹஸ்தாஸ்ரமத்தை ஸ்வீகரித்து, பின்னர் அனைத்தையும் நீங்கி, பூரண சன்யாசத்தைப் பெற்று, காட்டிற்குக் கிளம்பினார். இது நம் அனைவருக்குமான ஒரு நல்ல பாடம். நாமும் இந்தப் பிறவியில், சம்சார பாரத்தை விட்டு, ஸ்ரீஹரியின் பாதங்களில் சரணடையவேண்டும்.

***

## 22. தன்வந்திரி

**கேள்வி: நம் வீட்டுக் கஷ்டங்களை யாரிடம் சொல்லி அழுவது? காசு பணத்திற்கு குறைவு இல்லையென்றாலும், நடைமுறை வாழ்க்கையில் பற்பல நோய் நொடிகள், மனதில் பற்பல பிரச்னைகள், இந்த வாழ்க்கையே வேண்டாம் என்ற வெறுப்பு வந்துவிட்டது. இதற்கு ஏதேனும் தீர்வு / வழி சொல்லுங்களேன்.**

பதில்: இவ்வளவு வருத்தப்படத் தேவையில்லை. இதற்கு சுலபமான வழி ஒன்று உள்ளது. வாழ்க்கையில் நல்ல சாதனைகளை நீங்கள் செய்யவேண்டும் என்பதற்காகவே இப்படி கஷ்டங்கள் வருகின்றன. பூர்ண நம்பிக்கை வந்து தன்வந்திரி மந்திரத்தை ஒரு லட்சம் முறை ஜெபம் செய்யுங்கள். நாயுருவி மரத்தின் சமித்துகளின் மூலம் பத்தாயிரம் முறையும், 2000 முறை அமிர்தவல்லியின் மூலம் ஆஹுதி கொடுத்து தன்வந்திரி ஹோமம் செய்யுங்கள். எந்த பிரச்னையும் உங்கள் அருகிலேயே வராது. அனைத்து மந்திர தந்திரங்களுக்கும் நீங்கள் ஒரு நெருப்பு போல காட்சியளிப்பீர்கள்.

பூதாபிசார ஷாந்த்யர்தமபாமேர்காஹுதிக்ரமா ।
த்விகுணாऽம்ருதயா பஸ்சாத் கேவலேன க்ருதேன வா ॥

**கே: பல ஆண்டுகளாக எனக்கு தலைவலி மற்றும் வாந்தி இருக்கிறது. எவ்வளவோ மருத்துவர்களைப் பார்த்தும் பிரச்னைகள் தீரவில்லை. மற்றும் என் உறவினர் ஒருவருக்கு வாரத்திற்கு இருமுறை ஜுரம் வருகிறது. இதற்கு ஏதேனும் பரிகாரம் உள்ளதா?**

ப: ஜ்வர தாஹாதி ஷாந்த்யர்தம் தர்பயோன்மனுனாऽமுனா ।
த்யாத்வா ஹரிம் ஜலே ஸப்த ராத்ரா ஜ்ஜோர்திர் வினஸ்யதி ॥

தினமும் (ஒரு நாளைக்கு 8000 அல்லது 3000மாவது) தன்வந்திரி மந்திரத்தை ஏழு நாளைக்கு ஜபம் செய்யுங்கள். தர்ப்பணம் விடுங்கள். நோய்கள் கண்காணாத தூரத்திற்கு ஒடி மறைந்துவிடும்.

**கே: எனக்கு இன்னும் ஒரே ஒரு ஆண்டு ஆயுள் இருப்பதாக, ஜாதகத்தில் தெரிகிறது என்று ஜோசியர் சொல்கிறார். பயமாக இருக்கிறது. இதற்கு ஏதேனும் பரிகாரம் உள்ளதா?**

ப: உங்கள் ஜென்ம நட்சத்திரத்தின் நாளில், பசும்பால் மற்றும் நெய் கொண்டு, தன்வந்திரி மந்திரத்தால், ஒரு ஹோமம் செய்யுங்கள். இதனால் உங்கள் ஆயுள் அதிகரிக்கும். உங்கள் ஜாதகத்தை நீங்களே திருத்துவீர்கள்.

**கே: நான் எதுவும் படிக்கவில்லை, எனக்கு எப்போதும் கஷ்டம் வருகிறது, எனக்கு எப்போதும் பயமாக இருக்கிறது, தினமும் ஏதும் ஒரு நோய்**

**இருக்கிறது, என் உணவில் விஷம் கலந்துவிட்டார்கள் - இப்படிப்பட்ட கேள்விகளுக்கு விடையே கிடைக்கவில்லையே?**

ப: தினந்தோறும் தன்வந்திரி மந்திரத்தை எவ்வளவு முடியுமோ அவ்வளவு முறை பக்தியுடன் ஜெபிக்க வேண்டும். இதனால் அஞ்ஞானம், துக்கம், பயம், நோய், உணவில் கலந்த விஷம் இவை அனைத்தும்கூட நீங்கி, வாழ்க்கையில் சுகம் பிறக்கும். அதுமட்டுமல்லாமல் மனதளவில் வரும் பிரச்னைகள், குழப்பங்கள் இவைகளும்கூட தன்வந்திரி மந்திரத்தினால் பரிகாரம் ஆகின்றன.

அஞ்ஞான துக்க பய ரோக மஹா விஷாண ।
யோகோSயாமாஷு வினிஹத்ய சுகம் ச தத்யாத் ॥

**கே: ஜெபம் செய்வதற்கு எனக்கு நேரமே கிடைப்பதில்லை. நோய்கள் தீவிரமடைந்துவிட்டன. நான் என்ன செய்யட்டும்?**

ப: நீங்கள் ஜெபம் செய்யவேண்டும் என்பதில்லை. அமிர்தத்தைப் பொழிந்து கொண்டிருக்கும் தன்வந்திரியை மனதில் நினைத்து, உங்கள் தலையில் கைவைத்து, இன்னொரு மந்திர-உபாசகர் தன்வந்திரி ஜெபத்தை செய்தாலும் போதுமானது. இப்படிச் செய்தால் நிச்சயமாக ரோகங்கள் பரிகாரம் ஆகும். நோய்க்குக் காரணமாக இருக்கும் பாவங்கள் தூர விலகிப் போகும். அப்படி ஜெபிக்கும் மந்திர-உபாசகரிடம் ஹரிபக்தி மற்றும் சிரத்தைகள் இருக்கவேண்டியது மிகவும் அவசியம்.

த்யாத்யேவ ஹஸ்த தள கம் ஸ்வம்ருதம் ஸ்ரவந்தம்
வேதம் ஸ யஸ்ய திரஸி ஸ்வ கரம் நிதாய ।
ஆவர்தயேன் மனுமெமம் ஸ ச வேதரோக:
பாபாதபைதி மனுஸா யதி பக்தி மனு: ॥

**கே: நான் ஒரு மருத்துவன். எந்த நோய்க்கு எந்த சிகிச்சை / மருந்துகள் கொடுக்கவேண்டும் என்று எனக்குத் தெரியும். ஆனாலும், நான் செய்யும் சிகிச்சையில் நோய்கள் குணமாவதில்லை. இதனால் அதிக நோயாளிகள் என்னிடம் வருவதில்லை. இதற்கு என்ன பரிகாரம்?**

ப: தினமும் தன்வந்திரி மந்திரத்தை ஆயிரம் முறை ஜெபம் செய்யுங்கள். உள்ளங்கையில் மருத்தினை வைத்து, தன்வந்திரி மந்திரத்தை ஒரு முறை ஜெபித்து, பின் நோயாளிகளுக்குக் கொடுங்கள். நீங்கள் கொடுக்கும் சாதாரண மருந்தினால், பெரிய நோய்களும்கூட தூர ஓடிப்போகும். அதிக நோயாளிகளுக்கு சேவை செய்யும் பாக்கியம் உங்களைத் தேடிவரும்.

**கே: நீங்கள் சொல்லும் பரிகாரங்கள் அனைத்தும் மனதிற்கு மிகவும் அமைதியை தருகின்றன. ஆனால் நாங்கள் பெண்கள் ஆதலால், தன்வந்திரி**

**மந்திரத்தை உச்சரிக்கும் அருகதை எங்களுக்கு இல்லை. நாங்கள் என்ன செய்யவேண்டும், சொல்லுங்கள்?**

ப: நீங்களே ஜெபம் செய்யவேண்டும் என்பதில்லை. தன்வந்திரி சூளாதியைப் படித்து அதிலிருந்து சித்தி அடையலாம். அல்லது உங்கள் கணவரின் மூலம் ஜெபம் செய்வித்து, அவரின் மூலமே நோய்களுக்கான பரிகாரத்தை தேடிக்கொள்ளலாம். அல்லது உங்கள் கணவரின் முலமாகவே, பிரணவம் இல்லாத தன்வந்திரி மந்திரத்தை உபதேசம் பெற்று, அதனை ஜெபிக்கலாம். நோக்கம் தெளிவாக இருந்தால், அதை அடையும் வழிகள் ஆயிரம் உண்டு.

**கே: எந்த மந்திரத்திற்கும் இல்லாத மகிமையை தன்வந்திரி மந்திரத்திற்கு சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். இதற்கு என்ன காரணம்?**

ப: தந்த்ரசார சங்க்ரஹத்தில், ஸ்ரீமதாசார்யர் தன்வந்திரி மந்திரத்தின் மகிமைகளைப் பற்றி மிகவும் அருமையாக விவரித்திருக்கிறார். அனைத்து மந்திரங்களின் கிரீடம் இதுவே என்று கொண்டாடுகிறார். 'தன்வந்தரோ மஹாமந்த்ர: ஸம்ஸ்ருதிவ்யாதி நாஷன:' என்று சொன்னதின் மூலம், தன்வந்திரி மந்திரத்திற்கு, தற்காலிக நோய்கள் மட்டுமல்ல, சம்சாரத்தில் வரும் நோய்கள் அனைத்தையுமே தீர்க்கும் சாமர்த்தியம் உள்ளது என்று கண்டிப்பான குரலில் தெளிவாகக் கூறுகிறார். அஷ்டமஹா மந்திரங்களுக்கு அடுத்த நிலையில் தன்வந்திரி மந்திரம் உள்ளது.

**கே: தன்வந்திரி மந்திரத்தை ஜெபிக்கும்போது எப்படி தியானம் செய்யவேண்டும்?**

ப: எண்ணிக்கையற்ற சந்திரர்களின் ஒளியைக் காட்டிலும் அதிக பிரகாசமுள்ளவர். அமிர்தத்தை பொழிந்துகொண்டிருக்கும் கிரணங்களால் அனைத்துலகையும் வாழ வைத்துக்கொண்டிருப்பவர். ஆனந்த வடிவுடையவர். ரமா, பிரம்மா முதலியோர்க்கு தலைவர். ஞான முத்திரை, அமிர்த கலசம் இரண்டையும் இரு கைகளில் ஏந்தியிருப்பவர். சந்திர மண்டலத்தில் வீற்றிருப்பவர் - இப்படியாக தியானிக்க வேண்டும்.

**கே: எங்கு / எப்படி தியானிக்கவேண்டும்?**

ப: 'ஆத்மஸம்ஸ்தம்' என்ற சொல்லின் மூலம் ஸ்ரீமதாசார்யர் தியானம் எங்கு செய்யவேண்டும் என்று சொல்கிறார். நம் இதயத்தில், அக்னி மண்டலம், சந்திர மண்டலம் மற்றும் சூர்ய மண்டலங்கள் உள்ளன. இதயத்திலிருக்கும் சூரியமண்டலத்தில் சூரிய நாராயணனை நினைத்து காயத்ரி மந்திரத்தை ஜெபிப்பதைப் போல, சந்திரமண்டலத்தில் தன்வந்திரியை நினைத்து ஜபம் செய்யவேண்டும். இதயத்திலிருக்கும் சந்திரமண்டலத்தில் இருக்கும் தன்வந்திரியானவர், நம் உடலில் இருக்கும் 72,000 நாடிகளில் தன் ஒளியைப் பாய்ச்சி நம் உடலை அமிர்தத்தால் நிரப்புகிறார். அதுமட்டுமல்லாமல், நம் தலையில், புருவங்களுக்கு நடுவில், உள் நாக்கினில், நாபியில் மற்றும் உடலின்

கீழ்பாகத்தில் இருக்கும் ஷட்-சக்கரங்களில் (ஆறு சக்கரங்களில்) இதே தன்வந்திரி நிலைத்திருந்து, அமிர்த மழையை பொழிகின்றார்.

**கே: என்ன ஆச்சரியம்? இதயத்தில் மட்டுமல்லாது, தன்வந்திரி நம் உடலில் ஆறு இடங்களில் நிலைத்திருக்கிறாரா?**

ப: ஆம். இதைவிட அற்புதமான விஷயம் வேறொன்றில்லை. ஆறு சக்கரங்களிலும் நிலைத்திருந்து அமிர்தத்தைப் பொழிந்துகொண்டிருக்கும் தன்வந்திரியின் மகிமையை அறிந்து ஆதி-வியாதிகளை போக்கிக்கொள்ள வேண்டும்.

**கே: தன்வந்திரியின் ரூபம் எப்படி இருக்கிறது? ஒரு கையில் சக்கரம் மற்றொரு கையில் அமிர்த கலசம் - இவற்றைத் தாங்கியவாறு இருக்கின்றார் அல்லவா?**

ப: இதற்கும்கூட 'ஏவ ச' என்ற வாக்கியத்தின் மூலம் ஸ்ரீமதாசாரியார் பதில் அளித்திருக்கிறார். இடது கையில் அமிர்த கலசத்தையும், வலது கையில் ஞானமுத்திரையையும் ஏந்தியிருக்கிறார். இரண்டு கைகளை மட்டும் தியானிக்கவேண்டும் என்று ஸ்ரீமதாசாரியார் சொல்லியிருக்கிறார். நான்கு கைகளைக் கொண்டிருக்கும் தன்வந்திரியை வணங்குவதற்கு, எங்கும் சரியான ஆதாரம் இல்லை.

**கே: தன்வந்திரியின் அவதாரம் நடைபெற்றது எப்போது, எங்கு?**

ப: தேவர்களும், அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்தபோது, கையில் அமிர்த கலசத்தைத் தாங்கியவாறு அவதரித்தவரே தன்வந்திரி. அவர் அவதரித்த நாளான - ஆஸ்விஜ மாதத்தில் வரும் ஜலபூர்ண த்ரயோதசியை - தன்வந்திரி ஜெயந்தி என்று, தன்வந்திரியை வணங்குபவர்கள் விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள்.

**கே: தன்வந்திரியின் கதையை சொல்வீரா?**

ப: பாற்கடலைக் கடைந்தபோது அமிர்த கலசத்தைத் தாங்கியவாறு தோன்றியவரே தன்வந்திரி. அமிர்தத்தைக் கொண்டுவந்த பிறகு, தன் தந்தையான விஷ்ணுவைப் பார்த்து கேட்கிறார் - எனக்கு யக்ஞபாகத்தில் ஒரு இடம் கொடு. எனக்கு இந்த உலகத்தில் இருப்பதற்கு ஒரு இடம் கொடு. (அசுர மோகனத்திற்காக செய்யப்பட்ட ஒரு நாடகம் இது).

தன்வந்திரி கேட்டதைப் போலவே தந்தையான மகாவிஷ்ணு வரம் அளிக்கிறார். 'நீ காசிராஜனின் வம்சத்தில் அவதரிப்பாய். அப்போது உனக்கு யக்ஞத்தில் பங்கு கிடைக்கும். மேலும் உலகத்தில், ஆயுர்வேத சாஸ்திரத்தைக் கண்டுபிடித்தவன் என்றே புகழ் பெறுவாய். உனக்கு முன்னர் பிறந்த தேவர்கள் தாங்கள் செய்த

யாகத்தில் தம் பங்கினை ஏற்கனவே பெற்றுவிட்டதால், உனக்கு அதில் பாகத்தை அளிப்பது சாத்தியமில்லை'.

தந்தையான விஷ்ணுவின் ஆணையின் பேரில், இதே தன்வந்திரி பின்னர் காசிராஜனின் மகனாகப் பிறக்கிறார். யயாதியின் வம்சத்தில், தீர்கதனு என்னும் காசிராஜனின் மகனாக, தன்வ என்பவன் பிறக்கிறான். இவன் ஸ்ரீஹரியின் தன்வந்திரி ரூபத்தைக் குறித்து தவம் செய்தான். விஷ்ணு தரிசனம் அளித்தபோது, நீயே எனக்கு மகனாகப் பிறக்கவேண்டும் என்று வரம் கேட்கிறான். ஸ்ரீஹரியும், 'ததாஸ்து - அப்படியே ஆகட்டும்' என்று வரமளித்து, அந்த தன்வ ராஜனுக்கு மகனாகப் பிறந்து, தன்வந்திரி என்ற பெயரில் புகழ்பெற்றார்.

பாரத்வாஜ முனிவர்களிடமிருந்து ஆயுர்வேதத்தைக் கற்றார். மற்றும் ஆயுர்வேதத்தினை, 1. உடல் சிகிச்சை 2. குழந்தைகளுக்கான சிகிச்சை 3. வீட்டு சிகிச்சை 4. உடம்பில் மேல் பகுதிக்கான சிகிச்சை 5. அறுவை சிகிச்சை 6. பல் சிகிச்சை 7. ஜுர சிகிச்சை 8. பாலியல் பிரச்னைகளுக்கான சிகிச்சை என்று எட்டு பாகங்களாகப் பிரித்து, ஆயுர்வேதத்தைத் துவக்கியவர் என்று பெயர் பெற்றார். தன்வந்திரிக்கு கேதுமந்த என்ற மகனும், அவனுக்கு பீமரத என்னும் மகனும் பிறந்தனர். இப்படியாக இவரின் வம்சம் வளர்ந்தது.

இந்த தன்வந்திரியானவர், ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரமே தவிர, ஸ்வருப-அவதாரம் இல்லை என்று பாகவதம் சொல்கிறது.

**கே: தன்வந்திரி என்றால் என்ன?**

ப: தன்வ = நோய், நொடி, கஷ்டங்களை; தரி = நாசம் செய்பவன் என்று பொருள். 'அஞ்ஞானரோக' என்னும் ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் அனைத்து பிரச்னைகளையும் நாசம் செய்பவன். தந்த்ரசார சங்க்ரஹ தியான ஸ்லோகத்தில் ஸ்ரீமதாசார்யார் தன்வந்திரி என்னும் பெயரின் பொருளை விவரமாகச் சொல்லியிருக்கிறார்.

**கே: தன்வந்திரியின் படத்தை / உருவச்சிலையை (பிரதிமையை) பூஜிக்கலாமா? தன்வந்திரிக்கு எங்காவது கோயில் இருக்கின்றதா?**

ப: சந்திரமண்டலத்தில் அமர்ந்து, அமிர்தகலசத்தைப் பிடித்தவாறு இருக்கும் தன்வந்திரியின் படத்தை / உருவச்சிலையை பூஜிப்பதால் நல்ல ஆரோக்கியம் கிட்டும். தென் கர்நாடகத்தில் உள்ள கொக்கட என்னும் ஊரில் தன்வந்திரி ஆலயம் ஒன்று உள்ளது. ஸ்ரீமதாசார்யர் இந்த கோயிலுக்கு வந்திருக்கிறார் என்று மத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

நானாவித கஷ்டங்களில் மூழ்கியிருக்கும் நாம் அனைவரும் இந்த சம்சார சாகரத்தைக் கடந்து, ஸ்ரீஹரியை அடைவதற்கு, தன்வந்திரியையே சரணடைவோமாக.

**கே: தன்வந்திரியின் என்னவென்று வணங்கவேண்டும்?**

ப:
அனைத்தையும் பார்க்கிறேன். ஆனாலும் நான் குருடன். அனைத்தையும் கேட்கிறேன். ஆனாலும் நான் செவிடன். ஓயாமல் அரட்டை அடிக்கிறேன். ஆனாலும் நான் ஊமை. வயிறு நிறைய உண்கிறேன். ஆனாலும் எனக்கு நாக்கே இல்லை. ஒரு நொடியும் வீணாக்காமல் ஏதோ வேலை செய்கிறேன். ஆனால் எனக்கு கைகளே இல்லை. முகத்திற்கு அழகான அலங்காரங்களைச் செய்துகொள்கிறேன். ஆனால் எனக்கு தலையே இல்லை. எல்லா இடத்திற்கும் போய் வருவேன். ஆனால் எனக்கு கால்களே இல்லை.

ஏ தன்வந்திரியே! என் இந்திரியங்களில் எந்த நோயும் இல்லை. உன்னையே தேடி அலையும் ஒரே ஒரு இந்திரியமாவது கொடுத்து எனக்கு அருள்வாயாக, ஸ்வாமி! உண்மை வழியில் நடப்பதற்கு எனக்கு அருள்வாயாக என்று கீழ்க்கண்ட பாடலில் கோபாலதாசர் பாடுகிறார்.

“ஆவ ரோகவு எனகே தேவ தன்வந்திரி ।
ஸாவதானதி என்ன கைபிடிது நோடய்யா ॥”.

**கே: ’தன்வந்திரி: பகவான் பாது அபத்யாத்’ என்னும் நாராயண வர்மத்தின் வாக்கியத்திற்கு என்ன பொருள்?**

ப: தன்வந்திரி ரூபியான ஸ்ரீஹரி அப்த்யவிலிருந்து என்னை ரட்சிக்கட்டும்.

தேவர்களின் அனைத்துவிதமான கஷ்டங்களையும் போக்கிய, அவர்களுக்கு நலன்களை அள்ளி வழங்கிய கருணை மிகுந்தவனே தன்வந்திரி. அமிர்தத்தைப் பெறத் துடிக்கும் அனைத்து சாதகர்களுக்கும், காமம், அகங்காரம் முதலியவற்றை ஒழிக்கும் செயலில், பல்வேறு பிரச்னைகள் வரும்போது அவற்றை நீக்கி நமக்கு அருள்பவனே தன்வந்திரி. உடலுக்கு வரும் நோய்கள் மட்டுமல்லாது, மனதிற்கு வரும் நோய்களையும் நீக்கி, எல்லா சஜ்ஜனர்களுக்கும், நிரந்தரமான அமிர்தத்தைக் கொடுக்கும் தன்வந்திரியை தினம்தோறும் ஒவ்வொரு நொடியும் தியானித்து தன்யர் ஆவோமாக.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி தன்வந்திரியை எப்படி தியானிக்க வேண்டும்?**

ப:
சந்த்ரௌககாந்தி மம்ருதோரு கரைர்ஜகந்தி
ஸஜ்ஜீவயந்த மமிதாத்ம சுகம் பரேஷம் ।
ஞானம் சுதாகயஷமேவ ச ஸந்ததானம்
சீதாம்ஷுமண்டலகதம் ஸ்மரதாத்ம சம்ஸ்தம் ॥

எண்ணிக்கையற்ற சந்திரர்களின் ஒளியைக் காட்டிலும் அதிக பிரகாசமுள்ளவர். அமிர்தத்தை பொழிந்துகொண்டிருக்கும் கிரணங்களால் அனைத்துலகையும் வாழ வைத்துக்கொண்டிருப்பவர். ஆனந்த வடிவுடையவர். ரமா, பிரம்மா முதலியோர்க்கு தலைவர். ஞான முத்திரை, அமிர்த கலசம் இரண்டையும் இரு கைகளில் ஏந்தியிருப்பவர். சந்திர மண்டலத்தில் வீற்றிருப்பவர் - இப்படியாக தியானிக்க வேண்டும்.

மூர்த்னி ஸ்திதாதமுத ஏவ சுதாம் ஸ்ரவந்தீம்
ப்ரூமத்யகாச்ச தத ஏவ ச தாலுஸம்ஸ்தாத் ।
ஹார்த்ராச்ச நாபிசதனாததர ஸ்திதாச்ச
த்யாத்வாகபி பூரிததனுர்துரிதம் நிஹந்த்யாத் ॥

நம் தலையில், புருவங்களுக்கு நடுவில், கன்னங்களில், இதயத்தில், உடலின் கீழ் பாகத்தில் - இந்த அனைத்து இந்திரியங்களிலும், சந்திரமண்டலத்தில் வீற்றிருக்கும் தன்வந்திரி ரூபியான ஸ்ரீஹரி, அமிர்தமழையைப் பொழிந்துவருகின்றார். அந்த அமிர்தமழை தன் உடலில் நிரம்பியிருக்கிறது என்று நினைத்து ஜெபிப்பவர்கள் தீயவைகளை விலக்கிவிடுவார்கள். (இப்படி தியானிப்பதால் தீயவைகள் விலகிவிடும்).

அக்ஞான துக்கபயரோக மஹாவிஷாணி
யோகோக்யமாஷு வினிஹந்தி சுகம் ச தத்யாத் ।
உன்மாதவிப்ரமஹர: பரதஸ்ச சாந்த்ர
ஸ்வானந்தமேவ பதமாபயதி ஸ்ம நித்யம் ॥

இந்த தன்வந்திரி மந்திரமானது, அஞ்ஞானம், சந்தேகம், விபரீதஞானம், ஆத்யாத்மிக துக்கங்கள், பிசாசுகளினால் வரும் பயங்கள், நோய்கள், எதிரிகளால் வரும் பிரச்னைகள், விஷம் - இவைகளை விரைவில் போக்கி சுகத்தைக் கொடுக்கக்கூடியது. அதுமட்டுமல்லாமல், பைத்தியம், பயப்படுதல் ஆகியவற்றை நீக்குவது மட்டுமல்லாமல், மறு உலகத்திலும் ஒரு நிரந்தரமான இடம் - இந்த மந்திரத்தை ஜபிப்பவர்களுக்கு கிடைக்கும்.

த்யாத்வைவ ஹஸ்ததலகம் ஸ்வம்ருதம் ஸ்ரவந்தம்
தேவம் ஸ யஸ்ய ஷிரஸி ஸ்வகரம் நிதாய ।
ஆவர்தயேன்மனுமிமம் ஸ ச வீதரோக:
பாபாதபைதி மனஸா யதி பக்தினம்ர: ॥

தன்வந்திரி மந்திரத்தை தியானிப்பவன், தன் தலை முதலான இந்திரியங்களில் அமிர்தத்தைப் பொழிந்து கொண்டிருக்கும் தன்வந்திரியை, தன் கைகளில் இருப்பவராக தியானித்து, அந்தக் கையை ஒரு ரோகியின் தலையில் வைத்து, தன்வந்திரி மந்திரத்தை ஜெபித்தார் என்றால், அவர் எல்லா நோய்களும் நீங்கியவராகவும், எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலை அடைந்தவராகவும்

ஆகிறார். இதற்கு அந்த ரோகி, ஸ்ரீஹரி பக்தி உடையவராகவும், சிரத்தை உள்ளவராகவும் இருத்தல் அவசியம்.

***

## 23. மோகினி அவதாரம்

**பெண்களின் கேள்வி: ஆண்கள் தங்கள் இதயத்தில் இருக்கும் பிம்பரூபியான ஸ்ரீஹரியை வணங்குகிறார்கள். நாங்கள் என்ன செய்வது?**

பதில்: நீங்களும் அப்படியே செய்யுங்கள்.

**பெ.கே: இல்லை. 'பதி அந்தர்கத பிம்பரூபியை' வணங்குங்கள் என்கிறார்கள். அப்படியென்றால் எங்களுக்கு இதயகமலம் இருக்கிறதா இல்லையா? அல்லது எங்களுக்கு பிம்பரூபி இருக்கிறாரா இல்லையா? இதுவே எங்களின் குழப்பம்.**

ப: இந்தக் குழப்பம் ஆண்களுக்குமே இருக்கிறது. அவர்களும் தங்கள் 'குரு அந்தர்கத பிம்பரூபியை' வணங்கவேண்டுமா இல்லையா?

**பெ.கே: அப்படியென்றால் ஆண்களும் தங்கள் இதயத்தில் இருக்கும் ஸ்ரீஹரியை தியானம் செய்யக்கூடாதா?**

ப: ஆ! அப்படி பொருள் வந்துவிட்டதா? ஆண்கள் தங்கள் இதயகமலத்தில் இருக்கும் பிம்பரூபியையே தியானிக்க வேண்டும். தியானம் செய்யும்போது தங்கள் குருவின் அந்தர்யாமியாக நினைக்கவேண்டும். இதேதான் உங்களுக்கும்.

**பெ.கே: விளங்கவில்லை. அப்படியென்றால் எங்களுக்கும் இதயகமலம் உள்ளதா? நாங்களும் தியானம் செய்யலாமா?**

ப: ஆம். ஏன் குழப்பம்? இதயம் இருக்கும்போது இதயகமலம் இல்லாமல் இருக்குமா? சுஷும்னா நாடியில் இருக்கும் இதயகமலத்தில் பிம்பனை தியானிக்கும்போது பதி-அந்தர்கதனாக நினைக்கவேண்டும் என்பதே இங்கே சொல்ல வந்தது. புரிந்ததா?

**பெ.கே: அப்படியென்றால், பதி-அந்தர்கத இல்லாமல் வேறொரு பிம்பன் நம்மிடம் நியாமகனாக இருக்கமுடியுமா? அந்த பிம்பன் எப்படி இருப்பான்? அவனின் சாட்சாத்காரம் எப்படி?**

ப: பெண்களின் இதயகமலத்தில் இருக்கும் பிம்பரூபியான ஸ்ரீஹரி, நாம் நினைப்பதுபோல் இருப்பதில்லை. ஆனால் இதைப் பற்றிய தகவல், தியானம் செய்யும் பெண்களிடம் இருப்பதேயில்லை.

**பெ.கே: அப்படியில்லை. பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள் - 'அம்பேகாலு கிருஷ்ணா, உடுப்பி கிருஷ்ணா அல்லது கோபாலகிருஷ்ணா என்று யாராவது**

**ஒருவரை தியானியுங்கள்’ என்று. ஆகவே இந்த ரூபங்களையே நாங்கள் தியானம் செய்கிறோம்.**

ப: ஸ்ரீஹரியின் சாட்சாத்காரம் வேண்டுபவர்களுக்கு, ஸ்ரீகிருஷ்ணனை உபாசனை செய்யுங்கள் என்று சொல்வது சாதாரண உபதேசம். அபரோக்ஷ ஞானத்திற்கான காலம் கனியும்போது அந்தந்த ஜீவிகளின் ஸ்வரூபகுருவானவர் ‘பிம்ப ரூப’ யார் என்று தெரிவித்து, உபதேசம் செய்வித்து, உபாசனை செய்யுமாறு வழிகாட்டுகிறார். பெண்களுக்கான பிம்பருபம், ஸ்ரீஹரியின் பெண்ரூபமாக இருக்கவேண்டுமென்று விதி இல்லை. எந்த ரூபமாகவும் இருக்கலாம்.

**பெ.கே: பெண்களின் ஜீவஸ்வரூபத்தில் பெண்களே இருக்கவேண்டும் என்பதில்லை. ஆண்களாகவும் இருக்கலாம் இல்லையா?**

ப: சாத்தியமே இல்லை. பெண்களுக்கு எப்போதும் ஆண்களின் ஜென்மம் இல்லை. ஆண்களுக்கு எப்போதும் பெண்களின் ஜென்மம் இல்லை. விதிவிலக்காக ஆண்களுக்கு பெண்களின் தேகம் வந்தாலும், பெண்களுக்கு மட்டும் ஆண்களின் ஜென்மம் வருவதற்கான சாத்தியமே இல்லை.

**கே: பாற்கடலை கடையும்போது மோகினி என்னும் பெண் ரூபத்தை தரித்திருகிறார். ஸ்ரீஹரியின் பெண் ரூபம் என்பது இது மட்டும்தானே?**

ப: இல்லை. மெய் எழுத்துக்களில், 36,000 பகல் பொழுதுகளில், சூரியனில், நம் உடலின் இடது பாகத்து நாடிகளில் - இப்படி ஒவ்வொருவரிடமும் ஸ்ரீஹரி 36,000 ஸ்ரீரூபங்களில் வியாபித்திருக்கிறார். மெய் எழுத்துக்களில் இருக்கும் பெண் ரூபங்கள், உயிர் எழுத்துக்களில் இருக்கும் ஆண் ரூபங்களுடன் சேரும்போது, பகல்களில் இருக்கும் பெண் ரூபங்கள், இரவுகளில் இருக்கும் ஆண் ரூபங்களுடன் சேரும்போது, இடது பாகத்தில் இருக்கும் பெண் ரூபங்கள், வலது பாகத்தில் இருக்கும் ஆண் ரூபங்களுடன் சேரும்போது, ஸ்ரீஹரி அவனது லீலாவினோதங்கள் மூலம் அங்கு இருக்கிறார்.

**கே: மிகவும் ஆச்சரியமான விஷயங்கள். இவை எந்த கிரந்தங்களில் இருக்கின்றன?**

ப: ஸ்ரீஹரியின் புருஷ ரூபங்கள் கணக்கற்றவையாக இருப்பதைப் போல, ஸ்ரீஹரியின் பெண் ரூபங்களும் கணக்கற்றவையாக இருக்கின்றன. இவற்றை விளக்குவதற்காகவே, ‘அர்தநாராயணீ’ என்று ஒரு தத்வகிரந்தம் இருக்கிறது. இந்த கிரந்தத்தை ஸ்ரீமதாசார்யர், ஐதரேய பாஷ்யத்தில் மேற்கோள் காட்டியிருக்கிறார்.

**கே: அப்படியென்றால், ‘நைனம் வாசா ஸ்த்ரீயம் ப்ருவன்’ என்னும் ஸ்லோகத்தில் ‘ஸ்ரீஹரி பெண்ணும் அல்லன்; ஆணும் அல்லன்’ என்று சொல்லியிருக்கார்கள் அல்லவா? ஸ்ரீஹரிக்கு எதற்கு பாலினம்?**

ப: ஸ்ரீஹரி வெறும் ஆண் மட்டும். என்றைக்கும் அவன் ஆண் மட்டுமே. பெண் ரூபங்கள் இருக்கின்றன அவ்வளவே. தற்போது இருக்கும் ஆண், பெண்களிடமிருந்து வேறுபட்டவன் என்பது மட்டுமே இந்த ஸ்லோகத்தின் பொருள். அவர் பெண்களுக்கு பெண். ஆண்களுக்கு ஆண்.

**கே: மூன்றாம் பாலினத்தவர்க்கு?**

ப: இந்த கேள்விக்கு ஸ்ரீமதாசார்யர், ஐதரேய பாஷ்யத்தில் பதில் கொடுத்திருக்கிறார். 'ந ச நபும்சகரூபம் பகவத: குத்ரசிதுக்தம் ப்ரஸித்தமேவ ச ரூபத்வயம்'. ஸ்ரீஹரிக்கு மூன்றாம் பாலினம் எங்கும் சொல்லப்படவில்லை. ஆண் மற்றும் பெண் ரூபங்கள் மட்டுமே சாஸ்திர கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வரூபத்தில் நபும்சகனே இல்லாதிருக்கும்போது நபும்ஸக பிம்பரூபி இருக்கும் சாத்தியமே இல்லையே.

**கே: ஸ்ரீஹரியின் பெண் ரூபங்கள் எவ்வளவு இருக்கிறது?**

ப: தாத்பர்ய நிர்ணயத்தில் இரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறதைப் போல - 'ஸ்த்ரீரூபோ ஹயஷீர்ஷாவான் ததைவ படவாவக்த்ர:'- படவாவக்த்ர என்னும் பெண் ரூபம் உள்ளது. இதையே 'பெண் ரூபி ஹயக்ரீவ' என்று சிலர் சொல்கிறார்கள். இந்த விஷயம் இன்னும் ஆராயப்பட வேண்டும்.

**கே: 'எடவா / படவா' என்னும் சொல்லிற்கு பெண்-குதிரை என்னும் பொருள் உண்டு. ஆகையால் இது குதிரையின் ரூபமாக இருக்கலாம் அல்லவா?**

ப: ஆம். சாந்தோக்ய உபநிஷத்தில் - 'வாசி சம்ஸ்தஷ்ச ஸ்த்ரீரூபோ ஹயஷேர்ஷக:' என்று சொல்லியிருப்பதைப்போல், ஸ்ரீஹரி பெண் ஹயக்ரீவ ருபத்தில் வாக்-அபிமானினியாக நிலைத்திருக்கிறார். இதையே 'படவாவக்த்ர' என்று சொல்லலாம்.

**கே: 'வடவாவக்த்ர' என்பதற்கு கடலில் இருக்கும் நெருப்பில் நிலைத்திருக்கும் ரூபம் என்று சிலர் சொல்கிறார்களே?**

ப: கடலில் இருக்கும் நெருப்பில், நரசிம்மரும் நிலைத்திருக்கிறார் என்றும் சிலர் சொல்கிறார்கள். 'நாராயணோ லோகஹிதார்தம் வடமுகோ நாம பரமர்ஷி: பபூவ' என்னும் சாந்திபர்வத்தின் வாக்கியமே இதற்கு ஆதாரம். ஆகையால், ஸ்ரீஹரியின் வடவாவக்த்ர என்னும் புருஷரூபமும் இருக்கிறது. பெண்ரூபமும் இருக்கிறது என்று தெரியவேண்டும். அதுமட்டுமல்லாமல், காயத்ரி, ப்ருதிவி ஆகிய பெண்ரூபங்களும் இருக்கின்றன.

**கே: ஸ்ரீஹரியின் பெண் ரூபங்களை பூஜிக்கும், வணங்கும் வழக்கம் நம்மில் இல்லையே?**

ப: தேவரபூஜையின் துவக்கத்தில், அனைவரும் ஸ்ரீஹரியின் எட்டு பெண்ரூபங்களை வணங்குகிறார்கள். மற்றும் இதயகமலத்தில் அதையே வணங்குகிறார்கள்.

**கே: அந்த ரூபங்களின் பெயர்கள் என்ன? இதைப்பற்றி கேள்விப்பட்ட்தே இல்லையே?**

ப: இதயக் கமலத்தில் எட்டு தளம் கொண்ட தாமரை உள்ளது. ஒவ்வொரு தளத்திலும், ஸ்ரீஹரி ஒவ்வொரு பெண் ரூபத்தில் நிலைத்து, பிம்பரூபத்திற்கு ஒவ்வொரு விதமான சேவையை தானே செய்துகொள்கிறான்.

யோகா - என்னும் ரூபத்தினால் பாடுவது
ப்ரஹ்வீ - என்னும் ரூபத்தினால் நடனமாடுவது
ஸத்யா - என்னும் ரூபத்தினால் வாத்தியங்களை வாசிப்பது
ஈஷானா - என்னும் ரூபத்தினால் ஸ்தோத்திரங்களைச் சொல்வது
விமலா - என்னும் ரூபத்தினால் குடை பிடிப்பது
உத்கர்ஷிணி - என்னும் ரூபத்தினால் காற்று வீசுவது
ஞானா - என்னும் ரூபத்தினால் விசிறி வீசுவது
க்ரியா - என்னும் ரூபத்தினால் கண்ணாடி பிடிப்பது
அனுக்ரஹா - என்னும் ரூபத்தினால் அனைத்து சேவைகளையும் சமர்ப்பணம் செய்வது.

இவற்றை அனைவரும் 'பீடபூஜை' சமயத்தில் நினைத்தலே வேண்டும்.

**கே: ஸ்ரீஹரியின் எந்த பெண் ரூபத்தினைப் பார்த்து, ருத்ரர் மயங்கினார்?**

ப: ஸ்ரீஹரியின் மோகினி ரூபத்தைக் காண ருத்ரர் விருப்பப்பட்டார். ஸ்ரீஹரி, ஒரு அழகிய பெண் வடிவத்தில் தோட்டத்தில் காண்பித்துக் கொண்டார். அருகிலிருந்த பார்வதியையும் மறந்து, ருத்ரர் அந்த பெண் ரூபத்தைக் கண்டு மயங்கினார். உடனே ஸ்ரீஹரி ஆணாக மாறியதைக் கண்டு திடுக்கிட்டார்.

**கே: 'ஹரிஹர்புத்ர ஐயப்பா' என்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில்தான் ஐயப்பன் பிறந்தானா?**

ப: இதற்கு எந்த வித சாஸ்திர ஆதாரங்களும் இல்லை. மோகினியின் ரூபத்தைக் கண்டு ருத்ரருக்கு, வீர்யஸ்கலிதம் ஆயிற்று. அந்த வீர்யம் விழுந்த இடங்களிலெல்லாம் சிவலிங்கங்கள் தோன்றின. அவை விழுந்த இடங்கள் அனைத்தும் சிவக்ஷேத்ரங்கள் ஆயின என்று சாஸ்திரங்களில் உள்ளது. அந்த இடங்களில் தங்கம், வெள்ளி ஆகிய உலோகங்கள் நிறந்திருந்திருந்தன என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: மோகினியின் கதையைச் சொல்லுங்கள்.**

ப: கடையப்பட்ட பாற்கடலிலிருந்து காமதேனு, உச்சைஸ்ரவஸ், ஐராவத, பாரிஜாத, அப்ஸரஸ் ஆகியோர் வந்தனர். சாக்ஷாத் மகாலட்சுமியும் அதிலிருந்து தோன்றினாள். இறுதியில், அமிர்த கலசத்தினை கையில் ஏந்தி, தன்வந்திரி பாற்கடலிலிருந்து தோன்றினார்.

அவரிடமிருந்து கலசத்தை அசுரர்கள் பறித்துக்கொண்டனர். ஸ்ரீஹரி தேவர்களை சமாதானப்படுத்தினார். உடனே மோகினி அவதாரத்தை எடுத்தார். மோகினியின் அழகினைக் கண்டு மயங்கிய அசுரர்கள், அமிர்தத்திற்காக சண்டை போடுவதை விட்டு, மோகினியின் பின் சுற்றிவந்தனர். அமிர்தகலசத்தை மோகினியின் கைகளிலேயே கொடுத்தனர். 'நீ என்ன சொல்கிறாயோ அதற்கு எங்களின் பரிபூர்ண சம்மதம் இருக்கிறது' என்று அவளுக்கு வாக்கு கொடுத்தனர்.

தேவர்கள், புத்தாடை அணிந்து, ஹோமங்களை வளர்த்து, கோ-பிராமணர்களுக்கு தானங்களைக் கொடுத்து, புண்யாஹவசனங்களை செய்து, அலங்காரங்களைச் செய்துகொண்டு, கிழக்கு நோக்கி போடப்பட்டிருந்த தர்ப்பாசனத்தின் மேல், அமிர்தத்தைக் குடிப்பதற்காக அமர்ந்தனர்.

அழகான மோகினி, அமிர்தகலசத்தை ஏந்தியவாறு மண்டபத்தில் நுழைந்தாள். அசுரர்களைப் பார்த்து புன்னகை புரிந்தவாறு, இந்த அமிர்தத்தை அசுரர்களுக்கு வழங்கினால், பாம்பிற்கு பால் வார்த்ததைப் போல ஆகிவிடும் என்று தெரிந்து, தூரத்தில் அமர்ந்திருந்த தேவர்களுக்கு அமிர்தத்தை பகிர்ந்தளிக்கத் துவங்கினாள். நடுநடுவே அசுரர்களிடம் வந்து, அவர்களிடம் மயக்கும் வார்த்தைகளைப் பேசி, அமிர்தத்தைக் கொடுக்காமல் ஏமாற்றினாள்.

அமிர்தத்தை முதலில் தமக்குக் கொடுக்குமாறு அசுரர்கள் வேண்டினாலும், மோகினியின் நாடகத்தில் மயங்கியதால், தேவர்களுக்கு கொடுத்ததில் சண்டை போடவில்லை. அசுரர்களில் ராகு மட்டும், தேவர்களைப் போல் வேடமிட்டு, தேவர்களின் வரிசையில் வந்து அமர்ந்து, அமிர்தத்தைப் பெற்று குடித்துவிட்டான். இதனை சந்திர சூரியர்கள் மோகினிக்கு தெரியப்படுத்தினர். உடனே மோகினி, ஸ்ரீமகாவிஷ்ணுவின் ரூபத்தை எடுத்து, ராகுவின் தலையைக் கொய்தார். அந்தத் தலை, ராகு கேது என்று இரு கிரகங்களுக்கும் பொதுவானதாயிற்று. முண்டமானது சுத்தோதகரின் கடலில் விழுந்தது. அமிர்தத்தைக் குடித்ததால், அந்த முண்டபாகம் இன்றும் பாழாகாமல் இருக்கிறது. இந்த ராகு வேறு யாரும் இல்லை. பிரகலாதனின் சகோதரியான சிம்ஹிகையின் மகனே ஆவான்.

இப்படியாக ஸ்ரீஹரி, மோகினி அவதாரத்தை எடுத்து, அமிர்தத்தை தேவர்களுக்குக் கொடுத்து, அவர்களை அமரர்களாக ஆக்கி, அசுரர்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்காமல் ஏமாற்றி, பின் மஹாவிஷ்ணுவின் ரூபத்தை எடுத்து கருடவாகனத்தில் ஏறி புறப்பட்டார். இந்த மோகினி, நம் அனைவரின் பேராசைகளைக் குறைத்து, அமிர்தமயமான மோட்சத்தைக் கொடுத்து அருள்புரியட்டும் என்று வேண்டுவோமாக.

**கே: மோகினி அவதாரத்தில் ஸ்ரீஹரி என்ன செய்தார்?**

ப: தன்வந்திரியே மோகினியாக வந்தார். மோகினி நடனமாடிக் கொண்டிருக்கிறாள். தன் வலது கை விரல்களால் நிலவைக் காட்டியவாறு நடனமாடி, மற்றொரு கையால் தோளினை ஆட்டியவாறு, ஒரு குதிகாலால் மணலை அளந்தவாறு, இன்னொரு முழங்காலை மென்மையாக ஆட்டியவாறு நின்றாள். அசுரர்களுக்கு ஆசை காட்டி, எப்படியாவது அவளை கட்டி அணைக்கவேண்டும் என்ற ஆசையை தூண்டுமாறு, அவர்கள் அனைவரையும் பைத்தியம் பிடிக்கச் செய்தாள். அவர்கள் தன் கையைப் பிடிக்க வந்தாலும் பிடிகொடுக்காமல், தொட வந்தாலும் ஏமாற்றி, அசுரர்களை மாயத்தில் சிக்கவைத்து, அமிர்தத்தை தேவர்களுக்கு வழங்கினாள். மோகினியின் இத்தகைய அபாரமான உதவியின் கடனை தீர்ப்பதற்கு எந்த தேவர்களால் முடியும்?

நம்மில் இருக்கும் பேராசையை மண்ணைக் கவ்வச் செய்து, இந்த மோகினியானவள், நமக்கு அமிர்த தத்வத்தை ஊட்டி நமக்கு அருளட்டும். ஸ்ரீஹரி பாற்கடலை கடையும் நேரத்தில் மோகினியாக அவதரித்தார். ருத்ரதேவரின் ஆசைக்கிணங்க இன்னொரு முறையும் மோகினியாக காண்பித்துக் கொண்டார். சுகாசார்யரை சோதிப்பதற்காக இன்னொரு முறையும் மோகினியாக வந்தார். இது மட்டுமல்லாமல், ஹயக்ரீவ என்னும் பெண் ரூபத்தையும் எடுத்தார்.

மேலும், உபநிஷத்கள் சொல்வதைப்போல 36,000 பெண் ரூபங்களிலும், 36,000 ஆண் ரூபங்களிலும் நம் உடலிலேயே வசிக்கிறார். ஆசார அனுஷ்டானங்களை பின்பற்றுபவரை நாம் பூஜித்து வணங்கினால், ஸ்ரீஹரியின் 36,000 ரூபங்களையும் பூஜித்ததாக ஆகிறது என்ற நம்பிக்கை நம்மில் வளர்ந்து வந்துள்ளது. இதற்காகவே, ஸ்ரீஹரியின் புருஷ ரூபத்தை நாம் பூஜிப்பதுபோல, அவரின் பெண்ரூபங்களையும் பூஜித்து தன்யராவோமாக.

**கே: மோகினி அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: இதயம் என்னும் கடலில், வேதாந்தம் என்னும் மலைக்கு, பிரம்மசூத்ர என்னும் வாசுகியைக் கட்டி, பூர்வபக்ஷ சித்தாந்தம் என்னும் அசுரர் மற்றும் தேவர்கள் கடைந்தபோது, தத்வஞானம் என்னும் அமிர்தம் உதயமாகின்றது. அப்படிக் கிடைத்த தத்வஞானத்தை, ஸ்ரீஹரியை விட்டு வேறு எங்காவது பயன்படுத்தினால், அது அசுரர்களுக்கு உதவியதாக ஆகின்றது. ஸ்ரீஹரி நமக்கு அருளிய தத்வஞானத்தை, நம் வாழ்க்கையில் பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்றால், ஸ்ரீஹரி மோகினியாக நம் இதயத்தில் அவதரித்து, பேராசை என்னும் அசுரரைக் கொன்று, நமக்கு அந்த தத்வஞான அமிர்தத்தைக் கொடுக்கவேண்டும். அதற்காக நாம் அனைவரும் மோகினியை சரணடைவோமாக.

***

# 24. ஸ்ரீவேதவியாஸர்

**கேள்வி: சத்யவதியின் பிறப்பு மிகவும் விசித்திரமானதுதானே?**

பதில்: 'உபரிசர' என்று ஒரு ராஜன் இருந்தார். இவருக்கு வேதங்களைப் படிப்பது, தான தர்மங்களைச் செய்வது ஆகியவற்றில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. இவரது மனைவி பெயர் கிரிகெ. ஒரு முறை கிரிகை, தன் கணவரை தன்னுடன் உறவு கொள்ள அழைத்தாள். அதே சமயத்தில், அந்த ராஜனின் தந்தை, மான் மாமிசத்துடன் உணவு தயார் செய்யுங்கள் என்று ஆணையிட்டார். தந்தையின் ஆணையை மீறக்கூடாதென்று, உபரிசர ராஜன் தன் மனைவியின் வேண்டுகோளையும் மீறி, மான் வேட்டையாடுவதற்கு காட்டிற்குப் போனார்.

அழகான பசுமையான் காட்டில், ஒவ்வொரு நொடியும் தன் மனைவியை நினைத்து மருகினார் ராஜன். குயில்கள் தங்கள் அழகான குரல்களில் பாடியவாறு, பல்வேறு பூக்களிலிருந்து நறுமணத்தை எடுத்து நாற்புறமும் வீசும் தென்றல் காற்றுடன் இருந்த அந்த சூழ்நிலையில் ராஜன் தன் மனைவியின் இன்மையை நினைத்தார். ராஜனின் வீர்யம் வெளியாயிற்று. தன் வீர்யம் வீணாகக்கூடாதென்று, அதனை எப்படியாவது தன் மனைவியிடம் சேர்ப்பிக்கவேண்டும் என்று நினைத்தார். அந்த வீர்யத்தை ஒரு இலையில் சேகரித்து, ஒரு பருந்திடம் கொடுக்கவேண்டி, அந்தப் பறவையை அழைத்தார்.

'என் பிரியத்திற்குரிய பறவையே. எனக்கு மகிழ்ச்சியைத் தருவாயாக. என்னுடைய இந்த வீர்யத்தைக் கொண்டுபோய், அரண்மனையில் இருக்கும் என் மனைவியான கிரிகெவிடம் கொடுத்துவிடு. இதைக் கொடுப்பதற்கு அவளுக்கு இதுவே தக்க காலம்'.

ராஜன் இப்படிக் கூறியதும், அப்பருந்து அந்த வீர்யத்தை தன் வாயில் கவ்வி எடுத்துக்கொண்டு பறந்தது. எதையோ எடுத்துக்கொண்டு இப்பருந்து இப்படி வேகத்துடன் பறக்கிறதே என்று எண்ணிய இன்னொரு பருந்து, ஒருவேளை இது மாமிசமாக இருக்குமோ என்று சந்தேகித்தது. உடனே எதிரில் வந்து அதன் வழியை மறைத்தது. ராஜனின் வேண்டுகோளை ஏற்று பறந்துகொண்டிருந்த பறவை, தன் எதிரில் வந்த பறவையைத் தாக்குவதற்கு தயாரானபோது, அதற்குத் தெரியாமலேயே அந்த வீர்யமானது, கீழே ஓடிக்கொண்டிருந்த யமுனா நதியில் விழுந்தது.

அத்ரிகே என்னும் அப்சரஸானவள், பிரம்மதேவனின் சாபத்தில் ஒரு மீனாக மாறி, அந்த யமுனா நதியில் பற்பல ஆண்டுகளாக நீந்திக்கொண்டிருந்தாள். இந்த வீர்யத்துக்காகவே காத்திருந்ததைப் போல, அது நதியில் விழுந்ததும், நீந்திப்போய், அத்ரிகே ஆனவள் அதை விழுங்கி உடனே கர்ப்பவதி ஆனாள். ஒன்பது மாதங்கள்

ஆனபோது, மீனின் ரூபத்தில் இருந்த கர்ப்பிணியான அத்ரிகே, ஒரு மீனவனின் வலையில் மாட்டினாள்.

மீனின் விசித்திரமான தோற்றத்தைக் கண்ட மீனவன் ஆச்சரியமடைந்து, அதை மிகவும் பத்திரமாக எடுத்துக் கொண்டு போனான். வளர்பிறை சந்திரனைப்போல் அழகான, இரு குழந்தைகள் அந்த மீனிலிருந்து வெளிவந்தன. பிரம்மனின் சாபம் நீங்கிய அப்சரஸ், அந்த இரு குழந்தைகளையும் ஆசிர்வத்து, பின் ஸ்வர்க்க லோகத்திற்குப் புறப்பட்டாள். 'உனக்கு மனித வடிவில் குழந்தைகள் பிறந்தவுடன் உன் சாபம் விலகும்' என்று முன்னர் பிரம்மதேவர் சொல்லியிருந்தார்.

இந்த இரு குழந்தைகளும் மிகவும் அசாதாரணமானவை என்று எண்ணிய அந்த மீனவன், அக்குழந்தைகளை ராஜனிடம் எடுத்துச் சென்று, அவை பிறந்த கதையினை சொன்னான். ராஜன், ஆண் குழந்தையை மட்டும் தான் வைத்துக்கொண்டு, பெண் குழந்தையை அம்மீனவனுக்கே கொடுத்து வளர்த்து வரச் சொன்னான்.

அந்த ஆண்குழந்தை பின்னர் 'மத்ஸ்யராஜன்' என்று புகழ்பெற்றது. மீனவனின் வீட்டில் வளர்ந்த பெண் குழந்தை 'மத்ஸ்யகந்தி' என்று பெயர்பெற்றது. அவர்கள் அவளை 'சத்யவதி' என்று பெயரிட்டு அழைத்தனர். இவளே பின்னர் வேதவியாஸதேவரின் தாய் ஆனாள்.

**கே: பராசரர் - சத்யவதி. இவர்களின் சந்திப்பு எப்படி நடந்தது?**

ப: ஒருமுறை தீர்த்தயாத்திரைக்காக புறப்பட்ட பராசரர், யமுனா நதிக்கரைக்கு வந்தார். அப்போது அங்கு தோனியைப் பிடித்தவாறு நின்றிருந்த, மிகவும் அழகான கண்களையுடைய, சத்யவதியைக் கண்டு ஆசை கொண்டார். தம் ஞானதிருஷ்டியில், முன்னர் நடைபெறப்போகும் வேதவியாஸரின் பிறப்பு மற்றும் சிறப்புகளைக் கண்டார்.

**கே: அவர்கள் இருவரும் அப்போது என்ன பேசிக்கொண்டனர்?**

ப:
**பராசர**: ஹே அழகானவளே. இந்தப் படகினை செலுத்தும் படகோட்டி எங்கே?

**மத்ஸ்யகந்தி**: நான் தாசராஜனின் மகள். இந்தப் படகினை நானே செலுத்தப் போகிறேன். ஆயிரம் பேர் கொள்ளும் பெரிய படகினையும்கூட செலுத்தும் வல்லமை உடையவள் நான்.

**பராசர**: ஹே வசுபுத்ரியே. படகினை செலுத்தத் துவங்கு. என் கமண்டலமானது 500 மக்களின் எடையைக் கொண்டதாகும். நானும் 500 மக்களின் எடையைக் கொண்டவன். மொத்தம் 1000 பேர் இருக்கிறார்கள் என்றாயிற்று. படகினை விரைவாகச் செலுத்து.

அப்படியே ஆகட்டும் என்று கூறியவாறு, மத்ஸ்யகந்தி, படகினை செலுத்தத் துவங்கினாள். படகினை செலுத்தும் மத்ஸ்யகந்தியின் அழகில் மயங்கிய பராசரர், அவளை அடைய வேண்டும் என்று எண்ணினார்.

**மத்ஸ்யகந்தி**: வணக்கத்துக்குரியவரே. நான் என்றைக்கும் என் தந்தையில் கட்டுப்பாட்டில் இருக்கும் கன்னிப்பெண். உங்களைச் சேர்ந்து, என் கன்னித்தன்மையை நான் இழந்தால், பிறகு எந்த முகத்தைக்கொண்டு என் தந்தையிடம் போவேன்? பிறகு என் வாழ்க்கை என்ன ஆகும்?

**பராசர**: அழகானவளே. எனக்கு நீ மகிழ்ச்சி அளித்தாலும், பிறகும் நீ உன் கன்னித்தன்மையை இழக்காமல் இருப்பாய். அதைப் பற்றிய கவலை வேண்டாம். இன்று வரை எப்படி இருந்தாயோ, அப்படியே பிறகும் தொடர்வாய். உனக்கு மிகவும் பிடித்தவாறு வேறு ஏதாவது ஒரு வரத்தைக் கேள்.

**மத்ஸ்யகந்தி**: மரியாதைக்குரிவரே. மீனின் வாசனையால் நிரம்பிய என் உடல் மிகவும் துர்நாற்றம் அடிக்கிறது. அதனை சீராக்கி, நறுமணம் வருமாறு செய்யுங்கள்.

**பராசர**: அப்படியே ஆகட்டும். இன்றிலிருந்து உனக்கு 'யோஜனகந்தி' என்று பெயர் உண்டாகட்டும்.

**கே: இதற்குப் பிறகு வேதவியாசர் எப்படி தோன்றினார்?**

ப: சத்யவதியின் மனதை மாற்றிய பராசரர், வேதவியாசரின் அவதாரம் என்னும் உத்தம காரியத்திற்காக தியானம் செய்யத் துவங்கினார். மிகவும் உத்தமளான, தபஸ்வினியான, அழகான நறுமணம் கொண்ட உடலைக் கொண்ட சத்யவதியுடன் கூடினார்.

அந்த கணத்திலேயே, யமுனா நதிக்கு நடுவில் ஒரு தீவில், மகா சாமர்த்தியசாலியான நாராயணன், பராசரரின் மகனாக அவதரித்தார்.

**கே: அந்த மகனை எப்படி வளர்த்தனர்?**

ப:
ஜாதமாத்ர: ஸ வவ்ருதே ஸப்தவர்ஷோடபவத் ததா ||

பிறந்த உடனேயே, வேதவியாசதேவர் ஏழு வயது பாலகனாக மாறினார்.

தோன்றியவுடனேயே ஏழு வயதான வேதவியாசர், தந்தையிடமிருந்து உபநயன சம்ஸ்காரத்தை, இந்த உலகமோகனத்திற்காக செய்துகொண்டார். தன் திவ்யஸ்வரூபத்தைப் பற்றி தன் தந்தைக்கு உபதேசித்தார். தாய்-தந்தையர்

எப்போது தன்னை நினைக்கிறார்களோ, அந்த நொடியிலேயே தான் அவர்கள் முன் காட்சி தருவேன் என்று வரம் அளித்தார்.

**கே: வேதவியாசரின் வெவ்வேறு பெயர்களுக்கான காரணங்கள்?**

ப:
த்வீபாயன - யமுனா நதியில் ஒரு தீவினில் பிறந்ததால், இவருக்கு த்வீபாயன என்று பெயர் வந்தது.
கிருஷ்ண த்வையாபன - நீல வண்ண உடலைக் கொண்டிருந்ததால், இவரை கிருஷ்ண த்வைபாயனர் என்று அழைத்தனர்.
வேதவியாசர் - வேதங்களை நான்கு பாகங்களாகப் பிரித்ததால், இவர் வேதவியாசர் என்று அழைக்கப்பட்டார்.
பாதராயண - பதரியில் நிலைத்திருந்ததால், இவர் பாதராயணர் என்று அழைக்கப்பட்டார்.

**கே: இவரது நிஜமான பெயர் வேதவியாசர்தானே?**

ப: வியாச - என்பது வேதங்களைப் பிரிப்பவரின் பெயரே தவிர, அது கிருஷ்ண த்வைபாயனரின் நிஜமான பெயர் அல்ல. வெவ்வேறு மகாயுகங்களில், வெவ்வேறு ஆட்கள், வேதவியாசர் ஆகின்றனர். இந்த கல்பத்தில், கிருஷ்ண த்வைபாயனர், வேதவியாசர் ஆகியிருக்கிறார். முந்தைய கல்பத்தில் அஸ்வத்தாமர், வேதவியாசர் ஆகிறார்.

**கே: அப்படியென்றால், வேதவியாசர் எவ்வளவு பேர்?**

மொத்தம் 27 வியாசர்கள் இருக்கின்றனர்.

1. ஸ்வயம்பு
2. ப்ரஜாவதி
3. உஷன
4. பிரம்மஸ்வதி
5. ஸவித்ரு
6. ம்ருத்யு
7. மகவ
8. வசிஷ்ட
9. ஸாரஸ்வத
10. த்ரிதாம
11. த்ரிஷிக்
12. பாரத்வாஜ
13. அந்தரிக்ஷ
14. தர்ம
15. த்ரையாகுண

16. தனஜ்சய
17. மேதாதிதி
18. ப்ரதி
19. அத்ரி
20. கௌதம
21. உத்தம
22. வேனவாஜப்ரஜாக்ஷ (வேனராஜஷ்ரவஸ்)
23. சோமஸுஷ்மாபன
24. த்ருணபிந்து
25. பார்கவ
26. சக்தி
27. ஜாதுகர்ண.

**கே: உபநயனம் ஆனபிறகு வியாஸர் என்ன செய்தார்?**

ப: வேதவியாஸர், மேரு பர்வதத்திற்குச் சென்றார். பிரம்மாதி தேவர்கள் அனைவரும் அவரைப் பின்தொடர்ந்தனர். ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் வேதங்களை எப்படி காப்பாற்றினாரோ, அதைப்போலவே, அஞ்ஞானம் மற்றும் தவறான ஞானங்களால் மாசுபட்ட வேதங்களை மறுபடி பாகம் பிரித்து, தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் உபதேசித்தார்.

**கே: வேதங்களை எப்படி பாகம் பிரித்தார்?**

ப: ரிக்வேதத்தை 24 பிரிவுகளாக, யஜுர்வேதத்தை 101 பிரிவுகளாக, சாமவேதத்தை 1000 பிரிவுகளாக, அதர்வவேதத்தை 12 பிரிவுகளாகப் பிரித்தார்.

**கே: பிரம்மமீமாம்ச சாஸ்திரத்தை இயற்றுவதற்கு என்ன காரணம்?**

ப: அனைத்து வேதங்களையும், பிரித்து உபதேசம் செய்தபிறகு, அந்த வேதங்களின் பொருளை விளக்கும், பிரம்மமீமாம்ச சாஸ்திரத்தை இயற்றினார். 562 சூத்திரங்களாலான பிரம்மசூத்திரங்கள், தத்வஞானத்தைப் பெறுவதற்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றன. ஸ்ரீஹரியைப் பற்றி ‘இதமித்தம்’ என்னும் விஷயத்தை விளக்குகின்றன. நிர்ணயசாஸ்திரம் என்றே புகழ்பெற்ற பிரம்மமீமாம்ச சாஸ்திரமானது, விஷ்ணுவை ஆராதிக்கின்றது. அது வேதங்களைவிட உயர்ந்த நிலையில் இருப்பதால், பரவித்யை என்று அழைக்கப்பட்டது.

**கே: மகாபாரதத்தின் சிறப்பு என்ன?**

ப: அனைத்து சாஸ்திரங்களுக்கும் உதாரணமாக, வேதங்களைவிட உத்தமமான ‘மகாபாரதம்’ என்னும் கிரந்தத்தை இயற்றினார். பிரம்ம ருத்ரர் முதலான தேவர்களுக்கு தானே அதை உபதேசித்தார். கௌரவர்கள் மற்றும் பாண்டவரகள்

பிறப்பதற்கு முன்பே இந்த மகாபாரத்தை இயற்றி, உபதேசித்தார் என்பது இன்றைக்கும் அனைவருக்கும் ஆச்சரியம் தரக்கூடிய விஷயம். இந்த மகாபாரதமும் நிர்ணய சாஸ்திரம் என்றே அழைக்கப்படுகிறது.

**கே: இவ்வளவு ஞானபிரசாரம் செய்ததால், கலிதோஷம் மற்றும் அஞ்ஞானம் மறைந்தது அல்லவா?**

ப: வியாசர் தம் முக-கமலத்திலிருந்து வெளிவந்த ஞானத்தை, ருத்ரர் முதலான தேவர்களுக்கு உபதேசித்து, அவர்களின் மனங்களில் நிலைத்திருக்கும் கலியின் தலையை கத்தரித்தார். அனைத்து தேவதைகளுக்கும் ஞானாம்ருதத்தை குடிக்கச் செய்தார். ஆனால், சாத்விக மனிதர்களின் மனதில் இருக்கும் கலி மட்டும் இன்னும் கொல்லப்படாமல் அப்படியே இருந்துவிட்டார். மனுஷ்யோத்தமர்களின் மனதில் இருக்கும் கலியை நாசம் செய்வதற்கு, வேதவியாசதேவர் தீர்மானிக்கிறார்.

காலப்போக்கில் மனிதனின் புத்தி, ஆயுள், செய்யும் கர்மங்கள் என அனைத்தும் குறைந்துகொண்டே போவதை அவர் கவனித்தார். குறைந்தபட்சம் வேத அத்யயனம் செய்வது ஒருவரின் கடமை என்றார். பாகவதம் முதலான புராணங்களை இயற்றி, மனிதர்களுக்கு வழங்கினார்.

உலகத்தின் அனைத்து பாகங்களுக்கும் வேதவியாசதேவர் பயணித்து, அஞ்ஞானத்தை நாசம் செய்யும் முயற்சியில் இறங்கினார்.

**கே: ஒரு கிருமியின் உதவியுடன் அரசாட்சி செய்த சூழ்நிலை என்ன?**

ப: ஒரு முறை வழியில் ஒரு பூச்சி சென்றுகொண்டிருந்தது. அதனை தடுத்து நிறுத்தி, 'ஏன் இவ்வளவு வேகமாகப் போகிறாய்?' என்று வியாசர் கேட்டார். மேலும், 'ஹே பூச்சியே, இந்த உன் உடலை விட்டுவிடு. அடுத்த பிறவியில் உன்னை பெரிய ராஜனாக மாற்றுகிறேன்' என்றார்.

வேதவியாசதேவரின் இந்தப் பேச்சுக்கு அந்தப் பூச்சி ஒப்புக்கொள்ளவில்லை. தன் பூச்சி உடலின் மேலிருந்த பிரியத்தால், அந்த உடலை விட்டுவிட அது தயாராக இல்லை. அப்போது வேதவியாசர், 'போன பிறவியில் நீ ஒரு பக்த சூத்ரனாக இருந்தாய். ஆனால் மிகவும் கருமியாக இருந்ததினால், உனக்கு இப்போது இந்த பூச்சி ஜென்மம் வந்திருக்கிறது. உன்னை இதே உடலிலிருந்தே நான் ராஜனாக மாற்றுகிறேன்' என்றார்.

வேதவியாசரின் அருளினால், அந்த பூச்சி அப்படியே ராஜனாக மாறியது. மற்ற ராஜாதிராஜர்கள் அனைவரும் வந்து அந்த பூச்சிக்கு தலைவணங்கி மரியாதை செலுத்தினர்.

**கே: அந்த பூச்சிக்கு எப்படி மோட்சத்தை வழங்கினார்?**

ப: வேதவியாசர் அந்த பூச்சியைப் பார்த்து பேசத் துவங்கினார். 'உனக்கு இந்த நொடியிலேயே மோட்சத்தைக் கொடுப்பதற்கும் நான் தயார். ஆனால், நீ பிராமண ஜென்மம் எடுத்தே மோட்சத்திற்குப் போகவேண்டும் என்று உனக்கு எழுதப்பட்டிருக்கிறது. ஆகையால், அடுத்த பிறவியில் நீ பிராமணனாகப் பிறப்பாய். அப்போது உனக்கு மோட்சம் கிடைக்கும்' என்று ஆசிர்வதித்தார்.

அந்த பூச்சிக்கு ஒரு தூய்மையான பிறவியை வேதவியாசர் அருளினார். மொத்த பூமண்டலத்தையே அந்த பூச்சி அரசாட்சி புரிந்தது. இறுதியில் அந்த உடலைத் துறந்து, பிராமணனாகப் பிறந்தது. நல்ல தத்வஞானத்தைப் பெற்று, ஹரிபாதங்களை சேர்ந்தது. இப்படி வல்லவரான வேதவியாசதேவர், பல சஜ்ஜனர்களை அவர்களின் வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து விடுதலை அளித்தார். ஸ்ரீஹரியின் லீலைகள் , தேவர்களின் கற்பனைக்கும் எட்டாத மிக அற்புதமான ஒன்று.

**கே: வேதவியாசர், ருத்ரதேவரைக் குறித்து ஏன் தவம் செய்தார்?**

ப: ருத்ரர், வேதவியாசரின் மகனாகப் பிறப்பதற்காக தவம் மேற்கொண்டார். நீயே என் மகனாகப் பிறப்பாய் என்று வேதவியாசரும் சிவனைக் குறித்து தவம் செய்தார். ஆனால், வேதவியாசர் செய்த தவம் என்பது வெறும் அசுர-மோகனத்திற்காக மட்டுமே. எந்தக்காலத்திலும் அவரிடம் குறைகளைக் கண்டுபிடிக்கக்கூடாது. ருத்ரருக்கும் வேதவியாசர், அவர் வேண்டியதைப்போல் வரம் அளித்தார்.

**கே: சுகாசார்யர் பிறந்தது எப்படி?**

ப: ஒருமுறை அரணியைக் கடைந்துகொண்டிருந்தபோது, 'க்ருதாசி' என்னும் அப்சரஸ் பிறந்து, ஒரு கிளியாக வந்தாள். அவளைக் கண்ட உடனேயே, வேதவியாசரின் வீர்யம் வெளிவந்தது. அப்போது, ருத்ரர், 'சுக' என்னும் பெயரில் அவதாரம் செய்தார்.

**கே: க்ருதாசியை மோகித்தது எப்படி நியாயமாகும்?**

ப: க்ருதாசியை வேதவியாசதேவர் மோகிக்கவில்லை. அசுர-மோகனத்திற்காகவே அவர் இத்தகைய நாடகத்தை நடத்தினார். அரணியைக் கடைந்து, சுகனை பிறக்கவைத்து, க்ருதாசியின் விருப்பத்தின் பேரிலேயே, 'சுக' என்னும் பெயர் வைத்தார். வேதவியாசருக்கு சேவை செய்வதற்காக, வாயுதேவர் தான் சுகனின் உடலில் கலந்தார். சுகனுக்கு வேதவியாசர், சர்வக்ஞத்வத்தை வழங்கினார். அனைத்து வேதங்களையும், மகாபாரதத்தையும், பாகவத மற்றும் வைஷ்ணவ புராணங்களையும் உபதேசம் செய்தார்.

**கே: வேதம் முதலான சாஸ்திரங்களை உருவாக்கியவர் யார்?**

ப:
ரிக்வேதம் - பைல
க்ருஷ்ண யஜுர்வேதம் - வைசம்பாயன
சுக்ல யஜுர்வேதம் - சூர்ய
சாம வேதம் - ஜைமினி
அதர்வ வேதம் - சுமந்து
மகாபாரதம் - வைசம்பாயன
இப்படி மேலே சொல்லப்பட்ட முனிவர்கள் அந்தந்த வேதங்களை உருவாக்குவதற்கு வேதவியாசர் அருளினார்.

**கே: மனிதர்களுக்கு யார் உபதேசம் செய்தார்?**

ப: மகனான சுகாசார்யருக்கு அனைத்து சாஸ்திரங்களையும் உபதேசித்து மனிதர்களின் உலகத்தில், கந்தர்வ லோகத்தில் அவற்றை பிரசாரம் செய்வதற்காக ஆணையிட்டார். தேவலோகத்தில் பிரசாரம் செய்வதற்கு நாரதரை அனுப்பினார்.

**கே: ரோமஹர்ஷணர் பிறந்தது எப்படி?**

ப: ஒருமுறை வேதவியாசர், மெய்சிலிர்த்து, அதிலிருந்து ரோமஹர்ஷணரை பிறப்பித்தார். அவருக்கு மகாபாரதம், புராணம், மூலராமாயணம், பஞ்சராத்ரங்கள் ஆகியவற்றை உபதேசித்து, அதன் ஞானபரம்பரையை முன்னெடுத்துச் செல்லுமாறு ஆணையிட்டார். வேதவியாசரை பூஜிக்க வேண்டி, ரோமஹர்ஷணரிடம் காமன் பிரவேசித்தான்.

**கே: தைவிமீமாம்சம் இயற்றப்பட்டது எப்போது?**

ப: சனத்குமார முதலான ரிஷிகளை த்யானயோகத்தை துவக்கச் செய்தார். ப்ருகு ரிஷிகளை கர்மயோகத்தை துவக்கச் செய்தார். ஜைமினி ரிஷிகளை கர்மமீமாம்ச சாஸ்திரத்தை துவக்கச் செய்தார்.

தைவிமீமாம்சத்தின் முதல் மற்றும் இறுதி பாகங்களை தானே இயற்றி, நடுவில் இருக்கும் பாகத்தை இயற்ற, பைல முனிவர் மற்றும் சேஷதேவருக்கு ஆணையிட்டார். இப்படி நாராயணன், வேதவியாஸ ரூபத்தில் அவதாரம் செய்து பூலோகத்தில் அனைத்து இடங்களிலும் ஞானாம்ருதத்தை பொழியச் செய்தார்.

**கே: வேதவியாஸ மந்திரத்தின் சிறப்பு என்ன?**

ப: இந்த பூலோகத்திற்கு மட்டுமல்லாமல், வேதவியாசர், அனைத்து 14 லோகங்களுக்கும் குருவானவர். வேதவியாஸதேவரின் முக-கமலமானது, மொத்த 14 லோகங்களிலிருக்கும் ஞான சமுத்திரத்தின் ஊற்றாகும். ஆகையாலேயே ‘வியாஸோச்சிஷ்டம் ஜகத்ஸர்வம்’ என்னும் வாக்கியம் பிரபலமடைந்திருக்கிறது.

14 லோகத்திற்கும் குருவான ஸ்ரீவேதவியாசர், நம் பாரதத்தில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அவதரித்து, இன்றும் மேல் பத்ரியில் ரிஷிமுனிகளுக்கு பாடம் எடுத்துக்கொண்டிருக்கிறார்.

வாழ்க்கையில் யாருக்கு மனதை ஒருமுகப்படுத்துதல், நினைவாற்றல் ஆகியன குறைவாக இருக்கிறதோ, அவர்கள் வேதவியாஸ மந்திரத்தை ஜெபித்தால், அந்தக் குறைகளிலிருந்து விடுபட்டு புகழ்பெறுவார்கள்.

**கே: வேதவியாஸ அவதாரத்திலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்ன?**

ப:
* ஒவ்வொருவரும் தாம் சந்திக்கும் அனைத்து குருகளுக்கும், மூலகுருவாக வேதவியாசர் இருக்கிறார் என்ற உணர்வு.
* அவரே நம் அனைவருக்கும் குரு.
* எந்தவொரு குருவிடமிருந்தும் உபதேசம் பெற்றாலும், அவருக்கு மரியாதை செலுத்தும்போது, அந்த குருவிற்கு உள் இருக்கும் வேதவியாஸ தேவரை மறக்காமல் நினைக்கவேண்டும்.
* ‘வேதவியாஸ’ என்னும் பெயரை எப்போதுமே நினைத்தவாறு இருக்கவேண்டும். நீங்கள் எப்பேர்ப்பட்ட ஞானியாக ஆவீர்கள் என்று, பிறகு பாருங்கள். அவருடைய சக்தி / மகிமை எப்பேர்ப்பட்டது என்று உங்களால் ஊகிக்க முடியாது.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி வேதவியாஸரை எப்படி வணங்கவேண்டும்?**

ப:
விஞ்ஞானரோசி: ப்ரதிபூரிதாந்தம் பாஹ்யாண்டகோசம் ஹரிதோபலாபம் |
தர்காபயேதம் விதிஷர்வபூர்வ கீர்வாண விஞ்ஞானத மானதோஸ்மி ||

விஞ்ஞானம் என்னும் ஒளியினால் பிரம்மாண்டத்திற்கு உள்ளே மற்றும் வெளியே நிறைந்திருப்பவரும், மரகதமணியைப் போல் தூய்மையான ஒளி உள்ளவருமான, ஞான, அபய முத்திரைகளைக் கொண்டவருமான, பிரம்ம, ருத்ர முதலானவர்களுக்கு விஞ்ஞானத்தை உபதேசித்துக் கொண்டிருப்பவருமான வேதவியாஸரை வணங்குகிறேன்.

த்யாயேச்சஷாங்க ஷதகோட்யதி சௌக்ய காந்திம்
சன்சிச்யமானம் அம்ருதோருகடை: சுரேஷை: |
வர்ணாபிமானி பிரஜேஷமுகை: ஸஹைவ
பஞ்சாஷதா ப்ரதிகிரந்தம் அசேஷவித்யா: ||

100கோடி சந்திரர்களின் ஒளியைக் காட்டிலும் அதிக ஒளியைத் தரக்கூடியவரும், அ-முதல் அனைத்து எழுத்துக்களின் அபிமானிகளான பிரம்ம, ருத்ர ஆகிய தேவர்களால், அமிர்த கலசங்களினால் அபிஷேகம் செய்யப்படுபவரும், வேதம்

முதலான அனைத்தையும் பிரம்மன் முதலானவர்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருப்பவருமான வேதவியாஸரை தியானிக்க வேண்டும்.

***

## 25. ஹம்ஸ

**கேள்வி: ஹம்ஸ என்னும் ஸ்ரீஹரியின் அவதாரத்தின் சிறப்பு என்ன?**

பதில்: ஹம்ஸ அவதாரம் மிகவும் சிறப்புடையது. அனைத்து உயிரினங்களும் உயிரோடு இருப்பதற்கு காரணமே இந்த ஹம்ஸரூபியான ஸ்ரீஹரிதான்.

**கே: ஹம்ஸ ரூபியான ஸ்ரீஹரி, ஹம்ஸ பட்சியின் வடிவில் அவதரித்தான் என்றுதானே இதன் பொருள்?**

ப: இல்லை. ஹம்ஸ என்பது ஸ்ரீஹரியின் புருஷ அவதாரமே ஆகியிருக்கிறது.

**கே: ஹம்ஸ என்னும் அவதாரத்தின் உபாஸனை, அனைவருக்கும் கட்டாயம் இல்லைதானே?**

ப: உயிரோடிருக்கும் ஒவ்வொரு பிறவியும் ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியை கட்டாயம் நினைத்தே ஆகவேண்டும். ஏனென்றால் நம் உடலில் வியாபித்திருந்து நம்மை உயிருடன் வைத்திருப்பது, இந்த ஹம்ஸ ரூபியான ஸ்ரீஹரியே ஆவார்.

**கே: முக்யபிராணர் நம்முள் இருந்து, 'ஹம்ஸஸோஹம் ஸ்வாஹா' என்று ஒரு நாளைக்கு 21,600 முறை ஜெபிக்கிறார் என்ற விஷயம் பிரபலமாக இருக்கிறது. இப்படியிருக்கும்போது, ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே வியாபித்திருக்கிறார் என்று எப்படி சொல்கிறீர்கள்?**

ப: ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே நம் மூச்சை இயக்குகிறார். இந்த மூச்சே முக்யபிராணதேவருக்கு 'ஹம்ஸஸோஹம் ஸ்வாஹா' என்று ஜெபரூபத்தில் கேட்கிறது. ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி மற்றும் முக்யபிராணர் இருவரும் நம் மூச்சை இயக்குகின்றனர், மந்திரஜெபத்தை செய்கின்றனர், 'ஹம்ஸஸோஹம் ஸ்வாஹா' என்று மிகவும் உற்சாகமாக ஜெபம் செய்கிறார்கள் என்று, உபநிஷத்களில் மிகவும் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. மற்றும் 'ஹம்ஸஸோஹம்' என்றால், 'யார் ஹம்ஸனோ, அவனே நான்' என்று கூறுவதற்கு ஹம்ஸரூபியான ஸ்ரீஹரிக்கு மட்டுமே சாத்தியம்.

**கே: எதை / யாரை நினைத்துக்கொண்டு, முக்யபிராணர் ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்து வருகிறார்?**

ப: ஹம்ஸ: = 'துக்கம் சர்வம் ஹந்தீத ஹம்ஸ:'. அனைத்து துக்கங்களையும் நாசப்படுத்துபவன் ஆகையால் ஸ்ரீஹரிக்கு ஹம்ஸ என்று பெயர். ஸோஹம் = 'அந்த ஹம்ஸனின் பிரதிபிம்பனே நான்' என்று பொருள். ஸ்வாஹா = 'வணக்கம்'

என்று பொருள். ஆக, அனைத்து துக்கங்களையும் நாசப்படுத்தும் என் பிம்பரூபியான ஸ்ரீஹரிக்கு என் வணக்கங்கள் என்று நினைத்தவாறு ஜெபிக்கிறார்.

**கே: சாத்விகரிடத்தில் மட்டும் இப்படியான ஜெபத்தை செய்கிறார் அல்லவா? மற்றும் இந்த ஸ்தூல சரீரத்தில் மட்டும் ஹம்ஸமந்திரத்தை ஜெபிக்கிறார் அல்லவா?**

ப: சாத்விக, ராஜஸ, தாமஸ என்று அனைத்து ஜீவராசிகளிடமும் இதே மந்திரத்தை ஜெபிக்கிறார். ஆனால், அவரவர்களின் யோக்கியத்தைக்கு தக்கவாறு ஜெபித்து, அவரவர்களின் சாதனைகளை நல்லபடியாக முடித்துவைக்கிறார். வெறும் ஸ்தூல சரீரத்தில் மட்டுமல்லாது, அனிருத்தசரீரம், லிங்கசரீரம் மற்றும் ஸ்வரூபசரீரத்திலும்கூட ஹம்ஸமந்திரத்தை ஜெபிக்கிறார் என்று ஹரிகதாம்ருதசாரத்தில், அதன் உரைகளில் தெரிவிக்கின்றனர்.

**கே: ஹம்ஸமந்திரத்தைப் பற்றி எங்கே சொல்லப்பட்டிருக்கிறது?**

ப: தந்த்ரசார சங்க்ரஹத்தில், மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தின் 22வது அத்தியாயத்தில் மற்றும் ஹம்ஸோபநிஷத்தில் இதைப் பற்றிய விவரங்கள் உள்ளன.

**கே: ஹம்ஸோபநிஷத் என்பது ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே உபதேசித்திருக்க வேண்டும். இதில் ஹம்ஸ மந்திரத்தைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார்?**

ப: ஆம். ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு, ஹம்ஸோபநிஷத்தை உபதேசிக்கிறார். 'அஹோராத்ரயோ ரேகவிம்சதி சஹஸ்ராணி ஷட்ஷதன்யதிகானி பவந்தி' என்று சொல்கிறார். மற்றும் மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் 'மாஸவ்ரதம் ஸார்தஷஷஷ்வாஸ காய்யைரகல்பயத்' என்று சொல்கிறார்.

**கே: மூன்றுவிதமான ஹம்ஸ மந்திரங்கள் யாவை?**

ப: 'ஹம்ஸஸ்ஸோஹம் ஸ்வாஹா' என்பது ஷடக்ஷர மந்திரம். 'ஓம் ஹம்ஸஸ்ஸோஹம் ஸ்வாஹா' என்பது சப்தாக்ஷர ஹம்ஸமந்திரம். 'ஓம் ஹ்ரீம் ஹம்ஸஸ்ஸோஹம் ஸ்வாஹா' என்பது அஷ்டாக்ஷர ஹம்ஸமந்திரம். சப்தாக்ஷர ஹம்ஸமந்திரம், பிரம்மாதி தேவர்கள் மட்டும் பயன்படுத்துமாறு உள்ளது. அஷ்டாக்ஷர மந்திரம் எங்கும் பொதுவாக வழக்கத்தில் இல்லை. ஆனால் இதை ஜெபம் செய்தால் அனைத்து புருஷார்த்தங்களும் கிடைக்கும்.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி நாம் பூஜிக்கும் ஹம்ஸரூபம் எப்படியிருக்கிறது?**

ப:
த்யாயேத் ரவீந்துகரமிந்து சஹஸ்ரலக்ஷ காந்திம்

ப்ரியாசஹிதம் ஆஸ்திதமிந்து பிம்பே ।
ஷங்காரி தோர்த்வய முதர்கமஹேந்து பிம்பாத்
சஞ்சிச்சமானம் அம்ருதேன ரமாதினாதம் ॥

மேற்கைகளில் சூரியன், சந்திரன் இருவர்களையும், கீழ்கைகளில் சங்கு, சக்கரம் இவைகளை தரித்திருப்பவரும், 1000 சந்திரர்களைக் காட்டிலும் ஒளியுள்ளவரும், ஸ்ரீலட்சுமி தேவியுடன் சந்திர மண்டலத்தின் மத்தியில் இருப்பவரும், அமிர்தத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டுக் கொண்டிருப்பவரும், ரமாதேவிக்கு தலைவனாகவும் ஆன ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

**கே: சனக முதலானவர்களுக்கு உபதேசம் செய்ய எடுத்த ஹம்ஸ என்னும் அவதாரமே வேறு; ஹம்ஸமந்திரத்தின் மூலம் நாம் பூஜிக்கும் ஹம்ஸரூபமே வேறு அல்லவா?**

ப: சனக முதலானவர்களுக்கு ஆத்மயோகத்தை உபதேசித்த ஹம்ஸரூபம் என்பது சன்யாச ரூபம். நாம் மூச்சு விடுவதற்கு ஆதிகாரணமாக இருக்கும் ரூபம் அது. ஹம்ஸமந்திரத்தின் மூலம் நாம் பூஜிப்பது ஸ்ரீலட்சுமியுடன் கூடிய கிரஹஸ்த ரூபம்.

**கே: நம் அனைத்து மத்வ மடத்தின் மூல பீடாதிபதி ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே என்று அனைவரும் சொல்கின்றனர். ஆனால், ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சன்யாச கோலத்தில் இருக்கிறார் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறதே? இவை வெறும் கற்பனைதானே?**

ப: பலர் இந்த கேள்வியை கேட்கின்றனர். ஆனால், பரமஹம்ஸ சன்யாசிகள் அனைவரும் ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியின் பரம்பரையில் வருகிறார்கள். இதில் சந்தேகமில்லை. மிகத் தெளிவான சம்பிரதாயம் இருப்பதே இதற்கு ஆதாரம்.

**கே: ஹம்ஸ சன்யாச ஆசிரமத்தை எப்போது எடுத்தார்? அவர் பின்னர் யாருக்கு சன்யாச ஆசிரமத்தைக் கொடுத்தார்?**

ப: ஸ்ரீஹரி எல்லா காலங்களிலும் எல்லா ஆசிரமங்களையும் கொண்டிருக்கிறார். அதனால், சன்யாச ஆசிரமத்தை மட்டும் தனியாக எடுப்பதற்கு அவருக்கு அவசியம் இல்லை. பிரம்மதேவருக்கு அவர் சன்யாச ஆசிரமம் வழங்கி, பின்னர் அவர் மூலமாக பரம்பரை வளர்ந்து வந்துள்ளது.

**கே: சன்யாசிகள் அனைவருக்கும் ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே மூலரூபி என்று சொல்வதற்கு என்ன காரணம்?**

ப: ஸ்ரீஹரியே அனைத்திற்கும் மூலரூபி. அந்த ஸ்ரீஹரியை விட்டு, இந்த உலகத்தில் எந்த தர்ம-கர்மங்களும் நடைபெறுவதற்கு சாத்தியமே இல்லை. எது நடந்தாலும் அதற்கு ஸ்ரீஹரியே விதையாகி இருக்கிறார். இந்த பார்வையில்

பார்த்தால், சன்யாச ஆசிரமத்திற்கு அவரே மூலபுருஷர் என்னும் சிந்தனை மிகவும் பொருள் பொதிந்ததாகும். மேலும் ஹம்ஸரூபியான அவரே, அனைத்து சன்யாசிகளுக்கும் மூலகாரணர் என்று சொல்வதற்கு முக்கியமான காரணம் ஒன்று உண்டு.

**கே: அதென்ன முக்கியமான காரணம்? அதை விளக்கமாகக் கூறினால் நம் அஞ்ஞானம் விலகுமல்லவா?**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் சனக, சனந்த, சனாதன, சனத்குமார என்னும் நால்வரை பிரம்மன் உருவாக்கினார். இவர்கள் விரக்தி கொண்டு சன்யாசிகள் ஆனார்கள். இப்படி ஸ்ருஷ்டியின் துவக்கத்திலேயே பிறந்து சன்யாசம் பெற்றவர்களுக்கு ஞான உபதேசம் அளித்த பிரம்மதேவருக்கு, ஞான உபதேசம் அளித்தவரே ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி.

**கே: தற்போது இருக்கும் சன்யாசிகள், ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியின் பரம்பரையில் வந்தவர்கள் என்பதால் இவர்களை பரமஹம்ஸ என்கிறோம் அல்லவா?**

ப: தவறு. பரமஹம்ஸ என்பது சன்யாசிகளில் ஒரு வகை. 1. குடீசக 2. பஹோதக 3. ஹம்ஸ 4. பரமஹம்ஸ என்று நான்கு வித சன்யாச தர்மங்கள் உள்ளன. ஒரே வீட்டில் / இடத்தில் பிட்சை பெற்று இருந்துவருபவர்கள் குடீசக எனப்படுவர். குடுமி, பூணூல் இவற்றை தரித்து ஏழு வீடுகளில் பிட்சை பெற்று இருந்துவருபவர்கள் பஹோதக எனப்படுவர். குடுமி, பூணூல் தரித்து, காவி உடுத்தி, தண்டத்தை ஏந்தி இருப்பவர்கள் ஹம்ஸ எனப்படுவர். குடுமி, பூணூல் இவற்றைத் துறந்து, தொடர்ந்து பயணத்தில் இருந்து, தண்டத்தை ஏந்தியிருப்பவர்களை பரமஹம்ஸ எனப்படுவர் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: அப்படியென்றால், பீடாதிபதிகளை மட்டும் பரமஹம்ஸ என்று அழைப்பது தவறு என்று ஆகிறதல்லவா?**

ப: ஆம். குடுமி, பூணூல் இல்லாமல், காவி உடுத்தி, ஹரிபக்தியுடன், தண்டத்தை ஏந்தி, எப்போதும் பயணத்தில் இருப்பவரே பரமஹம்ஸ சன்யாசி எனப்படுவர். அதுமட்டுமல்லாமல், நிஜமான சன்யாச தர்மத்தில் இருக்கும் ஒவ்வொரு சன்யாசிக்கும்கூட, ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே மூலபுருஷனாக இருக்கிறார். இதற்கு பீடாதிபதியாக இருக்கவேண்டும் என்று அவசியம் இல்லை.

**கே: ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு எந்த ஆத்மயோகத்தை உபதேசித்தாரோ, அதை பின்பற்றும் பரம்பரை நம்மிடையே இல்லை என்பது சரிதானே?**

ப: சன்யாசிகளுக்கு இருக்கவேண்டிய மிகவும் முக்கியமான தர்மமே ஆத்மயோகம். அதை ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு மிகவும் தெளிவாக உபதேசித்தார். இதில் ஆச்சரியமான விஷயம் என்னவென்றால், ஹம்ஸகுஹ்ய மந்திரத்தை தட்சபிரஜாபதி ஆனவர், விந்தியமலையில் ஜெபித்து, அங்கு ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெற்றார் என்று ஆறாம் ஸ்கந்தத்தில், ஹம்ஸகுஹ்ய மந்திரத்தின் மகிமையை சொல்லும்போது விவரிக்கப்பட்டிருக்கிறது. 'பரசித்த வ்ருத்தேர ப்ரத்யக்ஷட்வாத்' என்பதாக மற்றவர்கள் செய்யும் உபாசனைகள் நமக்குத் தெரிவதில்லை. தகுதிபெற்ற பரமஹம்ஸர்கள் தங்களுக்குக் கிடைத்த குரு உபதேசத்தின்படி உபாசனை செய்துவருகிறார்கள்.

**கே: அப்படியென்றால் யதி பரம்பரை எப்படி துவங்கியது?**

ப:

வம்ஷஸ்யாதீன் சனகாதீனுபாஸ்யே
துர்வாஸஸம் பரதீர்த்தாக்ய பிக்ஷும் ।
ஸத்யப்ரக்ஞாம் ப்ராக்ஞதீர்த்தம் முனீந்த்ரம்
பஷ்சாத் பிஷ்யா வச்யுதப்ரேக்ஷ மத்வௌ ॥

சனகாதி முனிகள், துர்வாசர், பரதீர்த்தரு, ப்ராக்ஞதீர்த்தரு, அச்யுதப்ரேக்ஷரு, மத்வர் இவர்கள் மூலபுருஷர்கள். இவர்கள் அனைவருக்கும் ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே உபதேசம் செய்திருக்கிறார். ஆரம்பத்தில் சனகாதி முனிகள், துர்வாசருக்கு சன்யாச ஆசிரமத்தை அளித்தனர் என்பதாக எங்கும் எழுத்தில் இல்லையென்றாலும் இவர்கள் இருவரும் துவக்கக்கால சன்யாசிகள் என்று தெரிந்துகொள்ளலாம். மேலும், சிரஞ்சீவிகளாக இருப்பதால், சனகாதிகள், துர்வாசர் இன்னும் சன்யாசிகளாக இருக்கின்றனர். அதே தர்மத்தைப் பின்பற்றி பரதீர்த்தர் முதலான பரம்பரை வளர்ந்து வந்துள்ளது.

**கே: ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு ஹம்ஸபட்சி ரூபத்தில் தரிசனம் அளித்தாரா?**

ப: மேலே சொன்னதைப் போல, ஸ்ரீஹரி புருஷரூபியாகவே தரிசனம் அளிக்கிறானே தவிர ஹம்ஸபட்சி ரூபத்தில் தரிசனம் அளிக்கவில்லை.

**கே: சனகாதிகளுக்கு ஹம்ஸரூபத்தில் ஸ்ரீஹரி உபதேசித்தாரா?**

ப: ஒரு முறை, த்ருடபக்தியைப் பற்றி கேள்விகள் கேட்பதற்கு சனகாதிகள், பிரம்மனிடம் சென்றனர். பின்வருமாறு கேள்வியைக் கேட்டனர்.

குணேஷ்வாவிஷதே சேதோ குணாஷ்சேதஸி ச ப்ரபோ ।
கதமன்யோன்ய ஸந்த்யாகோ முமுக்ஷோ: ஸந்திதிர்ஷத: ॥

மனது உலக / சம்சார விஷயங்களிலும், உலக / சம்சார விஷயங்கள் நம் மனதினிலும் அலைபாய்கின்றன. முமுக்ஷு (மோட்சத்தை விரும்பக்கூடியவன்) இவ்விரண்டிலிருந்தும் எப்படி தன்னை விடுதலை செய்துகொள்கிறான்? என்று நிஜமான சன்யாச தர்மத்தைப் பற்றி கேள்வி கேட்டனர்.

**கே: இந்தக் கேள்விகளுக்கு, பிரம்மதேவரே சன்யாச தர்மத்தைப் பற்றி உபதேசித்தார் அல்லவா?**

ப: இல்லை. அனைத்தையும் அவர் அறிந்திருந்தாலும், அவர் மௌனமாக இருந்துவிடுகிறார். அந்த கேள்விகளையே அசைபோட்டவாறு, ஸ்ரீஹரியை வணங்குகிறார்.

**கே: அப்போது ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி அங்கு தோன்றி பிரம்மதேவருக்கு உபதேசித்தார் அல்லவா?**

ப: ஆம். அந்த சமயத்தில் ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி அங்கே தோன்றுகிறார். பிரம்மதேவர் மிகுந்த பக்தியுடன் சாஷ்டாங்கமாக அவரை வணங்கி, சனகாதிகளுக்கு அருளவேண்டுமென்று வேண்டுகிறார்.

**கே: அப்போது சனகாதிகள் ஸ்ரீஹரியான ஹம்ஸனைக் குறித்து எப்படி பேச்சைத் துவக்கினார்கள்?**

ப: 'கோ பவான்?' நீங்கள் யார்? என்று சனகாதிகள் கேட்டனர். அப்போது ஸ்ரீஹரி, 'கோ பவான்?' என்னும் கேள்வியே அர்த்தமில்லாதது. ஏனென்றால், உங்களைவிட உயர்ந்தவரான பிரம்மதேவரே என்னை வணங்கியிருக்கும்போது, அவரைவிட நான் உயர்ந்தவான இருப்பேன் என்று உங்களுக்கு தெரிந்திருக்கவேண்டும். அதனால் உங்கள் கேள்வியில் பொருளே இல்லை. இப்படியாக அவர்களிடையே பேச்சு துவங்கியது. பிறகு ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு ஆத்மயோகத்தை உபதேசிக்கிறார். நிஜமான சன்யாச தர்மத்தின் மர்மத்தை உபதேசிக்கிறார். பகவத் தத்வத்தின் அறிமுகத்தை செய்விக்கிறார். கர்வம், கோபம் ஆகியவற்றைத் துறந்து, ஒழுக்கத்துடன் இருப்பவனே நிஜமான சன்யாசி என்ற விஷயத்தை தெரிவிக்கிறார். இப்படி ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி மிகவும் அற்புதமாக சன்யாச தர்மத்தின் உபதேசத்தை செய்கிறார்.

**கே: பிறகு என்ன ஆயிற்று?**

ப: சனகாதிகளுக்கு ஆத்மயோகத்தை உபதேசித்தபிறகு, சனகாதிகளுக்கு இருந்த சந்தேகங்கள் அனைத்தும் தீர்ந்தன. அவர்கள் அந்த ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியை பூஜித்தனர். இந்த பூஜையால் மகிழ்ந்த ஸ்ரீஹரி, அவர்களுக்கு அருளி, பிறகு அங்கிருந்து மறைந்து தன் இருப்பிடத்திற்குத் திரும்பினார்.

**கே: ஹம்ஸாவதாரத்தின் கதையை சொல்லுங்கள்.**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் சனக, சனந்த, சனாதன, சனத்குமார என்னும் நால்வரை பிரம்மன் உருவாக்கினார். இவர்கள் விரக்தி கொண்டு சன்யாசிகள் ஆனார்கள். இப்படி ஸ்ருஷ்டியின் துவக்கத்திலேயே பிறந்தவர்கள் சன்யாசிகள். பின்னர் ருத்ராதிகள் பிறந்தனர்.

சன்யாசிகளான சனகாதிகள், ஒருமுறை சன்யாச தர்மத்தைப் பற்றி தெரிந்துகொள்வதற்காக சதுர்முக பிரம்மனிடம் சென்றனர். தமக்கு சன்யாச தர்மத்தைப் பற்றியும், ஆத்மயோகத்தை உபதேசிக்கவும் வேண்டினர். இவர்களின் கேள்விகளுக்கு மிகவும் தெளிவான பதில்களைக் கூறவேண்டும் என்பதற்காக, பிரம்மதேவர் தானே எதையும் உபதேசிக்கவில்லை. நீயே கதி என்று ஸ்ரீஹரியிடம் சரணடைந்தார். அவருக்கு ஸ்ரீஹரி தரிசனம் அளித்தார். இதுவே ஹம்ஸ அவதாரம். எவ்வித களங்கமும் இல்லாத தத்வஞானத்தை உபதேசிப்பதற்குத் தோன்றியதால், இந்த அவதாரத்திற்கு ஹம்ஸ என்னும் பெயர் வந்தது.

இதற்கு முன் என்றும் கண்டிராத ரூபத்தினைக் கண்ட சனகாதிகள், ஸ்ரீஹரியைப் பார்த்து, 'கோ பவான்'? - நீங்கள் யார் என்று கேட்டனர். அப்போது ஸ்ரீஹரி, 'கோ பவான்?' என்னும் கேள்வியே அர்த்தமில்லாதது. ஏனென்றால், உங்களைவிட உயர்ந்தவரான பிரம்மதேவரே என்னை வணங்கியிருக்கும்போது, அவரைவிட நான் உயர்ந்தவான இருப்பேன் என்று உங்களுக்கு தெரியவில்லையா?. அதனால் உங்கள் கேள்வியில் பொருளே இல்லை. இப்படியாக அவர்களிடையே பேச்சு துவங்கியது. அப்போது சனகாதிகள் சாஷ்டாங்கமாக அவரை வணங்கி, தமக்கு ஆத்மயோகத்தை உபதேசிக்க வேண்டுமென்று வேண்டினர். சதுர்முக பிரம்மனை முன்வைத்துக் கொண்டு, ஹம்ஸரூபியான ஸ்ரீஹரி, சனகாதிகளுக்கு ஆத்மயோகத்தை உபதேசிக்கிறார்.

ஸ்ரீஹரி உபதேசித்த ஆத்மயோகத்தின் சாரத்தை, பாகவத பதினோறாம் ஸ்கந்தம் நமக்கு தெரிவிக்கிறது. இப்படி மிகவும் சிறந்த ஆத்மயோகத்தை உபதேசித்த ஹம்ஸரூபியான ஸ்ரீஹரியே, நமக்கு என்றைக்கும் குருவாக இருக்கிறார். மிகவும் சிறந்தவனரான, சன்யாசிகளுக்கும் குரு எனப்படுபவரான, ஹம்ஸனுக்கு நாம் என்றைக்கும் சரணடைவோமாக.

**கே: ஹம்ஸ என்றால் என்ன பொருள்?**

ப: ஹம்ஸ என்றால் யதி என்று நானார்த்தகோஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அனாதி காலத்திலிருந்து, சர்வதந்த்ர ஸ்வதந்திரனாகி, அனைத்து இந்திரியங்களையும் தன் வசம் வைத்துக் கொண்டிருப்பவனே நிஜமான யதி. அவனே ஹம்ஸ. அப்படிப்பட்டவர் ஸ்ரீஹரி மட்டுமே தவிர, வேறு யாரும் இல்லை. இரண்டாம் யதி யார் என்றால், ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டு, அனைத்து இந்திரியங்களையும் தன் கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டிருக்கும், பிரம்மன் மற்றும் முக்யபிராணர் ஆகியோர். இவர்களும் யதிகளாக இருந்ததால், ஹம்ஸ என்று அழைக்கப்பட்டனர். பிறகு சனகாதி முனிவர்கள் அனைவரும் ஹம்ஸ

என்று அழைக்கப்பட்டனர். இப்படி இந்திரிய நிக்ரஹம் செய்த யதிகளுக்கு மட்டும் ஹம்ஸ என்னும் பெயர் பொருத்தமாக இருக்கிறது. இந்திரிய நிக்ரஹம் இல்லாத சில சன்யாசி வேடத்திற்கு யதி என்னும் பெயரோ, ஹம்ஸ என்னும் பெயரோ பொருத்தமாக இருப்பதில்லை.

தயித: ஸதாம்ருஷப ஏஷ பூதயோ
வபுருத்வஹன் பரமஹம்ஸ லக்ஷணம் ।
வைஹரத்வலக்ஷ தமபக்ஷஷோபனம்
புரதத்வலிப்ஸு ஸனகாதி வந்தித: ॥

அதிசுத்தமான சித்தாந்தத்தை உபதேசிக்க, நாராயணன் சன்யாச சரீரத்தை எடுத்தார். சனகாதி ரிஷிகளுக்கு பரதத்வத்தை உபதேசித்தார். இவரே ஹம்ஸ என்று பெயர் பெற்றார்.

இப்படியாக நாராயண பண்டிதர், மத்வவிஜயத்தில் வர்ணிக்கிறார். தத்வஞானத்தை உபதேசிப்பதற்காக ஸ்ரீஹரி ஹம்ஸனாக அவதரித்தார். இதிலிருந்தே யதி பரம்பரை வளர்ந்தது. அதனால், தத்வஞானத்திற்கு ஜிதேந்திரியத்வம் (இந்திரிய நிக்ரஹம்) மிகவும் அவசியமான ஒன்று என்று இதிலிருந்து தெரியவருகிறது. இந்திரிய நிக்ரஹம் இல்லாத தத்வஞானமானது, பாலில் ஒரு துளி விஷம் கலந்ததுபோல் வீணானது.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தின்படி ஹம்ஸனை எப்படி தியானிக்கவேண்டும்?**

ப:
த்யாயேத் ரவீந்துகரமிந்து சஹஸ்ரலக்ஷ காந்திம்
ப்ரியாசஹிதம் ஆஸ்திதமிந்து பிம்பே ।
ஷங்காரி தோர்த்வய முதர்கமஹேந்து பிம்பாத்
சஞ்சிச்சமானம் அம்ருதேன ரமாதினாதம் ॥

மேற்கைகளில் சூரியன், சந்திரன் இருவர்களையும், கீழ்கைகளில் சங்கு, சக்கரம் இவைகளை தரித்திருப்பவரும், 1000 சந்திரர்களைக் காட்டிலும் ஒளியுள்ளவரும், ஸ்ரீலட்சுமி தேவியுடன் சந்திர மண்டலத்தின் மத்தியில் இருப்பவரும், அமிர்தத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டுக் கொண்டிருப்பவரும், ரமாதேவிக்கு தலைவனாகவும் ஆன ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும்.

***

## 26. வைகுண்ட

**கே: வைகுண்ட என்னும் ஸ்ரீஹரியின் அவதாரத்தின் சிறப்பு என்ன?**

ப: ஒவ்வொருவரும் எந்த வைகுண்டத்திற்குச் செல்லவேண்டும் என்று நினைக்கின்றனரோ, அந்த வைகுண்டத்தை நிர்மாணித்த சிறப்பான அவதாரம் இது.

**கே: இந்த அவதாரம் எப்போது நடைபெற்றது?**

ப: ஐந்தாவது ரைவத மன்வந்தரத்தில்.

**கே: இந்த அவதாரம் யாரிடம் நடைபெற்றது?**

ப: ஷுப்ர மற்றும் விகுண்ட என்னும் தம்பதியினரிடம் வைகுண்ட என்னும் ரூபத்தில் ஸ்ரீஹரி அவதரித்தார்.

**கே: ஷுப்ர மற்றும் விகுண்ட தம்பதியினருக்கு, வைகுண்ட என்னும் ஸ்ரீஹரியின் அவதாரம் மட்டும் மகனா அல்லது வேறு யாரும் வாரிசு இருந்தனரா?**

ப: விகுண்டாதேவியிடம் பல தேவர்கள் பிறந்தனர். ஆகையால் அவர்களுக்கும் வைகுண்ட என்று பெயர் வந்தது. அங்கு ஸ்ரீஹரியும் அங்கு பிறந்து, வைகுண்ட என்ற பெயர் பெற்றார்.

பத்னீ விகுண்டா ஷுப்ரஸ்ய வைகுண்டை: சுரசத்தமை: ।
தமோ: ஸ்வகலம் ஜக்ஞே வைகுண்டோ பகவான் ஸ்வயம் ॥

**கே: வைகுண்ட லோகத்தை நிர்மாணம் செய்யவேண்டுமென்ற நிலை எப்போது வந்தது?**

ப: வைகுண்ட நாமகனான ஸ்ரீஹரி ரமாதேவியை மணமுடித்தார். அப்போது தாம் வசிப்பதற்காக ஒரு அழகான லோகத்தை நிர்மாணம் செய்யவேண்டி ரமாதேவி பிரார்த்தித்தார். அவரின் வேண்டுகோளுக்கு இணங்க, ஸ்ரீஹரி வைகுண்டத்தை நிர்மாணித்தார்.

வைகுண்ட: கல்பிதோ யேன லோகோ லோகனமஸ்க்ருத; ।
ரமயா ப்ரார்த்யமானேன தேவ்யா தத்ப்ரியகாம்யயா ॥

**கே: வைகுண்ட லோகத்திற்கு இந்தப் பெயர் வரக் காரணமென்ன?**

ப: ரமாதேவியின் வேண்டுகோளுக்கு இணங்க, ஸ்ரீஹரி தாம் வசிப்பதற்கு கட்டிய லோகத்திற்கு, அவரின் பிரார்த்தனையின்படியே வைகுண்டம் என்று பெயர் வைத்தார்.

**கே: இது ஸ்ரீஹரியின் லோகமாக இருந்தாலும், முக்தர்களின் லோகம் என்று எப்படி சொல்கின்றனர்?**

ப: வைகுண்டம் என்பது ஸ்ரீஹரியின் இருப்பிடமாக இருந்தாலும், தன் வீட்டில் முக்தர்களுக்கு தரிசனம் அளித்து, அவர்களுக்குத் தேவையான சுகங்களைக் கொடுத்து அருள்கிறார். பக்தர்களுக்காகவே தான் கட்டிக்கொண்ட உத்தமமான லோகமே வைகுண்டம்.

**கே: வைகுண்ட லோகம் அழிவில்லாது. பிரளய காலத்திலும் அழியாதது. அப்படியிருக்கும்போது 'நிர்மாணம்' செய்வது என்றால் என்ன பொருள்?**

ப: ஸ்ரீஹரி தனது லீலைகளில் ஒன்றாக வெளிப்படுத்தியதையே, நிர்மாணம் என்கிறார்கள்.

**கே: மோட்சம் என்றால் வைகுண்டத்திற்குப் போவது மட்டும்தானா, வேறு உலகங்களும் உள்ளனவா?**

ப: ஸ்வேதத்வீப, அனந்தாசன, வைகுண்ட என்பதாக மூன்று உலகங்கள் உள்ளன. வைகுண்டத்தை விட அனந்தாசனம் உத்தமம். அனந்தாசனத்தைவிட ஸ்வேதத்வீபம் உத்தமம்.

**கே: வைகுண்டரூபியான ஸ்ரீஹரியின் சிறப்பு என்ன?**

ப: ஒவ்வொரு சாதகரும் இறுதியாக தனக்கு வேண்டுவது மோட்சம். மோட்சத்திற்குப் போனபிறகு, நிரந்தரமாக சுகத்தை அனுபவிக்கும் இடமே வைகுண்டம். இத்தகைய வைகுண்ட லோகத்தை அடையவேண்டுமெனில், வைகுண்ட என்னும் பெயரைப் பெற்ற ஸ்ரீஹரியின் அருள் கண்டிப்பாகத் தேவை.

***

## 27 அஜித

**கே: அஜித என்னும் ஸ்ரீஹரியின் அவதாரம் நடைபெற்றது எப்போது?**

ப: சாக்ஷுஷ மன்வந்தரத்தில்.

**கே: அவதாரத்தின் வேலை என்ன?**

ப: அனைத்து தேவர்களுக்கும் அமிர்தத்தைத் தருவதற்காக பாற்கடலை கடையும் அவதாரம்.

**கே; பாற்கடலை கடையும்முன்னர், ஸ்ரீஹரி அவதாரம் எடுக்கவில்லை. மூலரூபியின் அனுமதியில் தேவர்கள் அசுரர்களும் கடைவதைத் துவக்கினர். அப்படிதானே?**

ப: அசுரர்களின் தொந்தரவு தாங்காமல் தேவர்கள், பிரம்மதேவரிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன் அனைத்து தேவர்களையும் அழைத்துக்கொண்டு, ஸ்ரீஹரியிடம் சென்றார். அற்புதமான முறையில் ஸ்ரீஹரியை ஸ்தோத்திரம் செய்தார். அவருடன் தேவர்களும் வணங்கினர்.

நமஸ்துப்யம் அனந்தாய துர்விதர்காத்ம கர்மணே ।
நிர்குணாய குணேசாய ஸத்யஸ்தாய ச சாம்ப்ரதம் ॥
அஜாய ஜன்மஸ்திதி ஸம்யமாய குணாய நிர்வாண ஸுகார்ணவாய ।
அணோரணீன்மேऽ பரிகண்யதாம்னே மஹானுபாவாய நமோ நமஸ்தே ॥

இப்படி ஸ்தோத்திரம் செய்தபோது, அஜித நாமக ஸ்ரீஹரி தோன்றினார்.

**கே: பாற்கடல் கடையும் நேரத்தில் அஜிதரூபியான ஸ்ரீஹரியே அதை முன்னின்று நடத்தினார் என்று சிலர் சொல்கின்றனர். அவர் அஜிதனாகத் தோன்றினார் என்று நீங்கள் கூறுகிறீர்கள். இவற்றில் எது சரி?**

ப: இரண்டுமே சரிதான். பாற்கடலை கடையும்போது அஜிதரூபியான ஸ்ரீஹரியே அதை நடத்தினார். அதற்கு முன், பிரம்மன் மற்றும் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, கோடி சூரியர்களை விடவும் அதிக ஒளியுடையவராக, பற்பல அணிகலன்களை அணிந்தவராக, பிரம்மதேவரின் எதிரில் காட்சியளித்தார். பாற்கடலை கடையும் யோசனையையும் அஜிதரூபியான ஸ்ரீஹரியே தெரிவித்தார்.

அரயோபி ஹி ஸந்தேயா: ஸதி கார்யார்த்த கௌரவே ।
அஹிமோஷிகவத்தேவா ஹைர்தஸ்ய பதவீம் கதை: ॥

**கே: அஜிதன் என்றால் என்ன பொருள்? அஜிதனை எப்படி வணங்கவேண்டும்?**

ப: பாகவத பத்தாவது ஸ்கந்தத்தில், யாராலும் வெல்லப்பட முடியாதவன் ஆகையால், அஜிதன் என்று பெயர் பெற்றிருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஜயஜய ஜஹ்யஜாமஜித தோஷகைஹேத குணாம் ।
த்வமஸி யதாத்மனா ஸமவருத்த ஸமஸ்தபக: ॥

என்றும் வெல்லப்பட முடியாத அஜிதனே । உனக்கு ஜெயம் ஆகட்டும் । உன் கல்யாண குணங்களை மறந்தவர்களை நீ நாசம் செய்.

**கே: அஜிதரூபியான ஶ்ரீஹரி, பாற்கடல் கடைவதை முன்னின்று நடத்தியவர் மட்டுமா அல்லது தேவர்களுடன் சேர்ந்து நின்று பாற்கடலை கடைந்தவரா?**

ப: துவக்கத்திலிருந்து இறுதிவரை அந்தர்யாமியாக இருந்து பாற்கடலை கடைந்தவர், இந்த அஜிதரூபியான ஶ்ரீஹரி.

**கே: மந்தரமலையை கொண்டுவந்தவர்கூட அஜிதரூபியான ஶ்ரீஹரியே என்று சொல்கின்றனர். இது சரியா?**

ப: ஆம். அனைத்து தேவர்களும் மந்தரமலையின் அதிக எடையினால் அதைத் தூக்கமுடியாமல் போனபோது, அஜிதரூபியான ஶ்ரீஹரி அங்கு தோன்றி, அந்த மலையை தானே தூக்கி வந்து, கருடனின் மேல் வைத்தார். கருடன் மேலும் அமர்ந்து, தானே அந்த மலையைத் தூக்கிவந்தார். அனைத்து தேவர்களின் உள்ளேயும், அனைத்து தைத்யர்களின் உள்ளேயும், மலைக்கு உள்ளும், வாசுகியின் உள்ளும் தானே நின்று, கடைவதைச் செய்தார்.

**கே: ஆனால் மந்தரமலையைத் தூக்கி நிறுத்தியவர், கூர்ம ரூபியான ஶ்ரீஹரி என்று சொல்கிறார்களே?**

ப: ஆம். இதே அஜிதரூபியான ஶ்ரீஹரி, கூர்மரூபத்தை எடுத்து மலையை தாங்கினார். மலை உடைந்துவிடக்கூடாதென்று, மலையின் உள்ளே, வெளியே மற்றும் கீழே தானே நின்றார். இப்படியாக பாற்கடலைக் கடைய உதவியாக இருந்து, தேவர்களுக்கு அமிர்தத்தைப் பெற்றுத் தந்தார்.

**கே: அஜிதரூபியான ஶ்ரீஹரியை யார், எப்படி வணங்கினர்?**

ப: அனைத்து தேவர்களுக்கும் மிகவும் பிடித்தமான ரூபம் அஜிதன். தங்கள் அனைவருக்கும் அமிர்தத்தைக் கொடுத்த ரூபம் ஆகையால் அஜிதனை அனைத்து தேவர்களும் மிகவும் விருப்பப்பட்டு வணங்கினர்.

**கே: அஜிதரூபியான ஸ்ரீஹரியைக் குறித்து ஏதேனும் ஸ்தோத்திரம் உள்ளதா? மற்றும் அவரை நாம் எவ்வாறு வணங்கவேண்டும்?**

ப: ஸ்ரீமதாசார்யர், மிகவும் அழகாக அஜிதனைக் குறித்து ஸ்துதித்துள்ளார். த்வாதச ஸ்தோத்திரத்தில்:

விஸ்வஸ்திதி ப்ரளயசர்க மஹாவிபூதி
விருத்திபிரகார நியமாவிருதி பந்தமோக்ஷா:
யஸ்யா அபாங்க லவமாத்ரத ஊர்ஜிதாஸா
ஸ்ரீயத் கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||

**கே: அஜிதரூபியான ஸ்ரீஹரியின் ரூபத்தைப் பற்றிய விவரங்கள் ஏன் அதிகம் வெளியாகவில்லை?**

ப: அஜிதரூபியான ஸ்ரீஹரி, பற்பல (அனந்த) அவதாரங்களில் முதலிலேயே இருப்பவர். இவரை அனைவரும் கண்டிப்பாக வணங்கியே ஆகவேண்டும். பஞ்சரூபங்களில் - வாசுதேவ, தசாவதாரங்களில் - மத்ஸ்ய, 24 ரூபங்களில் - கேசவ, 100 ரூபங்களில் - அஜ, 1000 ரூபங்களில் - விஸ்வ என்று துவக்க ரூபங்களில் எப்படி உள்ளனவோ, அதைப்போலவே ஸ்ரீஹரியின் பற்பல (அனந்த) ரூபங்களில், அஜிதன் என்பது முதலாம் ரூபம். இதை வேதவியாஸ கத்யத்திலிருந்து அறியலாம்.

**கே: அஜிதரூபியான ஸ்ரீஹரி, பாற்கடலை கடைவதற்காக தோன்றினார். இதைத்தவிர வேறு வேலைகள் ஏதேனும் செய்தாரா?**

ப: ஒவ்வொரு மன்வந்தரத்திலும் ஒவ்வொருவர் இந்திர பதவியில் இருக்கிறார்கள். மொத்த சாக்ஷுஷ மன்வந்தரத்திற்கும் அஜிதரூபியான ஸ்ரீஹரியே - ஸ்வர்க்கத்திற்கு அதிபதியான இந்திர பதவியில் இருந்தார். இதைவிட பெரிய மகிமை / வேலை வேறென்ன இருக்கமுடியும்? இத்தகைய அஜிதனை நிரந்தரமாக வேண்டி, தன்யர் ஆவோமாக.

***

## 28. விபு

**கேள்வி: விபு என்றால் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவன் என்று பொருள். இது விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் வரும் ஸ்ரீஹரியின் ஒரு காரணப் பெயர்தானே?**

பதில்: விபு என்பது வெறும் காரணப் பெயர் மட்டுமல்ல அது ஒரு அவதாரத்தின் பெயர் ஆகும். இரண்டாம் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் ஸ்ரீஹரி, விபு என்று அவதரித்து மிகவும் புகழடைந்தார்.

**கே: தற்போதைய வைவஸ்வத மன்வந்தரத்தில் நாம் ராம கிருஷ்ணாதி ரூபங்களைக் கொண்டாடுவதைப் போல், அந்த காலத்தில், விபு என்னும் அவதாரத்தை கொண்டாடினார்களா?**

ப: ஸ்ரீஹரியின் விபு ரூபம், மொத்த மன்வந்தரத்திற்கும் அதிபதியாக இருந்தது மட்டுமல்லாமல், அனைத்து பக்தர்களையும் காப்பாற்றி, அருளிய மிகவும் அற்புதமான முக்கியமான ரூபம். அதற்காகவே இந்த அவதாரத்திற்கு விபு என்ற பெயர் வந்தது.

**கே: இரண்டாம் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் விபு என்னும் அவதாரத்தைத் தவிர, வேறெதும் அவதாரம் நடந்திருக்கிறதா?**

ப: ஸ்ரீஹரியின் அவதாரங்கள் அனைத்து காலங்களிலும் நடந்துகொண்டேயிருக்கின்றன. ஆனால், அந்த மன்வந்தரத்தில் பிரபலமான அவதாரம் விபு மட்டுமே.

**கே: விபு யாரிடம் அவதரித்தார்?**

ப:

ரிஷேஸ்து வேதஷிரஸஸ்துஷிதா நாம பத்ன்யபூத் ।
தஸ்யாம் ஜக்ஞே ததோ தேபோ விபுரித்யபிவிஷ்ருத: ॥

வேதஷிர என்னும் ரிஷிக்கும் துஷிதா என்னும் அவரது மனைவியின், தவத்தின் சக்திக்கு மெச்சி, ஸ்ரீஹரி விபு என்னும் பெயரில் இவர்களிடத்தில் அவதாரம் செய்தார்.

**கே: விபு அவதாரத்தின் சிறப்பு என்ன?**

ப: அஷ்பாஷீதி சஹஸ்ராணி முனயோ யோ த்ருதப்ரதா: |
அன்வஷிக்ஷன் ப்ரதம் தஸ்ய கௌமர ப்ரம்ஹசாரிண: ||

88,000 விரதங்களைச் செய்த, பால-பிரம்மசாரி-முனிகள், இந்த விபு என்னும் ஸ்ரீஹரியிடமிருந்து, பிரம்மசர்ய விரதத்தைப் பற்றி தெரிந்துகொண்டனர்.

இப்படி பிரம்மசர்ய விரதத்தை எப்படி அனுஷ்டானம் செய்வது என்பதை சொல்லிக்கொடுத்த இந்த விபு நாமக ஸ்ரீஹரியின் பூஜையை நம் அனைவரின் பிரம்மசர்யத்திற்காக நாமும்கூட எப்போதும் செய்யவே வேண்டும்.

**கே: இரண்டாம் ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் விபு நாமக ஸ்ரீஹரி அவதரித்தபோது, இந்திராதி பதவிகளில் யார் யார் இருந்தனர்?**

ப: சாட்சாத் வாயுதேவரே, ரோசன என்னும் பெயரில் இந்திரபதவியில் இருந்தார். துஷிதர் அப்போது தேவதா பதவியில் இருந்தார். ஓஜஸ்தம்ப முதலான பிரம்மஞானிகளான ரிஷிகள் சப்தரிஷிகளாக இருந்தனர். ஸ்வாரோசிஷ என்பவர் மன்வந்தரத்தின் அதிபதியாக இருந்தார். தைமந்த, ஸுஷேண, ரோசிஷ்மத் முதலானவர்கள் மனுவிற்கு மகனாக இருந்தனர். இவர்கள் அனைவருக்கும் மேல், சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான விபு என்னும் ஸ்ரீஹரியே இவர்களின் அதிபதியாக இருந்தார்.

***

## 29. சத்யசேன

**கேள்வி: இரண்டாம் மன்வந்தரத்தில் விபு நாம ஶ்ரீஹரியின் அவதாரத்தின் சிறப்பைப் பற்றி அறிந்தோம். இதேபோல, மூன்றாம் மன்வந்தரத்தில், ஶ்ரீஹரியின் அவதாரத்தின் விசேஷம் என்ன என்று பார்க்கலாமா?**

பதில்: அவதாரத்தின் பெயர் சத்யசேன

**கே: சத்யசேன அவதாரத்தின் நோக்கம்?**

ப: மூன்றாம் மன்வந்தரத்தில் சத்யஜித் என்னும் யமதர்மராஜன் இந்திரபதவியில் இருந்தார். ஒருமுறை உலகத்தில் துஷ்டர்களான அரக்கர்களே நிரம்பியிருந்தார்கள். விலங்குகளைக் கொல்வதை தம் வாடிக்கையாக்கிக் கொண்டிருந்தனர். பொய் பேசுவதே அவர்களின் வழக்கமாயிருந்தது. இந்த சமயத்தில், யமதர்மன் வேறு வழியில்லாமல் ஶ்ரீஹரியை சரணடைந்தார். அவரின் ஸ்தோத்திரத்திற்கு செவிசாய்த்து, ஶ்ரீஹரி சத்யசேன என்னும் அவதாரம் எடுத்தார்.

**கே: சத்யசேன என்னும் பெயர் வரக் காரணமென்ன?**

ப: பொய் பேசும் வழக்கமுடைய அரக்கர்களைக் கொன்று, உண்மையை நிறுவியதால், சத்யசேன என்னும் காரணப்பெயரைப் பெற்றார்.

**கே: சத்யசேனன் யாரிடம் அவதரித்தார்?**

ப:
தர்மஸ்ய சூன்ருதாயாம் து பகவான் புருஷோத்தம: ।
சத்யசேன இதி க்யாதோ ஜாத: ஸத்யவ்ரதை: ஸஹ ॥

யமதர்மனின் மனைவியான சூன்ருதாதேவியிடம், புருஷோத்தமனான, நற்குணங்களால் நிரம்பியவனான, ஶ்ரீஹரி சத்யசேன என்ற பெயரில் அவதரித்தார்.

**கே: யமதர்மன் - சூன்ருதாதேவியிடம், சத்யசேன ஶ்ரீஹரி மட்டுமே அவதரித்தாரா, அல்லது இன்னும் வேறு யாராவது அவதரித்தார்களா?**

ப: 'சத்யவ்ரதை: ஸஹ' என்னும் வாக்கியத்தின்படி இன்னும் பலர் சூன்ருதாதேவியிடம், சத்யசேனரின் சகோதரர்களாகப் பிறந்தனர்

**கே: மூன்றாம் மன்வந்தரத்தின் பெயர் என்ன? மன்வந்தரத்தின் அதிபதி யார்?**

ப: மூன்றாம் மன்வந்தரத்தின் பெயர் - உத்தம. ப்ரியவ்ரத ராஜனின் மகனான உத்தமனே இதன் அதிபதி. பவன, யக்ஞஹோத்ர ஆகியோர் இவனின் மகன்கள்.

**கே: அப்போதைய அரசாட்சி எப்படி இருந்தது?**

ப: யமதர்மராஜன் இந்திரபதவியை வகித்து வந்தார். வசிஷ்டரின் மக்களான ப்ரமத முதலானவர்கள் சப்தரிஷி பட்டத்தில் இருந்தனர். சத்யர், வேதஸ்ருதர் மற்றும் பத்ரகீ ஆகியோர் தேவதா பதவிகளில் இருந்தனர். சத்யவ்ரத முதலான சகோதரர்களுக்கு காவலனாக, இந்திரனை கட்டுப்படுத்துபவனாக, சத்யசேன என்னும் பெயரைப் பெற்ற ஸ்ரீஹரியிடம் நமக்கும் சத்ய நிஷ்டையை அருள்வாயாக என்று வேண்டி என்றென்றும் அவரை சரணடைவோமாக.

***

## 30. பிரபு

**கேள்வி: நான்காம் மன்வந்தரத்தில் நடந்த ஸ்ரீஹரியின் அவதாரத்தின் சிறப்பு என்ன?**

பதில்: தாபஸ ஹரி, நான்காம் தாபஸ மன்வந்தரத்தின் அதிபதி ஆவார். ஐந்தாம் மன்வந்தரத்திற்கு வைகுண்ட, ஆறாம் சாக்ஷுஷ மன்வந்தரத்திற்கு அஜிதன், ஏழாம் வைவஸ்வத மன்வந்தரத்திற்கு வாமனன் அதிபதிகளாக இருக்கின்றனர்.

**கே: எட்டாம் மன்வந்தரம் எது? மற்றும் அந்த மன்வந்தர அதிபதியான ஸ்ரீஹரியின் அவதாரம் எது?**

ப: ஸாவர்ணி என்பது எட்டாம் மன்வந்தரத்தின் பெயர். இதில் ஸ்ரீஹரி, பிரபு என்னும் பெயரில் அவதரிப்பார்.

**கே: ஸாவர்ணி மன்வந்தரத்தில், இந்திரபதவியை யார் வகித்திருந்தபோது, பிரபு நாமக ஸ்ரீஹரி அவதரிப்பார்?**

ப: எட்டாம் மன்வந்தரத்தின் இந்திரன் - பலிச் சக்ரவர்த்தி. பலி, இந்திரபதவியை அடைவதற்கு முன்னரே, ஸ்ரீஹரி பிரபு என்னும் பெயரில் அவதரிப்பார்.

**கே: எட்டாம் மன்வந்தரத்தின் அதிபதி சாவர்ணி என்பவர் யார்?**

ப: வைவஸ்வத மன்வந்தரத்தின் அதிபதியான விவஸ்வான் என்னும் சூரியனின் மகனே ஸாவர்ணி ஆவான். சூரியனுக்கு, சஞ்ஞா மற்றும் சாயா என்று இரு மனைவியர். சாயா என்பவரிடம் சாவர்ணி, தபதி, சனைஸ்வர ஆகிய மூன்று மக்கள் பிறந்தனர். இந்த மூவரில் முதல்வனான ஸாவர்ணி என்பவனே மன்வந்தரத்தின் அதிபதி ஆவான்.

**கே: ஸாவர்ணி என்னும் மன்வந்தரத்தின் அதிபதிக்கு ப்ரபுரூபியான ஸ்ரீஹரி எப்படி அருளினார்?**

ப: விரோசனனின் மகனான பலியை இந்திர பதவியில் அமர்த்தினார். விரஜர், அமிதப்ரஜர் ஆகியோர்களை தேவதா பதவிகளில் அமர்த்தி, மொத்த மன்வந்தரத்தின் வேலைகளைப் பற்றியும் உபதேசித்து, தானே ஸாவர்ணியில் நின்று மன்வந்தரத்தின் அரசாட்சியை நடத்துவார். இப்படி துவக்கம் முதல் இறுதி வரை, மன்வந்தரத்தை நிறுவியதாலேயே பிரபு என்னும் காரணப்பெயரை ஸ்ரீஹரி பெற்றார்.

**கே: இந்த மன்வந்தரத்தில் நடைபெற்ற ஸ்ரீஹரியின் வேறு அவதாரங்கள் யாவை?**

ப: எட்டாம் ஸாவர்ணி மன்வந்தரத்தில், பரசுராம மற்றும் வேதவியாஸ ரூபியான ஸ்ரீஹரி, சப்தரிஷி பதவிகளை வகிப்பர். இவரின்கூட அஸ்வத்தாம, க்ருபா, ரிஷ்யஸ்ருங்க, காலவ மற்றும் தீப்திமந்த என்பவர்கள் கூட சப்தரிஷி பதவிகளில் இருப்பார்கள்.

**கே: பிரபு ரூபியான ஸ்ரீஹரி யாரிடம் அவதரிப்பார்?**

ப: தேவகுஹ்ய மற்றும் ஸரஸ்வதி தம்பதியரிடம் ஸ்ரீஹரி பிரபு என்னும் பெயரில் அவதாரம் செய்வார். இவர் அரசர்களுக்கெல்லாம் அரசராக விளங்குவார்.

தேவகுஹ்யாத் ஸரஸ்வத்யாம் ஸார்வபௌமபதி: பிரபு: ।
ஸ்தானம் புரந்தராத்ருத்வா பலயோ தாஸ்யதீஷ்வர: ॥

**கே: பிரபு நாமக இந்த ஸ்ரீஹரி, பலிக்கு எப்படி உதவினார்?**

ப: முந்தைய மன்வந்தரத்தில் புரந்தர என்பவன் இந்திர பதவியில் இருந்தார். அவரிடமிருந்து பதவியைப் பறித்து, பலிக்கு கொடுத்தார் ஸ்ரீஹரி. மற்றும் மன்வந்தரத்தின் இறுதிவரை பலியிடம் பிரபு நாமக ஸ்ரீஹரி அந்தர்யாமியாக இருந்து, மொத்த ஸ்வர்க்காதிபத்யத்திற்கு முக்கியமான காரணம் ஆவார்.

***

# 31. ஸ்ரீமூர்த்தி

**கேள்வி: ஒன்பதாம் மற்றும் பத்தாம் மன்வந்தரங்களில் எந்த் அவதாரம் நடைபெறும்?**

பதில்: தக்ஷஸாவர்ணி என்னும் ஒன்பதாம் மன்வந்தரத்தில், ரிஷப நாமகனான ஸ்ரீஹரி அவதாரம் செய்வார். பிரம்மஸாவர்ணி என்னும் பத்தாம் மன்வந்தரத்தில், ஸ்ரீமூர்த்தி எனும் ஸ்ரீஹரி அவதாரம் நடைபெறும்.

**கே: ஸ்ரீமூர்த்தி யாரிடம் அவதரிப்பார்?**

ப: விஸ்வஸ்ருஜ மற்றும் விஷூசி என்னும் தம்பதியினரிடம், அமைதிரூபமான ஸ்ரீஹரி ஸ்ரீமூர்த்தி என்னும் பெயரில் அவதரிப்பார்.

**கே: பிரம்மஸாவர்ணி என்பவன் யார்? அவன் வாரிசுகள் யார்?**

ப: உபஸ்லோகனின் மகனே பிரம்மஸாவர்ணி. பூரிஷேண ஆகியோர் இவனின் வாரிசுகள் ஆவர்.

**கே: பிரம்மஸாவர்ணி மன்வந்தரத்தில் இந்திராதி பதவிகளில் யார் யார் இருப்பர்?**

ப: ஹவிஷ்டான், ஸுக்ருத, ஸத்ய, ஜய, மூர்த்தி இவர்கள் மன்வந்தரத்தின் ரிஷிபதவிகளில் இருப்பர். சுவாசனர், விபுத்தர் ஆகியோர் தேவதா பதவிகளில் இருப்பர். ஷம்புவே இந்திர பதவியில் இருப்பார். பூரிஷேண முதலானவர்கள் இவரின் வாரிசுகளாக இருப்பர்.

**கே: ஸ்ரீஹரிக்கு ஸ்ரீமூர்த்தி என்று பெயர் வருவதற்கு என்ன காரணம்?**

ப:

தத்ராபி ஜன்ம பவிதா ஹரேர்விஷ்வஸ்ருஜாம் க்ருஹே ।
ஸ்ரீமூர்த்திரிதி விக்யாதோ யோனாப்யாயேத வை ஜகத் ॥

எந்த காரணத்திற்காக இந்த உலகத்தையே ஸ்ரீரூபமாக உருவாக்கினாரோ, அதே காரணத்திற்காக ஸ்ரீமூர்த்தி என்னும் காரணப்பெயரை ஸ்ரீஹரி பெற்றார்.

***

# 32. தர்மசேது

**கேள்வி: தர்மசேது என்னும் ஸ்ரீஹரியின் அவதாரம் எப்போது நடைபெற்றது?**

பதில்: பதினொன்றாம் தர்மஸாவர்ணி மன்வந்தரத்தில் தர்மசேது என்று ஸ்ரீஹரி அவதாரம் எடுக்கிறார்.

**கே: தர்மசேது அவதாரத்திற்கு காரணம் யார்?**

ப: ஆர்யக - வைத்ருதா என்னும் தம்பதியருக்கு ஸ்ரீஹரி தன் அம்சமான தர்மசேது என்னும் பெயரில் அவதரிப்பார்.

**கே: தர்மஸாவர்ணி மன்வந்தரத்தில் ஸ்ரீஹரி மூன்று உலகங்களையும் எப்படி காப்பாற்றினார்?**

ப: வைத்ருத என்னும் இந்திரனை காப்பாற்றுவதன் மூலம், விஹங்கமர், காமகமர், நிர்வாணர் முதலான தேவதைகள் மற்றும் அருண முதலான ரிஷிகளை காப்பாற்றுவதின் மூலம் மொத்த மன்வந்தரத்தையே காப்பாற்றுபவர் ஆகிறார்.

**கே: மன்வந்தரத்தின் அதிபதியான தர்மஸாவர்ணி, ஸ்ரீஹரியிடம் எப்படி சரணடைந்தார்?**

ப: மனோபலம் நிறைந்த தர்மஸாவர்ணி, பதினொன்றாம் மன்வந்தரத்திற்கு அதிபதியாவதற்கு ஸ்ரீஹரியையே சரணடைந்தார். அந்த தர்மனிடம், ஸ்ரீஹரி, சேதுவாக அவதரித்தார். ஆகையால் இவருக்கு தர்மசேது என்ற பெயர் வந்தது.

ஸத்ய, தர்ம ஆகியவற்றைப் பின்பற்றி, தர்மஸாவர்ணியை காப்பாற்றி, அவரின் மகன்களான ஸத்ய, தர்ம ஆகியோர்களையும் காப்பாற்றி, தர்மசேதுவான ஸ்ரீஹரியே நம் எல்லா தர்மங்களுக்கும் சேதுவாகி அருளட்டும்.

***

# 33. ஸ்வதாம

**கேள்வி: 12ம் மன்வந்தரத்தில் ஸ்ரீஹரி எந்த பெயரில் அவதரிப்பார்?**

பதில்: ஸ்வதாம என்னும் பெயரில் அவதரிப்பார்.

**கே: இவரின் அவதாரத்திற்கு காரணமான தம்பதிகள் யார்?**

ப:
ஸ்வதாமாக்யோ ஹரேரம்ஷ: ஸாதயிஷ்யேதி தன்மனோ: |
அந்தரம் ஸத்யமஹஸ: ஸூன்ருதாயாம் ஸுதோ விப: ||

ஸூன்யதா மற்றும் ஸத்யஸஹ என்னும் தம்பதியரிடம் ஸ்வதாம என்னும் பெயரில் ஸ்ரீஹரி அவதரிப்பார்.

**கே: இவரின் சிறப்பு என்ன?**

ப: ருத்ரஸாவர்ணி மன்வந்தரத்தை முழுவதுமாக அருள்வதற்காக எடுக்கும் அவதாரம் இது.

**கே: அப்போது இந்திராதி பதவிகளில் யார் இருப்பர்?**

ப:
ருததாமா ச தத்ரேந்த்ரோ தேவாஸ்ச ஹரிதாதய: |
ருஷயஸ்ச தபோமூர்த்திதபஸ்வ் யாக்னேத்ரகாதய: ||

ருததாமனே இந்திரன் ஆவார். ஹரிதர் ஆகியோர் தேவர்களின் பதவிகளில் இருப்பர். தபோமூர்த்தி, தப, அக்னி, இந்திர ஆகியோர் சப்தரிஷிகளின் பதவிகளில் இருப்பர். தேவவான், உபதேவ, தேவஸ்ரேஷ்ட ஆகியோர் ருத்ரஸாவர்ணியின் மகன்கள் ஆவர்.

**கே: ஸ்ரீஹரிக்கு ஸ்வதாம என்ற பெயர் வருவதற்கு என்ன காரணம்?**

ப: ருததாம என்னும் இந்திரனுக்கு ஸ்வர்க்க லோகத்தை அருளிய ஸ்வதாமன், சர்வதந்திர- ஸ்வதந்திரனாக (அனைத்தையும் அறிந்தவர், சுதந்திரமாக சிந்திக்கக்கூடியவர்) இருந்தார். இவரின் இடத்தை / மகிமையை அடைவதற்கு இவருக்கு இன்னொருவரின் தயை / உதவி தேவைப்படுவதில்லை. ஆகவே, ஸ்வதாம என்னும் மிகப்பொருத்தமான பெயரைப் பெற்றார்.

***

# 34. யோகேஷ்வர

**கேள்வி: பதிமூன்றாம் மன்வந்தரம் எது? அந்த மன்வந்தரத்தின் அதிபதியின் மக்களின் பெயர் என்ன?**

பதில்: தேவசாவர்ணி என்பவர் பதிமூன்றாவது மனு. அவரது பெயரிலேயே மன்வந்தரமும் தேவசாவர்ணி என்று அழைக்கப்படுகிறது. சித்ரசேன, விசித்ர ஆகியோர் இவரது மகன்கள்.

**கே: தேவசாவர்ணியை அருள்வதற்காக ஸ்ரீஹரி எப்படி அவதரிப்பார்?**

ப:
தேவஹோத்ரஸ்ய தனய உபஹர்தா திவஸ்பதே: ।
யோகேஷ்வரோ ஹரேரம்ஷோ ப்ருஹத்யாம் ஸம்பவிஷ்யதி ॥

ஸ்ரீஹரியின் அம்சமான யோகேஷ்வரன் தேவஹோத்ரனின் மகனாக ப்ருஹதிதேவியிடம் அவதாரம் செய்வார்.

**கே: யோகேஷ்வர என்று அழைத்துக்கொண்ட ஸ்ரீஹரி, பதிமூன்றாம் மன்வந்தரத்தில் எப்படி அருள்வார்?**

ப: திவஸ்பதி என்பவருக்கு இந்திரபதவியை கொடுப்பதன் மூலம், அவரின் விருப்பத்தின் பேரில் வேண்டிய செல்வங்களைக் கொடுத்து மொத்த மன்வந்தரத்தையே அருள்வார்.

மிகுந்த செல்வத்தைப் பெற்றாலும், அனைத்தையும் துறந்து யோகாசக்தன் ஆனதால், ஸ்ரீஹரி யோகேஸ்வரன் என்று பெயர் பெற்றார். இந்த யோகேஸ்வரன், நமக்கும் நம்முடைய யோக்யதைக்குத் (தகுதிக்குத்) தக்கவாறு, யோக்ய ஞானத்தை வழங்கி அருளட்டும்.

***

## 35. ப்ருஹத்பானு

**கேள்வி: மொத்தம் 14 மன்வந்தரங்கள் உள்ளன. கடைசி மன்வந்தரத்தில் ஸ்ரீஹரி எப்படி அவதரிப்பார்?**

பதில்: இந்திரசுவர்ண என்பதே கடைசி மன்வந்தரம். அப்போது ஸ்ரீஹரி 'ப்ருஹத்பானு' என்னும் பெயரில் அவதாரம் எடுப்பார். ப்ருஹத்பானு என்னும் ஸ்ரீஹரி, இந்திர பதவிக்கு வரும் ஷுசி என்பவனுக்கு விசேஷமாக அருளுவார்.

**கே: யாரிடம் இவர் அவதரிப்பார்?**

ப: ஸத்ராயணஸ்ய தனயோ ப்ருஹத்பானுஸ்ததா ஹரி: ।
வினதாயம் மஹாராஜ க்ரியாதந்தூன் விதாயிதா ॥

ஸத்ராயண - வினுதாதேவி தம்பதியினரிடம் மகனாக ப்ருஹத்பானு என்னும் பெயரில் ஸ்ரீஹரி அவதரிப்பார்.

**கே: இந்த அவதாரத்தின் சிறப்பு என்ன?**

ப: யக்ஞங்கள் தொடர்பான காரியங்கள் அனைத்தும் துவங்கியதே இவரிடமிருந்துதான். இந்திராதி தேவர்கள் அனைவருக்கும் அருள்பவரும் இவரே.

**கே: அன்றைய அமைப்பில் யார்யார் எந்தெந்தப் பதவிகளில் அமர்ந்திருப்பர்?**

ப: உரு, கம்பீரபுத்தி ஆகியோர் மனுவின் புத்திரர்களாக இருப்பர். விசித்ரரு மற்றும் சாக்ஷுசாதிகள் தேவர்களின் பதவிகளில் இருப்பர். ஷுசி என்பவர் இந்திர பதவியில் இருப்பார். அக்னி, பாஹு, ஷுசி சித்த, மானஸ ஆகியோர் சப்தரிஷிகளின் இடங்களில் இருப்பர்.

***

## 36. பசு அவதாரம்

**கே: மீன், பன்றி, சிங்கம், குதிரை இப்படி பல விலங்குகளின் ரூபத்தில் ஸ்ரீஹரி அவதரித்திருக்கிறார். ஆனால் அனைத்து விலங்குகளைவிட மிகவும் பவித்ரமான பசுவின் ரூபத்தில் ஏன் தன்னை காட்டிக்கொள்ளவில்லை? ஏன் பசுவின் ரூபத்தில் அவதாரம் செய்யவில்லை?**

ப: பசுவின் ரூபத்தில் ஸ்ரீஹரி அவதாரம் செய்யவில்லை என்று பொதுவாக உலகத்தில் நம்பப்படுகிறது. ஆனால், கோவிந்தன், கோ'வின் ரூபத்திலும்கூட அவதாரம் செய்திருக்கிறார். இது ஒரு அற்புதமான கதை.

**கே: அப்படியா? என்ன ஆச்சரியம்? ஸ்ரீஹரி எந்த சந்தர்ப்பத்தில் பசுவின் அவதாரத்தை எடுத்தார்?**

ப: த்ரிபுராசுரர்கள், சித்தரசத்தின் (Siddha rasam - யாராலும் உருவாக்கப்படாத & அழிவில்லாத அமிர்தம்) கிணற்றைப் பெற்றிருந்தனர். அந்த சித்தரசம், அமிர்தத்தைப் போல் இருந்தது. அதைக் குடித்த தைத்யர்கள் அனைவரும் சாகாவரம் பெற்றனர். இத்தகைய அமிர்தத்தைப் பருகுவதற்காக ஸ்ரீஹரி பசுவின் ரூபத்தில் அவதரித்தார்.

**கே: எப்போது, எதற்காக இப்படி அவதரித்தார்?**

ப: த்ரிபுராசுரர்களை அழிக்கும் காலத்தில் ருத்ரரின் புகழை அதிகப்படுத்துவதற்காக.

**கே: த்ரிபுராசுரர்களைக் கொன்றது ருத்ரர்தானே? இப்படி இருக்கும்போது ஸ்ரீஹரி ஏன் பசுவின் ரூபத்தை எடுத்தார்?**

ப: ருத்ரர், த்ரிபுராசுரர்களின் நகரத்தின் மேல் பற்பல பாணங்களை விட்டு அசுரர்களை கொல்லத் துவங்கினார். ஆனால் அவர்கள் அனைவரும் மாய-அசுரர்களாகிருந்தனர். இறந்த அசுரர்களை அமிர்தம் நிறைந்த கிணற்றில் தள்ளி, மறுபடி அவர்களை பிழைக்க வைத்தனர். பிழைத்தவர்கள் மீண்டும் பலசாலியாக போருக்கு வந்தனர். இதனால் ருத்ரர் மிகவும் களைப்படைந்து, ஸ்ரீஹரியிடமே வந்து சரணடைந்தார். அந்த நேரத்தில் ஸ்ரீஹரி பசு அவதாரத்தை எடுத்தார்.

**கே: த்ரிபுராசுரர்களின் நகரங்கள் யார் கண்ணிற்கும் தெரியவில்லை. மேலும் அவை ஆகாயத்தில் சுற்றிக்கொண்டிருந்தன. ஏகப்பட்ட ஆயுதங்களால் நிரம்பியிருந்தன. இந்த அசுரர்களின் தங்க, வெள்ளி, இரும்பாலான நகரங்களை, கோ (பசு) ரூபியான ஸ்ரீஹரி எப்படி அழித்தார்?**

ப: கோரூபியான ஸ்ரீஹரி தானே இந்த நகரங்களை அழிக்கவில்லை. ருத்ரதேவர் மூலமாகவே இவற்றை அழித்தார்.

**கே: பசு ரூபத்தில் ஸ்ரீஹரி என்னென்ன செயல்களை செய்தார்?**

ப: ஸ்ரீஹரி பசுவின் ரூபத்தை எடுத்தபோது, பிரம்மன் கன்றுக்குட்டி அவதாரத்தை எடுத்தார். (முக்யபிராணரை கன்றுக்குட்டி ரூபத்தில் தியானிப்பவர்களுக்கு, சதுர்முக பிரம்மனின் இந்த கன்றுக்குட்டி ரூபமும்கூட மிகுந்த மகிழ்வைத் தரக்கூடியதாகும்) ஸ்ரீஹரி (பசு) நேராக சித்தரசம் இருந்த கிணற்றிற்கு சென்றார். அதிலிருந்த மொத்த அமிர்தத்தையும் குடித்து, கிணற்றை காலி செய்தார்.

**கே: அப்போது அசுரர்கள் அந்த பசுவின் மேல் ஏன் போர் புரியவில்லை?**

ப: அதுவே விஷ்ணுவின் மகிமை. பசுவின் மற்றும் கன்றுக்குட்டியின் மனதை மயக்கக்கூடிய அழகில் தங்களை பறிகொடுத்தனர். தங்களை அழிப்பதற்காகவே இவை வந்து கிணற்றிலிருக்கும் அமிர்தத்தைக் குடிக்கின்றன என்ற எண்ணம்கூட அசுரர்களுக்கு அந்த சமயத்தில் வரவில்லை.

**கே: கிணறு காலியானபிறகு, மரித்த அசுரர்கள் மறுபடி உயிர் பிழைக்க சாத்தியம் இல்லைதானே?**

ப: ஆம். எப்போது அமிர்த கிணறு காலியானதோ, அப்போது ருத்ரரால் கொல்லப்பட்ட அசுரர்கள் மறுபடி பிழைக்க வாய்ப்பில்லாமல் போனது.

**கே: கோரூபியான ஸ்ரீஹரி போருக்கு எப்படி உதவி புரிந்தார்?**

ப: பூமியை ரதமாக்கி, மேரு மலையை வில்லாக மாற்றி ருத்ரருக்குக் கொடுத்தார். மேலும், தன் சக்தியை அந்த போரில் பயன்படுத்தும் அனைத்து ஆயுதங்களிலும் நிறைத்து, ருத்ரரில் அந்தர்யாமியாக இருந்து, அபிஜித் முகூர்த்தத்தில், த்ரிபுராசுர பட்டணங்களின் மேல் பாணப் பிரயோகங்களைச் செய்தார்.

**கே: பசுவின் ரூபத்தில் ஸ்ரீஹரி மட்டுமே போர் புரிந்திருக்கலாம். பிரம்மனை கன்றுக்குட்டியாக்கியதால், தான் அதற்குக் கட்டுப்பட்டதைப் போல் ஆயிற்றல்லவா?**

ப: பிரம்மன் கன்றுக்குட்டியாக ஸ்ரீஹரியுடன் இருந்த காரணத்தால் மட்டுமே, அவரது ஸ்வதந்த்ரயத்திற்கு எந்தவித களங்கமும் வரவில்லை. ஏனென்றால், பிரம்மனே ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டவர் என்று அனைத்து ஆதாரங்களிலிருந்து தெரியவருகிறது. கன்றுக்குட்டியானது, பசுவிற்கு கட்டுப்பட்டது. பசு, கன்றுக்குட்டிக்கு கட்டுப்படுவது சாத்தியமே இல்லை. ஆக, ருத்ரரின் தந்தையான சதுர்முக பிரம்மன், தனது கட்டுப்பாட்டில் இருப்பவர் என்பதைக் காட்டுவதற்காகவே, ஸ்ரீஹரி பிரம்மனை கன்றுக்குட்டியாக மாற்றினார்.

இப்படி ஸ்ரீஹரியின் ஒவ்வொரு அவதாரமும் மிகவும் அற்புதமானது, சுவாரசியமானது, உலகத்தை ரட்சிப்பதற்கானது, ஞானம் வைராக்கியம் ஆகியவற்றைக் கொண்டது, இப்படி கோ ரூபத்தில் இருக்கும் ஸ்ரீஹரியை என்றென்றும் சரணடைவோமாக.

***

## 37. ப்ருஷ்ணிகர்ப அவதாரம்

ப்ருஷ்ணிகர்ப = Prushnigarbha

**கேள்வி: ஸ்ரீஹரிக்கு ப்ருஷ்ணிகர்ப என்னும் பெயர் எப்படி வந்தது?**

பதில்: ரிஷியின் மனைவியான ப்ருஷ்ணி என்பவரிடத்தில் அவதரித்த காரணத்தால், ப்ருஷ்ணிகர்ப என்னும் பெயர் வந்தது. அதுமட்டுமல்லாமல், தன் தாயின் பெயரை உலகத்தில் பிரபலப்படுத்துவதற்காக, இந்தப் பெயரை ஏற்றார்.

**கே: எந்த மன்வந்தரத்தில் இந்த அவதாரம் நடைபெற்றது?**

ப: ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில்.

**கே: ப்ருஷ்ணிகர்பனின் தந்தை?**

ப: சுதபா என்னும் ப்ரஜாபதி

**கே: இவர்களிடத்தில் அவதரிப்பதற்கு என்ன காரணம்?**

ப: சுதபா மற்றும் ப்ருஷ்ணி இருவரும், ஸ்ரீஹரியைப் போன்றதொரு குழந்தை தமக்குப் பிறக்கவேண்டும் என்று நான்கு யுக-காலங்களில் கடும் தவத்தை மேற்கொண்டனர். அவர்களின் தவத்தை மெச்சிய ஸ்ரீஹரி, வேண்டிய வரத்தை கேளுங்கள் என்று அவர்கள் முன்னே தோன்றினார்.

**கே: ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெற்ற அவர்கள், ஏன் மோட்சத்தை கேட்கவில்லை?**

ப: ஸ்ரீஹரியின் தரிசனத்திற்கு முன், அவர்களுக்கு மோட்சமும் கூட அற்பமானதாக பட்டது. ஆகையால், உன்னைப் போன்றதொரு மகனைக் கொடு என்று வரம் கேட்டனர்.

**கே: தன்னைப் போன்றதொரு மகனை அவர்களிடத்தில் பிறக்க வைத்திருக்கலாம். ஏன் ஸ்ரீஹரி தானே போய் அங்கே அவதரித்தார்?**

ப: இவ்வுலகில் ஸ்ரீஹரிக்கு சமமானவர் என்றால் யாருமே இல்லை. அவருக்கு சமமென்று அவரே இருப்பதனால், சுதபா மற்றும் ப்ருஷ்ணி தம்பதியருக்கு தானே குழந்தையாக அவதரித்தார்.

**கே: சுதபா மற்றும் ப்ருஷ்ணி இவர்கள் இருவரும் யார்?**

ப: சுதபனே பின்னர் கஷ்யப மற்றும் வசுதேவனாக பிறந்தார். ப்ருஷ்ணி பின்னர் கஷ்பரின் மனைவியாக அதிதியாகவும், வசுதேவனின் மனைவியாக தேவகியாகவும் பிறந்தனர்.

**கே: அப்படியென்றால், ஶ்ரீஹரி இந்த தம்பதிகளிடம் எவ்வளவு முறை அவதரித்தார்?**

ப:
சுதபா - ப்ருஷ்ணியாக இருந்தபோது ப்ருஷ்ணிகர்ப.
அதிதி - கஷ்யபராக இருந்தபோது வாமனன்
வசுதேவ - தேவகியாக இருந்தபோது ஶ்ரீகிருஷ்ணன்
என்றும் அவதரித்தார்.

***

# 38. ப்ருது - அம்சாவதாரம்

ப்ருது = Pruthu

**கேள்வி: ப்ருது அவதாரத்தின் கதையை சொல்லவும்.**

பதில்: அதர்மத்தின் மொத்த உருவமாக வேனன் என்னும் ராஜா இருந்தான். தவறான செய்கைகளால் தன் அரசையே அழித்துக் கொண்டவன். நாஸ்திக சிந்தனையை தன் நாட்டு மக்களிடம் விதைத்தவன். வேனனின் இத்தகைய கொடுஞ்செயல்களைக் கண்ட ரிஷிமுனிகள் மிகவும் கோபம் கொண்டனர். ப்ருகுமுனிகள் தன் ஹுங்காரத்தினாலேயே வேனனைக் கொன்றார்.

வேனனின் தாய் சுநீதி. அவள் சாத்வீகளாக இருந்தாலும், வேனனின் உயிரற்ற உடல் அழியாதவாறு அதை மந்திர-கோஷங்களினால் பாதுகாத்து வந்தாள். ராஜா இல்லாத நாடு இன்னும் சீரழியத் தொடங்கியது. அங்கராஜனின் வம்சமே நின்றுவிடும் நிலைமை வந்துவிடுமோ என்ற கவலை அனைவருக்கும் வந்தது. ரிஷிமுனிகள் அனைவரும் ஓரிடத்தில் சேர்ந்து இதைப்பற்றி ஆலோசித்தனர். வேனனின் உயிரற்ற உடலிலிருந்து அவனின் சந்ததியைப் பெறலாம் என்று முடிவெடுத்தனர்.

பாற்கடலை கடைந்தபோது ஹாலாஹல விஷம் வந்ததைப் போல, வேனனின் தொடையைக் கிழித்தபோது பாபியான நிஷாதன் வந்தான். பின்னர் வேனனின் கைகளைக் கிழித்தபோது சாத்வீகரான ப்ருதுராஜன் மற்றும் அர்ச்சி இருவரும் வந்தார்கள். ப்ருதுராஜன் மூலம் அங்கராஜனின் வம்சம் பின்னர் வளர்ந்து வந்தது.

ப்ருதுவிடம் ஸ்ரீஹரியும், அர்ச்சியிடம் லட்சுமிதேவியும் அவதரித்தனர். பின்னர் இவர்கள் இருவரும் மணந்து, மொத்த ராஜ்யத்தையும் நெறிப்பட்டு அரசாட்சி செய்தனர். பூமிக்கு ப்ருதிவி என்னும் பெயர் வரும் அளவிற்கு, பற்பல நற்காரியங்களைச் செய்தான். ப்ருதுவிடம் இருக்கும் ஸ்ரீஹரியின் அருள் என்றைக்கும் நமக்கு கிடைக்கட்டும்.

**கே: ப்ருது அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: நிறைய செல்வம் சேர்க்கவேண்டும் என்று நினைப்பவர்கள், அதற்கான சங்கல்பம் செய்துகொண்டு, மூன்று முறை பக்தியுடன் ப்ருது சக்ரவர்த்தியின் சரித்திரத்தை பாராயணம் செய்யவேண்டும். இப்படிச் செய்தால் அவர்களின் வேண்டுதல் நிறைவேறும் என்பதில் சந்தேகமே இல்லை.

**கே: செல்வங்களை சேர்க்கக்கூடாது என்பதே பாகவதத்தின் முக்கிய செய்தியாகும். ஆனால் இதே பாகவதத்தில், செல்வம் சேர்க்கவேண்டுமென்றால் ப்ருது சக்ரவர்த்தியின் சரித்திரத்தைப் படியுங்கள் என்று சொல்வது தப்பல்லவா?**

ப: ஆம். ஸ்ரீஹரியை மறந்துவிட்டு, துக்கத்தைத் தரக்கூடிய செல்வத்தை சேர்த்துக் கொண்டேபோனால், அது தவறுதான். இதில் சந்தேகமேயில்லை. செல்வம் மட்டுமல்ல, அழியக்கூடிய எந்தவொரு செல்வத்தின் மேலும் ஆசைப்படக்கூடாது.

**கே: இது எப்படி சாத்தியம்? எந்தவொரு செல்வமும் இல்லாமல் வாழ்வது எப்படி?**

ப: எவ்வளவு தேவையோ அவ்வளவு செல்வத்தை சம்பாதிப்பதில் தவறு இல்லை. தேவைக்கும் அதிகமான செல்வத்தை சேர்ப்பது தவறு என்பது பாகவதம் முதலான கிரந்தங்களின் அபிப்பிராயம்.

**கே: ஆனாலும், ஸ்ரீஹரியிடம் எதையும் வேண்டாத - சுயநலமில்லாத பக்தியையே செய்யவேண்டும். அழியக்கூடிய செல்வங்களை கேட்பது தவறுதானே?**

ப: ஸ்ரீஹரியிடம் வேண்டுவதை விட்டு, யார்யாரிடமோ யாசகம் வேண்டி, அவர்களின் உதவிக்காக கெஞ்சி, அதன்மூலம் செல்வம் சம்பாதிப்பதைவிட, ஸ்ரீஹரியிடம் வேண்டுவது மிகவும் உத்தமமான செயலாகும். அதனாலேயே தாசர்கள் அனைவரும் 'பேடிதரே என்னொடெயன பேடுவே' (வேண்டினால் என் தலைவனிடம் (ஸ்ரீஹரியிடம்) மட்டுமே வேண்டுவேன்) என்று பாடினர்.

**கே: அப்படியென்றால் ஸ்ரீஹரியிடம் பணம் வேண்டும் என்று வேண்டலாமா?**

ப: சந்தேகமே வேண்டாம். உங்கள் மனதில் என்ன தோன்றுகிறதோ, அதை ஸ்ரீஹரியிடமே நேரடியாகக் கேளுங்கள். அவரைத் தவிர வேறு யாரிடமும் எதையும் கேட்பது வேண்டாம். ஆகையால், உங்களுக்கு பெரிய செல்வந்தர் ஆகவேண்டும் என்ற எண்ணம் இருந்தால், ப்ருது சக்ரவர்த்தியின் சரித்திரத்தைப் படிக்கலாம். அதில் தவறில்லை. சம்பாதித்த செல்வத்தை 'விஷ்ணு ப்ரேரணயா, விஷ்ணு ப்ரீத்யர்த்தம்' என்று மட்டுமே செலவு செய்யவும்.

**கே: நம் தேவைக்கேற்ப செல்வத்தை சேர்ப்பது தவறு என்றான பிறகு, கோடீஸ்வரன் ஆகவேண்டும் என்று ப்ருது சக்ரவர்த்தியின் சரித்திரத்தை பாராயணம் செய்வதும் தவறுதானே?**

ப: அப்படியில்லை. சாத்விகமான நோக்கம் இருந்தால் மிகுந்த செல்வத்தை சம்பாதிப்பது தவறில்லை. செல்வம் வந்தபோது கர்வம் கொள்ளாமல் மற்றும் அந்த செல்வத்தினால் மற்றவர்களுக்கு பயன் இருந்தால், அப்படி

வேண்டிக்கொள்வதில் தவறில்லை. தர்ம, அர்த்த, காம, மோட்ச ஆகியவைகளில், அர்த்த கூட ஒரு புருஷார்த்தம் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. தர்மஸ்தாபனைக்காக, மிகப்பெரிய அளவில் 'அர்த்த'த்தின் அவசியம் இருக்கிறது. அதற்காக ப்ருதுசக்ரவர்த்தியின் கதையைப் படித்து, அனைத்துவித செல்வங்களையும் பெற்று பாக்யசாலிகள் ஆகுங்கள்.

**கே: இவ்வளவு செல்வங்களை நமக்குக் கொடுக்கவேண்டுமெனில், அந்த ப்ருதுராஜன் யார்? அவனின் சிறப்பு என்ன?**

ப: வேனனின் உடலிலிருந்து பிறந்த ப்ருது என்னும் சக்ரவர்த்தியிடம், ஸ்ரீஹரி, ப்ருது என்னும் பெயரிலேயே நிறைந்திருக்கிறார். இது ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரம். இவரின் கைகளில் சங்கு சக்கரம் ஆகிய சின்னங்களை ஏந்தியிருக்கிறார். ஸ்ரீஹரி சுதர்சன சக்கரத்தை ஏந்தியிருப்பதைப் போல, இவரும் சுதர்சன சக்கரம், கௌமோதகி என்ற கதை ஆகிய ஆயுதங்களை தரித்திருக்கிறார். ஆகையால், ஸ்ரீஹரியின் விசேஷமான ஆவேசம் உள்ள மிகப்பெரிய சக்ரவர்த்தி இவர்.

**கே: ப்ருது ராஜன் மூலமாகவே பூமிக்கு ப்ருதிவி என்று பெயர் வந்ததென்று கேள்விப்படுகிறோம். இதன் காரணம் என்ன?**

ப: வறட்சியினால் தன் நாட்டு மக்கள் துன்பப்படும்போது, கோபமடைந்த ப்ருதுராஜன், ப்ருதுதேவதையாக மாறி, பூமிதேவியை கொல்வதற்காக அவள் மேல் அம்பு தொடுத்தான். பூமிதேவி, ஒரு பசு ரூபத்தை எடுத்து அந்த அம்பிலிருந்து தப்புவதற்காக ஓடத் துவங்கினாள். ப்ருதுவும் அவளை விடாமல் துரத்த, எங்கும் ஒளிவதற்கு இடமில்லாமல், பூதேவி, ப்ருதுவிடமிருந்த ஸ்ரீஹரியையே சரணடைந்தாள். அப்போது ப்ருது, ஸ்வாயம்புமனுவை கன்றுக்குட்டியாக மாற்றி, எல்லா செல்வங்களையும், அந்த பசுவிடமிருந்து பால் மூலமாகக் கறந்து தன் மக்களுக்கு வழங்கினான். தேவர்கள், ரிஷிகள் ஆகிய அனைவரும் தங்களில் முக்கியமானவரை ஒரு கன்றுக்குட்டியாக மாற்றி, தமக்கு வேண்டியவற்றை பாலின் ரூபத்தில் பெற்றுக்கொண்டனர். பிறகு ப்ருது தன் அம்பு மூலமாகவே முன்பு ஏற்பட்ட பள்ளத்தை அடைத்தான். மக்கள் வசிப்பதற்காக ஊர், நகரம், புரம் இவற்றை அமைத்தான். இதனாலேயே, இந்த பூமிக்கு ப்ருதிவி என்னும் மிகப் பொருத்தமான பெயர் வந்து, பின் வழக்கத்திலும் புகழடைந்தது.

**கே: தன்னில் ஸ்ரீஹரியால் நிறைந்திருக்கிற ப்ருதுராஜன், மொத்த பூமண்டலத்தையே தனது அரசாட்சிக்குக் கீழ் கொண்டு வந்தான். ஸ்வர்க்க லோகத்தை ஏன் தனது அரசாட்சிக்குக் கீழ் கொண்டு வரவில்லை?**

ப: 100 அஸ்வமேத யாகங்களைச் செய்யவேண்டுமென்று சொல்லி, அதில் 99 யாகங்களை செய்து முடித்தான். 100வது அஸ்வதேத்தின் குதிரையை, இந்திரன் திரும்பத்திரும்ப அபகரித்தபோது, பிரம்மதேவரின் கட்டளையின்பேரில் ப்ருது யாகத்தை நிறுத்தினான். ஸ்வர்க்க லோகத்தை தன் ஆட்சிக்குக் கீழ் கொண்டு

வரும் நோக்கம், ப்ருதுவுக்கு இருக்கவில்லை. ஸ்ரீஹரியின் கட்டளைப்படி, இந்திரனிடம் நட்பு கொண்டு, தன் தியாக உணர்வை வெளிப்படுத்தினான்.

**கே: ப்ருதுராஜன் யாரிடமிருந்து உபதேசத்தைப் பெற்றான்?**

ப: மோட்சத்தின் பாதையைப் பற்றி சனத்குமாரரிடம் உபதேசம் பெற்றான். ஸ்ரீஹரியிடம் பக்தி, பொருட்களில் விரக்தி - இவ்விரண்டுமே மோட்சத்திற்கான பாதைகள் என்று அறிந்தான். ஹரிபக்தியை ஒரு படகாக மாற்றி, சம்சார சாகரத்தை அதிக சிரமமில்லாமல் ஒரு விளையாட்டாக கடந்தான்.

**கே: ப்ருதுராஜனிடம், ஸ்ரீஹரியின் ராஜராஜேஸ்வர என்னும் ரூபத்தின் ஆவேசம் இருக்கிறது என்று சொல்கிறார்கள். சிலர் ப்ருது ரூபத்தின் ஆவேசம் என்கிறார்கள். எது சரி?**

ப: இரண்டுமே சரியானவை ஆகும். ஸ்ரீஹரி ராஜராஜேஸ்வர ரூபத்தில், அனைத்து சக்ரவர்த்தி மற்றும் ராஜர்களிடம் நிறைந்திருக்கிறார். ப்ருதுவிடம் மட்டும் ப்ருது ரூபத்திலும் நிறைந்திருக்கிறார். ஒருவேளை, ராஜராஜேஸ்வர என்பதே ஆவேச அவதாரம் என்று நினைத்தால், அனைத்து சக்ரவர்த்திகளிடம் இது சாதாரணமாகவே காணப்படுவதால், ப்ருதுராஜன் ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரம் என்பது சரியல்ல என்றாகிவிடுகிறது. ஆகையால், ப்ருதுவிடம் மட்டும் ப்ருது நாமகனாக ஸ்ரீஹரி நிறைந்திருக்கிறான் என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: ப்ருது என்பது ஸ்ரீஹரியின் அவதாரம் என்பதற்கு என்ன ஆதாரம்?**

ப:
'அதாப்யுதாரஸ்ரவஸ: ப்ருதோர்ஹரே: கலாவதாரஸ்ய கதாம்ருதாத்ருதா:' - என்று ஸ்ரீஹரியின் அவதாரமே ப்ருது என்று பாகவதம் மிகத் தெளிவாகக் கூறுகிறது. மேலும், 'ஏஷ ஸாக்ஷாத்தரேரம்ஷோ ஜாதோ லோகரிரக்ஷயா' என்றும் பாகவதம் சொல்கிறது.

ஸ்ரீமதாசார்யரும் பாகவத தாத்பர்யத்தில், 'ப்ருது ஹைஹயாதிஷு ஜீவேஷ்வாவிஷ்டோ ஹரி: ஸ்வயம்', ப்ருது, கார்த்தவீர்யார்ஜுனன் ஆகியோர் ஸ்ரீஹரியின் ஆவேச-அவதாரங்களே என்று தெரிவிக்கிறார்.

**கே: துஷ்டனான வேனனிடமிருந்து சாத்விகனான ப்ருது மட்டும் எப்படி பிறந்தான்?**

ப: வேனனின் உடலில், சாத்வீக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று குணங்களும் இருந்தன. முதலில் ராஜஸ மற்றும் தாமஸ பாகங்களிலிருந்து நிஷாதன் என்னும் பாபாபிமானி பிறந்தான். பின்னர், சாத்விக பாகத்திலிருந்து ப்ருதுராஜன் பிறந்தான். இவனுடன் அர்ச்சி என்பவளும் ஸ்ரீலட்சுமியின் ஆவேசத்துடன் பிறந்தாள்.

**கே: அர்ச்சி என்பவள் யார்?**

ப: ஸ்ரீஹரியின் அம்சாவதாரமாக ப்ருது பிறந்தான். லட்சுமியின் அம்சாவதாரமாக அர்ச்சி பிறந்தாள். இவர்கள் இருவரும் மணம் புரிந்து, நல்லாட்சியைத் தந்தனர்.

**கே: ஸ்ரீஹரியின் ஆவேசாவதாரத்திற்கு லட்சுமி காரணம் ஆவது எப்படி சாத்தியம்?**

ப: ஸ்ரீஹரியின் ஆவேச அவதாரத்திற்கு லட்சுமியின் ஸ்வரூப அவதாரம்கூட காரணம் ஆவதில்லை. ஸ்ரீஹரி, லட்சுமி இருவருடையதும் ஆவேசாவதாரம் ஆன காரணத்தால், ஆவேசம் கொண்ட ஸ்ரீஹரிலட்சுமிக்கு மட்டுமே சங்கமம் சாத்தியம். ப்ருது-அர்ச்சி இருவரும் ஹரி-லட்சுமி இவர்களின் பக்தர்கள் அவ்வளவே. தத்வநிர்ணய என்னும் கிரந்தத்தில் இதைப்பற்றி சொல்லியிருப்பதாக, ஸ்ரீமதாசார்யர் நிர்ணயத்தில் சொல்லியிருக்கிறார்.

**கே: ப்ருது அவதாரம் சொல்லும் செய்தி என்ன?**

ப: 'ஸ்ரீஹரியே சர்வோத்தமன். அவனிடம் மட்டுமே பக்தி செய்யவேண்டும். பிரம்மஞானிகளிடம் அவர்களின் தாரதம்யத்தைப் பொறுத்து மரியாதை தரவேண்டும். சனாதன தர்மத்தை கடைபிடிக்க வேண்டும். இதற்காகவே நான் வாழவேண்டும்.'

இந்த தத்வத்திற்கேற்ப வாழ்ந்து நிரூபித்துக் காடியவர் ப்ருது சக்ரவர்த்தி. தன் தந்தைக்கு எதிராக, தன் தந்தையின் அதார்மிக பேச்சுகள் அனைத்தையும் மறுத்து, மக்களுக்கு வாழ்க்கைத் தத்வத்தை உபதேசித்தான். ஸ்ரீஹரியின் சனாதன தர்மத்திற்கு நம் முன்னோர்கள் யாரும் துரோகம் செய்திருந்தார்களேயானால், அவர்களின் பேச்சை மற்றும் அவர்களின் அதார்மிக செயல்களை நாமும் செய்யக்கூடாது. அத்தகையவர்களின் விருப்பத்திற்கு எதிராக நடந்தாலும், நீங்கள் பாவ கர்மங்கள் செய்யாதவர்களாக இருப்பீர்கள். மாறாக உங்கள் மூலமாகவே அவர்களும் நற்கதியை அடைவார்கள். 'அஹம் ப்ரம்மேதி வேனஸ்து த்யாயன்னாபாதரந்தம:' - இதி ஸ்ரீமதாசார்ய:' (இது ஸ்ரீமதாசார்யரின் வாக்கியம்).

***

## 39. ராஜராஜேஸ்வர - அம்ச-அவதாரம்

**கேள்வி: ராம கிருஷ்ணாதி ரூபங்களைப் போல், ராஜராஜேஸ்வர அவதாரத்தை ஸ்ரீஹரி எடுத்தார் என்று எங்கே சொல்லப்பட்டிருக்கிறது?**

பதில்: தனியாக அவதாரம் எடுக்கவில்லை. இது ஆவிஷ்டமான (ஒருவருக்குள் ஸ்ரீஹரியின் அம்சம் சிறப்பாக நிறைந்திருக்கும்) அவதாரம்.

**கே: இந்த அவதாரம் யாரிடம் தோன்றியது? எந்த காலத்தில் எடுக்கப்பட்ட அவதாரம் இது?**

ப: ஒரு குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட பெற்றோரிடம் நடந்தது என்று இந்த அவதாரத்தை சொல்லமுடியாது. 14 மன்வந்தரங்களில், எவ்வளவு சக்ரவர்த்திகள் இந்த பூமியில் வந்து ஆள்கின்றனரோ, அவர்களுக்கு சக்தி மற்றும் சாமர்த்தியத்தைக் கொடுக்கும் அவதாரமே ராஜராஜேஸ்வர என்னும் அவதாரம்.

**கே: அப்படியா? ஆகையால் எல்லா காலங்களிலும் நடைபெறும் அவதாரம்தானே இது?**

ப: ஆம். ஆனால் அத்தகைய ராஜன், ஹரிபக்தர் மற்றும் தர்மத்தைப் பின்பற்றுபவராக இருக்கவேண்டும்.

**கே: இந்த அவதாரத்தைப் பற்றி எங்கே சொல்லப்பட்டிருக்கிறது?**

ப: பாகவதத்தில் இரண்டாம் ஸ்கந்தத்தில், ஏழாவது அத்தியாயத்தில் இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

‘சக்ரம் ச திக்ஷ்வ விஹதம் தஷஸு ஸ்வதேஜோ
மன்வந்தரேஷு மனுவம்சதயோ பிபர்தி ।
துஷ்டேஷு ராஜஸு தமம் விதகத் ஸ்வகீர்திம்
ஸத்யே நிவிஷ்ட உஷதீம் ப்ரதமம்ஸ் சரித்ரை: ||

எல்லா மன்வந்தரங்களிலும் சக்ரவர்த்திகளில் நின்று துஷ்டர்களைக் கொன்று, சஜ்ஜனர்களைக் காப்பாற்றி, பத்து திசைகளிலும் நிலைகொண்டு சங்கு-சக்கரம்-கதை-பத்மம் ஆகியவற்றை ஏந்தி நிறைந்திருப்பவன் ஸ்ரீஹரியான ராஜராஜேஸ்வரன்.

**கே: ஸ்ரீமதாசார்யர் இந்த அவதாரத்தைப் பற்றி சொல்லியிருக்கிறாரா?**

ப: ஆம். பாகவத தாத்பர்யத்தில் சத்யசம்ஹிதா என்னும் கிரந்தத்தைப் பற்றி சொல்லி இவ்வாறு எழுதுகிறார்.

மன்வந்தரேஷு பகவான் சக்ரவர்தீஷு சம்ஸ்தித:
சதுர்புஜோ ஜுகோபைதத் துஷ்டராஜன்ய நாஷக: |
ராஜராஜேஸ்வரே த்யாஹுர்முனயஷ் சக்ரவர்தினாம்
வீர்யதம் பரமாத்மானாம் சங்கசக்ரகதாதரம் ||

நான்கு கரங்களில் சங்கு, சக்கரம், கதை, அபயங்களை ஏந்தியவாறு, ஸ்ரீஹரி, மன்வந்தரங்களில் துஷ்ட சக்ரவர்த்திகளைக் கொன்று, சஜ்ஜனர்களுக்கு அருள்வார். சக்ரவர்த்திகளிடம் இருக்கும் இந்த அவதாரத்தை அனைவரும் ராஜராஜேஸ்வர என்றே அழைக்கின்றனர்.

**கே: ப்ருது சக்ரவத்தியிடம் மட்டுமே இந்த ராஜராஜேஸ்வர அவதாரம் நடைபெற்றிருக்கிறது என்கிறார்களே? இது சரியா?**

ப: ப்ருது சக்ரவர்த்தியிடம்கூட ராஜராஜேஸ்வர என்னும் ரூபத்தின் ஆவேசம் இருக்கிறது. அதேபோல், ப்ரியவ்ரத முதலான அனைத்து சக்ரவர்த்திகளிடமும் இந்த ரூபம் உள்ளது. ப்ருது சக்ரவர்த்தியிடம், இது மட்டுமல்லாது, ‘ப்ருது’ என்னும் ஸ்ரீஹரியின் அம்ச-அவதாரமும் உள்ளது.

**கே: ராஜராஜேஸ்வர என்னும் ஸ்ரீஹரியின் ரூபத்தை எப்படி நினைக்கவேண்டும்?**

ப: மொத்த பூமண்டலத்தையும், ஸ்ருஷ்டி முதல் பிரளய காலம் வரை, காக்கும் பொறுப்பு இந்த ரூபத்திற்கு உண்டு. ஒவ்வொரு நொடியும் நம் அனைவரையும் பாதுகாத்துக் கொண்டிருக்கும் இந்த ரூபத்தை நாம் போற்றிப் பாடவேண்டும். அனைவரும் இந்த ரூபத்தை பக்தியுடன் வணங்கவேண்டும்.

***

# 40. பலராம - அம்ச-அவதாரம்

**கேள்வி: பலராமனின் கதையை சுருக்கமாகச் சொல்லுங்கள்.**

பதில்: பூமியின் பாரத்தைக் குறைக்கவேண்டி பூதேவி பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீஹரியை பல்வேறு ஸ்தோத்திரங்களால் வணங்கினாள். அவளின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீமன் நாராயணன், பலராமன் மற்றும் கிருஷ்ண அவதாரங்களை எடுத்தார்.

தேவகியிடம் ஸ்ரீகிருஷ்ண அவதாரம் நடப்பதற்கு முன்னர், பலராம அவதாரம் ஆயிற்று. வசுதேவனின் மனைவிகளான தேவகி மற்றும் ரோகிணி இவர்கள் இருவரும் மூன்று மாத கர்ப்பிணிகளாக இருந்தனர். ஸ்ரீஹரியின் ஆணைப்படியே, துர்காதேவி, தேவகியின் கர்ப்பத்தில் இருந்த பலராமனை, ரோகிணியின் கர்ப்பத்திற்கு மாற்றினாள். மஹா சேஷனே பலராமன். தேவகிக்கு கர்ப்பம் கலைந்துவிட்டது என்ற பேச்சு பரவியது. எட்டாவது குழந்தையாக கிருஷ்ணாவதாரம் நடந்தது. பலராமனிடத்தில் ஸ்ரீஹரியின் 'சுக்லகேஷ' ஆவேசம் மட்டும் இருந்தது. ஆகையால் இது ஸ்ரீஹரியின் ஸ்வரூப அவதாரம் கிடையாது. ஆவேச அவதாரம் மட்டுமே. ஸ்ரீகிருஷ்ணனின் அனைத்து பால லீலைகளின்போதும் கூடவே இருந்தவர் பலராமன். ரைவதனின் மகளான ரேவதியை மணம் புரிந்தார். பிறகு, கிருஷ்ணன் ருக்மிணியை மணம் புரிந்துகொண்டார். ருக்மிணியின் தம்பியான ருக்மி ஒரு துஷ்டனானதால், பலராமனே இவனைக் கொல்லவேண்டியதாக இருந்தது.

பீமன் மற்றும் துர்யோதனனுக்கு கதாயுதத்தைக் கற்றுக் கொடுத்து அவர்களுக்கு குரு ஆனார் பலராமர். குருக்ஷேத்திரப் போர் துவங்கும்முன், தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டு, நைமிஷாரண்யத்தில் ஹரிகதை சொல்லிக்கொண்டிருந்த ரோமஹர்ஷணன், தனக்கு மரியாதை கொடுக்கவில்லையென்று கோபப்பட்டு, தர்ப்பையினாலேயே அவனைக் கொன்றார்.

தீர்த்தயாத்திரையிலிருந்து திரும்பி வந்தபோது, துர்யோதனன் தொடை முறிந்து கீழே விழுந்திருந்தான். ஸ்ரீகிருஷ்ணனின் மனதை அறியாமல், பலராமன், பீமன் மேல் போர் புரியத் தயாரானார். முந்தைய பிறவியில் லட்சுமணனாகப் பிறந்து தன் அண்ணனுக்கு செய்த சேவையினால் கிடைத்த அதிகப் புண்ணியத்தை, தற்போது இப்படி அடிக்கடி செய்து குறைத்துக்கொண்டார்.

யாதவர்கள் தங்களுக்குள் ஒருவரையொருவர் அடித்துக் கொல்லும்போது, பாம்பு உருவத்தில் கடலில் பிரவேசித்து தன்னுடைய அவதாரத்தை முடித்துக் கொண்டார் பலராமன்.

**கே: தசாவதாரத்தில் புத்தனுக்குப் பதில் பலராமனை சிலர் சேர்க்கின்றனர். இது சரியா?**

ப: பலராமன் ஸ்ரீஹரியின் ஸ்வரூப அவதாரம் அல்ல. இது ஆவேச அவதாரம் மட்டுமே. ஆகையால் தசாவதாரத்தில் இவரை சேர்க்கக்கூடாது. ஸ்ரீஹரி, ராமனாக இருந்தபோது லட்சுமணன், அண்ணனுக்கு அபாரமான சேவை செய்தார். தன் யோக்யதைக்கு மீறிய புண்ணியத்தை சம்பாதித்தார். அதை சரி செய்வதற்காக, ஸ்ரீஹரி, இவரை தன் அண்ணனாகப் பிறப்பாய் என்று சொல்லி கிருஷ்ணாவதாரத்தில் பிறக்கச் செய்தார். இதனால் தன் அதிகமான புண்ணியத்தை சரிசெய்துகொண்ட பலராமனின் கதை மிகவும் சுவாரசியமானது. சாத்வீகர்கள் சில சமயம் தவறுகளைச் செய்யும்போது, இதனால் அவர்கள் பாபிகளாகின்றனர் என்று சொல்லமுடியாது. அவர்களுடைய அதிகமான புண்ணியத்தை குறைப்பதற்காகவே ஸ்ரீஹரி அவர்களின் மூலம் இப்படிச் செய்கிறார் என்று பலராம அவதாரத்தின் மூலம் தெரிந்துகொள்ளலாம்.

## பிற்சேர்க்கை:

கே: கார்த்தவீர்யார்ஜுன அவதாரத்தைப் பற்றி சொல்வீரா?

ப: கார்த்தவீர்யார்ஜுன அவதாரத்தைப் பற்றி நினைப்பது மிகவும் அவசியம். வீடுகளில் சிறிய பொருட்கள் சில தொலைந்து போன சமயத்தில், கார்த்தவீர்யார்ஜுனனை நினைத்துக் கொள்வது வழக்கமாக உள்ளது. நிரந்தரமான சுகத்தை நாம் தொலைத்துவிட்டு அதை தேடவேண்டும் என்ற சாக்கில் கார்த்தவீர்யார்ஜுனனை நினைக்கும் புதிய வழக்கம் வரவேண்டும். ஒருமுறை அக்னி, கார்த்தவீர்யார்ஜுனனிடம் வந்து, 'மிகவும் பசிக்கிறது. பிட்சை போடு' என்ற கேட்டபோது, மொத்த பூமியையே தானமாக கொடுத்த கார்த்தவீர்யார்ஜுனன், நாம் நினைத்த நேரத்தில் வருவார். நிரந்தர சுகத்தைத் தராமல் இருக்கமாட்டார். ஆகையால், ஹைஹய ராஜனிடம், கார்த்தவீர்யார்ஜுனனாக இருக்கும் இந்த ஸ்ரீஹரியின் ஆவேச அவதாரத்தை என்றென்றும் நினைப்போமாக.

***

# முடிவுரை

பரமாத்மனே சததமேக ரூபிணே
தசரூபிணே ஷதசஹஸ்ர ரூபிணே ।
அவிகாரிணே ஸ்புடமனந்த ரூபிணே
சுகசித் சமஸ்ததனவே நமோ நம: ॥

இதுவே ஸ்ரீமதாசார்யரின் வேண்டுதலின் சிறப்பு. ஸ்ரீஹரியானவர் தனது 10, 100, 1000 ஆகிய ரூபங்களை, அவதாரங்களை தனது லீலைகளின் மூலம் வெளிப்படுத்துகிறார். மூலரூபம் ஒன்றிலிருந்தே அனைத்து செயல்களையும் செய்ய வல்லவராக இருந்தாலும், பற்பல ரூப-அவதாரங்களை எடுத்திருப்பது அவரின் சிறப்பு மகிமையாகும். அனைத்து அவதாரங்களும் - எல்லா காலங்களிலும் எப்போதும் இருப்பவை; மூலரூபத்திற்கும் அவதாரங்களுக்கும் எந்தவித வேறுபாடுகளும் இல்லை; ஸ்ரீஹரிக்கும் அவரது உறுப்புகளுக்கும் எந்தவித வேறுபாடுகளும் இல்லை; என்று அறியவேண்டும்.

இத்தகைய ரகசியங்களை சொல்லிக்கொடுத்து, அனைவரைவிடவும் அதிகமாக ஸ்ரீஹரியின் சிறப்புகளை சிந்தனை செய்து பூஜித்தவர் ஸ்ரீமதாசார்யர். ஸ்ரீஹரியைக் குறித்த அதிகமான நல்ல ஞானத்தை பெற்றுக்கொள்வதை விஞ்ஞானம் என்கிறார். விஞ்ஞானம் = வி-ஞானம் = விசேஷமான ஞானம். ஸ்ரீஹரியே அனைவரையும் படைத்தவர் என்று பொதுவாக அறிவது சாதாரண ஞானம். அவரது ரூபங்கள், அவதாரங்கள், அவற்றின் சிறப்பு இவற்றையெல்லாம் நன்கு அறிவது புண்ணியத்தை தேடித்தரும் செயல். மோட்சத்தையும் அளிக்கும் செயலாகும்.

சாஸ்திரங்களை, ஸ்ரீமதாசார்யர் இயற்றியுள்ள நிர்ணயங்களின்படி அவதாரம், அம்சம், ஆவேசங்கள் இங்கு விளக்கப்பட்டிருக்கிறது. பகவத் தத்வங்கள் எவ்வளவு அறிந்தாலும் போதாது. மேற்சொன்னவைகளில் தவறு இருந்தாலோ, சந்தேகம் வந்தாலோ, கற்றறிந்தவர்களிடம் கேட்டுத் தெளிந்து கொள்ளவேண்டும்.

ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள் மற்றும் இருக்கும் பற்பல அவதாரங்களும் நமக்கு அருளி, நம்மை மத்வ சித்தாந்தத்தில் நடத்தி காப்பாற்றட்டும் என்று குர்வந்தர்கத ஸ்ரீமன் நாராயணனை பக்திபூர்வமாக சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து வேண்டிக்கொள்கிறேன்.

## ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

# வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்
# இதுவரை எழுதியுள்ள புத்தக விவரங்கள்

| # | புத்தகத்தின் பெயர் | பாகங்கள் | பக்கங்கள் |
|---|---|---|---|
| 1. | சுதாசௌரப | 7 | 7,000 |
| 2. | பரிபூர்ண சந்திரிகா (15க்கும் அதிக புத்தகங்களின் தொகுப்பு) | 12 | 11,000 |
| 3. | தத்வப்ரகாஷிகா பாவதீப | 11 | 8158 |
| 4. | தர்க்கதாண்டவ விஷ்வரூப | 2 | 1500 |
| 5. | மகாபாரத கிருஹொத்திகெகளு (கையேடுகள்) | 10 | 600 |
| 6. | மிஞ்சின மார்க்க (மின்னல் வழி) | 1 | 200 |
| 7. | பரிமள விசேஷாத்யயன | 2 | 1408 |
| 8. | ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள் | 1 | 324 |


பெம்மத்தி வெங்கடேஷாச்சார்
#4271, கிருஷ்ணா சாலை
சீதா சர்க்கிள் அருகில்
கிரி நகர், பெங்களூரு 85
கைப்பேசி: 91414-95120